

# ருசிமிக்க சாப்பாட்டை தயாரித்திருந்தேன்... எப்படி என்று எனக்கே தெரியவில்லை!

என்றும்போல்தான் சாப்பாட்டு வேளையில் இன்றும் அமளி. எல்லோரும் ஒருவாறாக அமர்ந்ததும் சாப்பாட்டைப் பரிமாறினேன். அப்போதுதான் ஒரு அதிசயம் நடந்தது. ஒரே நிசப்தம். ஒரு சாப்பாட்டுப் போட்டி நடப்பதுபோலிருந்தது. இத்தகைய மாறுதலேற்பட நான் என்னதான் செய்தேன்!

என் கணவரும் குழந்தைகளும் எப்பொழுதுமே என் சமையலில் குற்றம் கண்டுபிடிப்பார்கள். இன்று ஏனோ ஒருவரும் ஒரு வார்த்தைகூட பேசவில்லை. சாப்பாட்டிற்கு பிறகு காலையில் என்ன சாமான்கள் வாங்கினேன் என்று நினைத்துப்பார்த்தேன். அதே காய்கறிகள்தான் ... அதே பருப்பு, உப்புத்தான் ... ஹாம்! ஞாபகத்துக்கு வந்து விட்டது. புதிதாக ஒன்று வாங்கத்தான் செய்தேன்!

அன்று காலையில்தான் டால்டா வனஸ்பதி உபயோகித்துப் பார்க்கலாம் என்று திட்டமிட்டேன். கடைக்காரர் பொரிக்கவும், வறுக்கவும், தித்திப்புப் பண்டம் தயாரிக்கவும் ஏற்ற சிறந்த தாவரக் கொழுப்பு என்று அதை சிபார்சு செய்தார். அவர் டால்டா டின் ஒன்றை தந்தவாறு, "உணவின் இயற்கை ருசியை இது பரிமளிக்கச் செய்கிறது. அதனால் உங்கள் வீட்டில் எல்லோரும் சாப்பாட்டை ரசிப்பார்கள்" என்றார்.

ஆம். இந்த மாறுதலுக்குக் காரணம் கட்டாயம் டால்டா வனஸ்பதியில் சமைத்ததுதான். அது எல்லாவித சமையல்களுக்கும் சிறந்தது. அன்றியும் ஞாபகமிருக்கட்டும்—சமையல் கொழுப்பை சில்லறையாக கடையில் வாங்குவது ஆரோக்கியத்திற்கு கெடுதல் விளைவிக்கலாம். மிகவும் விலையுயர்ந்த கொழுப்பும் கலப்படமாகவும், ஈ, அழுக்கு இவைகள் காரணமாக அசுத்தமானதாகவுமிருக்கலாம். காற்றுப்புகாத சீல்செய்த டின்னில் கிடைக்கும் டால்டா வனஸ்பதி எப்பொழுதும் புத்தம் புதிதாகவும், சுத்தமாகவும், ஆரோக்கியமளிப்பதாகவுமிருக்கிறது. மேலும் இது லாபகரமானது. மறுமுறை சாமான்கள் வாங்க கடைக்குச் செல்லும்பொழுது டால்டா வனஸ்பதியை உங்கள் ஜாபிதாவின் முதலில் குறித்துக்கொள்ளுங்கள்!

10, 5, 2, 1, ½ பவுண்டு டின்களில் கிடைக்கிறது.
டால்டா வனஸ்பதியில் இப்பொழுது விடமின் 'ஏ', 'டி' இருக்கிறது.

ஊட்டமளிக்கும் உணவை உங்கள் குடும்பத்தினருக்கு அளியுங்கள்.

இலவச ஆலோசனைகளுக்கு இன்றே எழுதுங்கள்:
தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்
தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1



மர அடையாளமுள்ள டின்னைப் பார்த்து வாங்குங்கள்.

# டால்டா வனஸ்பதி

சிறந்த சமையல் — குறைந்த செலவு

HVM. 218-50 TM

# கல்கி பொருளடக்கம்


மலர் 14
இதழ் 17

1954 நவம்பர் 21

ஜய ௵ கார்த்திகை 6




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

# சருமப் பாதுகாப்பு..

"சால்முக்ரா" எண்ணெய் சேர்ந்த காவேரி சூபர் சோப் சருமப் பாதுகாப்பு அளிப்பதில் நிகரற்றது. சுகாதாரத்திற்கு இன்றியமையாதது. புத்துணர்ச்சி அளிக்க வல்லது.

காவேரி சூபர் சோப் அடக்கமான சைஸில் கிடைக்கிறது.

விலை நயமானது – ஒரு சோப் நாலே அணாதான்!




## காவேரி சூபர் சோப்

தயாரிப்பாளர்: மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை R. S. :: சேலம் ஜில்லா
மானேஜிங் ஏஜெண்டுகள்: சேஷசாயி பிரதர்ஸ் லிமிடெட்



மலர் 14 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 17

# வாழ்க நேரு! வாழ்க சோஷலிஸம்!

நமது அருமைப் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேருவுக்கு அறுபத்து நாலு வயது பூர்த்தியாகி யிருக்கிறது. இந்த மங்கள நிகழ்ச்சியை யொட்டி உலகெங்கு மிருந்து நேருஜிக்கு வாழ்த்துக்கள் வந்து குவிந்து இமயமலையுடன் போட்டியிடுகின்றன.

இந்த மகோன்னதமான வாழ்த்துக் குவியலிலே நமது மனப்பூர்வமான வாழ்த்துரையையும் சமர்ப்பித்து மகிழ்கிறோம்.

மாந்தருள் மாணிக்கமாகிய நேருஜி இன்று பாரதத்தாயின் மணி மகுடத்தில் ஒளிரும் ரத்தினங்களில் சிறந்த சிரோரத்தினமாக விளங்குகிறார்.

இன்னும் நமது தலைவர் நேரு, மாநிலத்தின் சமாதான தூதராகவும், மேனாட்டு இராஜ தந்திரிகளின் நிரந்தரத் தலைவலியாகவும், ஆசிய நாட்டு இராஜதந்திரிகளின் தலைவலிக்கு அமிருதாஞ்சனமாகவும், அமெரிக்காவின் உலகாதிக்கப் பாதையில் ஒரு பெரிய நெறிஞ்சு முள்ளாகவும், ஸோவியத் ருஷியாவைத் திகைக்க வைக்கும் ஒரு பெரிய பிரச்னையாகவும், செஞ்சீனாவுடன் கொஞ்சிக் குலாவக் கூடிய தோழராகவும், பாகிஸ்தான் இராஜ தந்திரிகளின் பேராசை வானத்தில் திகில் விளைக்கும் ஒரு தூமகேதுவாகவும், இந்திய சோஷலிஸ்டுகளின் வீரியம் குன்றிய மாஜி முத்தண்ணாவாகவும், இந்தியக் கம்யூனிஸ்டுகளுக்குத் திட்டுவதா வாழ்த்துவதா என்று தெரியாமல் திணறச் செய்யும் தர்ம சங்கடமாகவும், ஹிந்து சபை-ஜனசங்கம் முதலிய வகுப்புவாதிகளுக்கு வேதனைதரும் உற்பாதமாகவும், திராவிடக் கழகத்தாருக்கு அயோத்தி ராமனுக்குப் பிற்பாடு இராவண குலத்துத் தமிழர்களைப் பூண்டோடு அழிக்க வரும் ஆரிய பூதமாகவும், இந்தியாவின் மற்றப் பொது மக்களுக்கெல்லாம் தங்கள் இருண்ட வாழ்க்கையில் வருங்கால நம்பிக்கையை ஊட்டி ஒளி வீசிப் பிரகாசிக்கும் ஜோதி மயமான நட்சத்திரமாகவும் விளங்கி வருகிறார்.

செஞ்சீனாவுக்குப் பறந்து சென்று மாஸே துங், சௌ என் லாய் முதலிய மாபெரும் சீனத் தலைவர்களின் நெஞ்சைக் கவர்ந்து கொண்டு திரும்பி வந்த பின்னர், நேருஜி பல சொற்பொழிவுகள் ஆற்றியிருக்கிறார்; பல அறிக்கைகள் விடுத்திருக்கிறார்; பத்திரிகை நிருபர்களிடம் பல விஷயங்கள் சொல்லி யிருக்கிறார்.

அவற்றுள் எல்லாம் மிக முக்கியமானது நவம்பர் மாதம் 9-ந் தேதி புது டில்லியில் கூடிய தேசிய அபிவிருத்திச் சங்கத்தின் முன்னால் நேருஜி இரண்டாவது ஐந்து வருஷத் திட்டம் பற்றிப் பேசிய அருமையான பேச்சேயாகும்.

அந்தப் பேச்சில் நேருஜி தமது உள்ளத்தில் வெகு காலமாகக் குடிகொண்டுள்ள ஸோஷலிஸ இலட்சியத்தைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார். சில சமயம் அந்த இலட்சியம் சிறிது மங்கியிருப்பதாகத் தோன்றினாலும், அது அவர் உள்ளத்திலிருந்து அடியோடு அகன்று விடவில்லை யென்று தெரியப்படுத்தி யிருக்கிறார்.

"தேச முன்னேற்றத்துக்காகத் திட்டங்களை வகுக்கும் போது, எந்த இலட்சியத்தை அடையும் பொருட்டு நாம் திட்டம் போடுகிறோம் என்பதைத் தெளிவாக நிச்சயித்துக் கொள்ள வேண்டும். என் மனத்திலுள்ள இலட்சிய சித்திரம், சோஷலிஸத்தை அடிப்படையாகக் கொண்ட சமுதாய அமைப்புத்தான். இதில் சிறிதும் சந்தேகமில்லை. பொருள் உற்பத்தி சாதனங்களெல்லாம் சமுதாயத்துக்குப் பொது உடைமையாயிருக்க வேண்டும்; சமுதாயத்தின் பொது நலத்துக்காகவே அவற்றை உபயோகப் படுத்தவேண்டும்......"

பண்டித நேருவின் அகக் கண்முன் தோன்றும் இந்த இலட்சிய சமுதாய சித்திரமே பாரத நாட்டில் பெரும்பாலான மக்களின் உள்ளத்திலும் குடிகொண்டிருக்கிறது. ஆதலின் நேருஜி இந்திய மக்களின் உள்ளத்தை அறிந்த உண்மையான பிரதிநிதியாக விளங்குகிறார் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

இலட்சியத்தைக் காரியத்தில் நிறைவேற்றும் பாதையில் எத்தனையோ இடைஞ்சல்களும் முட்டுக்கட்டைகளும் இருக்கின்றன. அவற்றை நம்மைப் போலவே நேருஜியும் அறிந்







# கார்ட்டூன் கதம்பம்

ரஜி










பாகிஸ்தான் அ.நி. சபைத் தலைவர்


பாகிஸ்தான் சர்க்கார் மீது மாஜி பாகிஸ்தான் அ.நி. சபைத் தலைவர் வழக்குத் தொடுத்திருக்கிறார்!
சிந்து நீதி மன்றம்


பதவி நீக்க உத்தரவு
குலாம் மொகம்மது


அன்பு நிறைந்த தாய்மார்கள்!
பி. சோ. கட்சித் தலைவர்கள்
சோஷலிஸம்
தாய்மார்களின் அன்பில் சிறிதும் சந்தேகமில்லை. ஆனால் அவர்கள் செய்யும் காரியங்களினால் குழந்தையின் பாடு திண்டாட்டமாயிருக்கிறது!


ஜனசங்கத்தின் தலைவர் தம்முடைய கட்சிக்குள் பிளவு கிடையாது என்கிறார்!
எங்கள் கட்சியில்
ஜனசங்கம்


ஆந்திரக் கட்சிகளின் நிலைமையைப் பார்த்தால், ஆந்திராவில் மூன்று வருஷங்களுக்கு மந்திரி சபை இராதோ என்று தோன்றுகிறது!
மந்திரி சபை

திருக்கிறார். அவர் சகாக்களை மூட்டுக்கட்டை போடுகிறார்கள் என்றால், அது நம்மைக் காட்டிலும் அவருக்குத்தானே நன்கு தெரிந்திருக்கும்!

"சொந்தத்துக்குப் பொருள் தேடுவதைக் குறிக்கோளாகக் கொண்ட சமுதாய அமைப்பு, தற்கால உலக நிலைமைக்குச் சிறிதும் பொருந்தாதது" என்று நேருஜி மேலும் தம் கருத்தைத் தெளிவாக விளக்கி யிருக்கிறார்.

உலக நிலைமையை முன்னிட்டுப் பார்த்தாலும், உள்நாட்டு நிலைமையை முன்னிட்டுப் பார்த்தாலும், சொந்த லாபக் குறிக்கோள் மறைந்து, சமுதாய லாபக் குறிக்கோள் நிலைபெறுவது மிகவும் அவசியமாகும். இந்திய மக்களின் முன்னேற்றமும், உலகின் சமாதானமும் இந்தக் குறிக்கோளையே பொறுத்திருக்கிறது.

சொந்த லாப நோக்கத்துடன் முதலாளிமார்கள் பெருந் தொழில்களில் ஆதிக்கம் வகித்து நடத்துவதற்கு அனுமதிக்கப்பட் டிருக்கும் வரையில், பொது மக்களின் உள்ளத்தில் உழைக்கும் ஊக்கம் பொங்கிப் பெருகாது. அத்தகைய ஊக்கம் உண்டாகும் வரையில் தேச முன்னேற்றமும் ஊர்ந்து போய்க் கொண்டுதா னிருக்கும்.

இதை நேருஜி நன்கு அறிந்திருக்கிறார் என்று தெரிவதால், நாமும் நம்பிக்கையுடன் இருக்கலாம். தொழில் துறையில் சொந்த லாபக் குறிக்கோளை ஒழிக்கவும், பொதுநலக் குறிக்கோளை வளர்த்து நிலைபெறச் செய்யவும் நேருஜி தீவிரப் பிரயத்தனம் செய்வார் என்று எதிர்பார்க்கலாம்.

நேருஜி தமது வாழ்நாளிலேயே பாரத நாட்டில் சோஷலிஸ சமுதாயத்தை அமைத்துக் கண்ணால் கண்டு களிக்கும் பாக்கியத்தைப் பெறுமாறு ஆண்டவன் அருள் புரிவாராக.

அந்த இலட்சிய சமுதாயம் அவ்வளவு துரித காலத்தில் அமைந்துவிடும் என்று தோன்றவில்லை யாதலால், இலட்சியத்தைக் காரியத்தில் நடத்திக் காட்டும் பொருட்டு நேருஜிக்கு நீண்ட, நெடிய, தீர்க்கமான வாழ்நாளை இறைவன் அருள வேண்டுமென்று பிரார்த்திப்போமாக.

# முப்பத்திரண்டுக்கு மேலே ஒன்று

இலட்சிய மனிதருக்கு முப்பத்திரண்டு சிறந்த பண்புகள் இருக்க வேண்டும் என்று சொல்லுவதுண்டு. அந்த முப்பத்திரண்டு பண்புகளும் யாவை என்பது பற்றி நாம் இப்போது ஆராய வேண்டியதில்லை. இராமர், கிருஷ்ணர் முதலிய இதிகாச புருஷர்களிடமும், அசோகர், விக்கிரமாதித்தர் முதலிய சரித்திர நாயகர்களிடமும் அந்த முப்பத்திரண்டு குணங்களும் பொருந்தி யிருந்தன வென்று சொல்லப்பட் டிருக்கிறது.

நம் பிரதமர் நேரு இந்தக் காலத்துச் சரித்திர நாயகர்களில் தலைசிறந்த ஒருவராதலால், அவரிடமும் அந்த முப்பத்திரண்டு பண்புகளும் குடிகொண்டிருக்க வேண்டுமென்பதில் சந்தேகமில்லை.

ஆனால் அந்த முப்பத்திரண்டுக்கு மேலே இன்னொரு அரும் பெரும் சிறப்புப் பண்பையும் நேருஜியிடம் காண்கிறோம்.

தம்முடைய குறைகளையோ, தம் அரசாங்க நிர்வாகத்திலுள்ள குறைகளையோ மற்றவர்கள் சொல்லுவதற்கு முன்னால் அவரே 'சொல்லிக் கொண்டு' விடுகிறார்! புதிதாக என்ன குறை சொல்லுவது என்று தெரியாமல் எதிர்ப்பாளர்கள் விழிக்க வேண்டியதா யிருக்கிறது!

மேற்கூறிய பிரசங்கத்திலேயே நேருஜி நம் நாட்டுக் கல்வி முறையைப் பற்றிப் பின்வருமாறு பேசி யிருக்கிறார்:—

"சீன நாட்டுச் சர்வ கலாசாலையில் படித்து வரும் ஒவ்வொரு மாணவனும் ஏதேனும் ஒரு தொழிலுக்குப் பயிற்சி பெறுகிறான். வெளியில் வந்தவுடனே அத் தொழிலைச் செய்யத் தொடங்குகிறான். அதற்கு நேர்மாறான நிலைமை இந்த நாட்டில் குடிகொண் டிருப்பதைக் காண்கிறோம். நம் சர்வ கலாசாலைகளிலிருந்து ஏராளமான இளைஞர்கள் வெளிவந்துகொண் டிருக்கிறார்கள். வெளி வந்த பிறகு செய்வதற்கு வேலை கிடைக்காமல் விழித்துக் கொண்டிருக்கிறார்கள்."

நம் நாட்டுக் கல்வி முறை 'மட்டத்திலும் மட்டமானது' என்றும், 'முற்றிலும் பயனற்றது' என்றும் நேருஜி முன்னரும் பல தடவை சொல்லி யிருக்கிறார். ஆயினும், இந்தக் கல்வி முறையை மாற்றி அமைக்க அவர் ஏன் பிரயத்தனப்படவில்லை! அரசாங்க நிர்வாகத்தில் அவருக்கு உதவி செய்யும் சகாக்கள் அவ்வளவு திவ்யமாக அமைந்திருக்கிறார்கள்! நேருஜி ஒருவராக, எவ்வளவு காரியங்களைத்தான் செய்துவிட முடியும்!

# ஆறும் நாலும் பத்தா? ஏழும் மூன்றும் பத்தா?

சென்ற வாரத்தில் நம் ஜனாதிபதி இராஜேந்திர பிரஸாத் அவர்களும் நமது கல்வி முறையைப் பற்றி ஒரு குரல் 'ஓ' வென்று அலறி அழுதிருக்கிறார்கள்! "சுதந்திரம் வந்து ஏழு ஆண்டுகள் ஆகி விட்டனவே! இன்னும் நமது கல்வி முறையில் மட்டும் ஒரு மாறுதலும் இல்லாம லிருக்கிறதே! ஆரம்பக் கல்வி முதல் கலாசாலைக் கல்வி வரையில் பிரிட்டிஷார் ஏற்படுத்திக் கொடுத்த கல்வி முறையையே இன்னும் கட்டிக்கொண்டு அழுகிறோமே!" என்று பரிதவித்துப் புலம்பி யிருக்கிறார். இந்த முக்கிய விஷயத்தைப் பற்றி அவசரமாக ஆலோசித்துத் தக்க மாறுதல்களைச் செய்யும்படி கல்வித் துறையில் சம்பந்தமுள்ள அனைவரையும் வேண்டிக் கொண்டிருக்கிறார்.

ஜனாதிபதி செய்யும் தவறு, பண்டித நேரு செய்யும் தவறு, எல்லாம் இதுதான்:— கல்வி முறையை மாற்றுவதற்குக் கல்வி இலாகா சம்பந்த முள்ளவர்களை நம்பி யிருப்பதுதான்!

கல்வித் துறை நிபுணர்களைக் கொண்ட கமிஷன்களும் கமிட்டிகளும் மகாநாடுகளும் சபைகளும் இது வரை எத்தனையோ நடந்திருக்கின்றன; சிபார்சுகளும் செய்திருக்கின்றன. அந்தச் சிபார்சுகளுக்கெல்லாம் உதாரணமாகச் சொல்லக் கூடிய சிபார்சு ஒன்று சென்ற மாதத்தில் வெளியாயிற்று.

நமது ஹைஸ்கூல் கல்வி முறையில் சீர்திருத்தம் ஏதேனும் தேவையா என்பதை ஆராய்ந்து சொல்வதற்காக ஏற்படுத்தப்பட்ட அந்தக் கல்வி நிபுணர்கள் அடங்கிய கமிஷன்,

"ஆறும் நாலும் பத்து என்று
வைத்துக் கொள்ளலாமா? —அல்லது
ஏழும் மூன்றும் பத்து என்று
வைத்துக் கொள்ளலாமா?"

என்னும் மகத்தான பிரச்னையை எடுத்துக் கொண்டு அலசி ஆராய்ந்தது. இந்த ஆராய்ச்சிக்காகக் கமிஷன் அங்கத்தினர்கள் நீள நெடுகப் பிரயாணம் செய்தனர்; வேறு பல கல்வி நிபுணர்களின் கருத்தைக் கேட்டறிந்தனர்; லட்சக்கணக்கான ரூபாய் செலவுசெய்தனர்; முடிவில் வெகு நீளமான அறிக்கையைத் தயாரித்து வெளியிட்டனர்.

"ஏழும் மூன்றும் பத்து என்று
வைத்துக் கொள்வதே உத்தமம்!"

என்பது அவர்களுடைய சிபார்சின் சாராம்சம்.

இப்போதெல்லாம் ஹைஸ்கூலில் ஆறு வருஷம் படித்து எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையில் தேறிய பிறகு, கலாசாலையில் சேர்ந்து நாலு வருஷம் படித்து பி. ஏ. பரீட்சை தேற வேண்டும் என்று இருக்கிறதல்லவா!

ஹைஸ்கூல் படிப்பை ஏழு வருஷம் ஆக்கிவிட்டு, கலாசாலைப் படிப்பை மூன்று வருஷமாகச் செய்து விட வேண்டும் என்று கல்வித்துறையில் கரை கண்ட நிபுணர்கள் சிபார்சு செய்திருக்கிறார்கள்.

இத்தனை காலமாக ஆறும் நாலும் பத்து என்று இருந்ததில் என்ன குறைந்து போயிற்று! ஏழும் மூன்றும் பத்து என்று மாற்றி விடுவதால் என்ன பெரிய நன்மை வந்துவிடப் போகிறது! இதற்கு ஒரு கமிஷனா! விசாரணையா! இதற்குப் பணச் செலவா! இதுவும் ஒரு மாறுதலா!—என்று குறுக்கே கேட்டு விடாதீர்கள்.

அதற்கு மேலே நடந்திருப்பதையும் கேளுங்கள். சிபார்சு வெளியானவுடனே உயர்தரப் பள்ளிகளை நடத்தும் நிர்வாகிகளும் தலைமை ஆசிரியர்களும், "ஆறு வருஷம் படித்த மாணவர்களை ஏழாவது வருஷமும் வைத்துக் கொள்ள வேண்டுமென்றால், அதற்குப் பள்ளிக்கூடத்தில் இடம் எங்கே! ஆசிரியர்கள் எங்கே! செலவுக்குப் பணம் எங்கே!" என்று கேட்டார்கள்.

உடனே மாகாண நிதி மந்திரிகளுக்குப் பயம் வந்து விட்டது, "எங்களைப் பணம் மட்டும் கேட்காதீர்கள்! இந்தச் சிபார்சை அமுலாக்குவதற்காக அதிகப்படி பணம் செலவழிக்க முடியாது!" என்று சொன்னார்கள்.

கடைசியாக முடிவு ஏற்பட்டது என்னவென்றால், "சௌகரியப்பட்ட பள்ளிக்கூடங்களில் ஏழு வகுப்புகள் நடத்தலாம்; சௌகரியப்படாவிட்டால் ஆறு வகுப்புகளை நடத்தலாம். ஏழு வருஷம் படித்து விட்டு வருகிறவர்களுக்குக் கலாசாலைகளில் மூன்று வருஷம் கல்வி போதித்தால் போதுமானது; ஆறு வருஷம் படித்து வருகிறவர்களுக்கு முன்போல் கலாசாலையில் நாலு வருஷக் கல்வியே அளிக்கலாம்!" என்பதுதான்.

இங்கே ஒரு வருஷம் கூட்டினால் என்ன! அங்கே ஒரு வருஷம் குறைத்தால் என்ன! கூட்டிக் குறைக்காமல் இப்போது இருப்பது போல் இருந்தால்தான் என்ன! இதெல்லாம் கல்வித் துறையின் சீர்திருத்தமா! இந்தக் கவைக்குதவாத சீர்திருத்த யோசனைக்காக இவ்வளவு வாதப்பிரதிவாதமா! ஆலோசனை புனராலோசனையா!

கதையில் சொல்லப்படுகிற 'கற்றறி மூடர்' கூட்டத்தில் நடக்கக் கூடிய ஆலோசனைகளைப் போல அல்லவா தோன்றுகிறது!

ஆம்; நம் கல்வித்துறை நிபுணர்களை வேறு எந்தக் காரியத்தை வேணுமானாலும் செய்யும்படி கேட்கலாம்; நன்றாகச் செய்வார்கள்.

ஆனால் அவர்களை எந்தக் கல்வி முறை உருவாக்கியதோ, எந்தக் கல்வி முறையில் அவர்கள் உழன்று புரண்டு மேலேறி வந்திருக்கிறார்களோ, அந்தக் கல்வி முறையையே மாற்றி அமைக்கும்படி சொன்னால், அவர்கள் என்ன செய்வார்கள்!

மேலே குறிப்பிட்டது போன்ற உதவாக்கரை யோசனைகளைத்தான் சொல்வார்கள்.

நாட்டின் தேவைகளையும், மக்களின் ஆர்வங்களையும், வெளி நாடுகளில் நடக்கும் காரியங்களையும் நன்கறிந்த நேருஜி போன்ற தலைவர்களே கவனம் செலுத்தினால்தான், மெக்காலே நமக்கு தருளிய இந்தக் கல்வி முறையை மாற்ற முடியும். அப்படி அவர்கள் மாற்ற முற்படும்போது, கல்வி நிபுணர்கள் முதல்—எழுத்தறிவே இல்லாதவர்கள் வரையில் எல்லாரும் சேர்ந்து கிளப்பும் எதிர்ப்பைச் சமாளிக்கவும் தயாராயிருக்க வேண்டும்.

# எத்தனை கோடி தேவைப்படும்?

இரண்டாவது ஐந்து வருஷத் திட்டம் தயாரிப்பது பற்றி இப்போது திட்ட நிபுணர்கள் ஆலோசித்து வருகிறார்கள். ரூபாய் எவ்வளவு செலவழிப்பது என்பது முதலில் முடிவாகி விட்டது! இரண்டாவது ஐந்து வருஷத் திட்டத்துக்காக ஐயாயிரத்து ஐந்நூறு கோடி ரூபாய் செலவிடப்படுமாம்! இதில் சுமார் இருநூறு கோடி ரூபாய் தமிழ் நாட்டில் செலவிடப்படும் என்ற நல்ல செய்தியை நமது நிதி மந்திரி சுப்பிரமண்யம் வெளியிட்டிருக்கிறார். இவ்வளவு பணத்தையும் செலவழிப்பதற்குத் தகுந்த பயனுள்ள திட்டங்களை நல்ல முறையில் வகுத்து நடத்தி வைத்தால், பல துறைகளிலும் நாட்டின் முன்னேற்றம் துரிதமாக நடக்கும் என்பதில் ஐயமில்லை.

எந்த அம்சத்தை ஆதாரமாகக் கொண்டு, "பயனுள்ள திட்டங்கள்" என்று தீர்மானிப்பது!

பாரத தேசத்தின் முக்கியமான செல்வம் இங்குள்ள ஆள் பலமேயாகும். ஆதலின் நம் ஆள் பலத்தை அதிகமாக உபயோகப்படுத்தக் கூடிய திட்டத்தையே நல்ல முறையில் வகுக்கப்பட்ட பூரண பயன் தரும் திட்டம் என்று சொல்லலாம். இந்தப்படி செய்யாததுதான் முதல் ஐந்து வருஷத் திட்டத்தில் பெரிய குறைபாடு என்பதை எடுத்துக் காட்டியிருக்கிறோம்.

இந்தக் குறைபாடு அதில் இருப்பதைத் திட்டம் வகுத்தவர்களும் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்.

ஆகையினால், இரண்டாவது ஐந்து வருஷத் திட்டத்தில், வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்கும் குறிக்கோள் முக்கியமாக வைத்துக் கொள்ளப்படும் என்று தெரிவித்திருக்கிறார்கள். திட்டத்தின் குறிக்கோளில் இந்த மாறுதலைப் பெரிதும் பாராட்டி வரவேற்கிறோம்.

"வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிப்பது" என்பதும், "ஆள் பலத்தைப் பூரணமாகப் பயன்படுத்துவது" என்பதும் ஒரே பொருள் கொண்டவைதான்.

புதிய குறிக்கோளுடன் போடப்படும் திட்டம் எப்படியிருக்க வேண்டும்! பெரிய முதலீடுகள் தேவையாயுள்ள மகத்தான ஆலைத் தொழில்களை அமைப்பதின் மூலம் நமது ஆள் பலத்தை நன்கு உபயோகிக்க முடியுமா! அல்லது வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்கிவிட முடியுமா!

இதற்குச் சூசனையான பதில் பண்டித நேருவே தமது பிரசங்கத்தில் கூறியிருக்கிறார்.

"இயந்திரத் தொழில் மூலம் ஒரு மனிதனுக்கு வேலை தரவேண்டுமானால், அதற்குப் பதினாயிரம் ரூபாய் முதலீடு செய்ய வேண்டும் என்று அறிகிறேன். இதன்படி இந்த நாட்டில் வேலையில்லாதவர்களுக் கெல்லாம் வேலை கொடுப்பதென்றால் எத்தனை கோடானு கோடி ரூபாய் வேண்டும்! வானத்து நட்சத்திரங்கள் எவ்வளவோ அவ்வளவு ரூபாய் தேவைப்படுமே! ஆகையினால் சிறிய கைத்தொழில்கள்—குடிசைத் தொழில்களிலே அதிக கவனம் செலுத்த வேண்டும். இதன் மூலமாகவே வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க முடியும் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை."

இவ்வளவு சந்தேகமறத் தெளிவாயிருக்கும் விஷயத்தைக் காரியத்தில் இந்திய அரசாங்கத்தார் அமுல் நடத்த முடியாமலிருப்பது விந்தையிலும் விந்தையல்லவா!

இதைக் கேளுங்கள் :—

நேருஜியின் கணக்குப்படி ஒரு கோடி பேருக்கு வேலை தேடித் தர வேண்டுமானால் இயந்திரத் தொழிலுக்கு எவ்வளவு ரூபாய் முதலீடு தேவை! பதினாயிரம் கோடி ரூபாய் அல்லவா! நமது நாட்டின் தற்கால நிலைமையில் பதினாயிரம் கோடி ரூபாய் முதலீடு செய்வதென்பது கனவிலும் கருத முடியாத காரியம். நிகழும் வருஷத்தில் இந்திய சர்க்காரின் பிரசார சாதனங்களையெல்லாம் உபயோகப்படுத்தி முயன்றும் நூற்றைம்பது கோடி ரூபாய்தான் கடன் வசூலிக்க முடிந்தது.

பின்னர், பதினாயிரம் கோடி ரூபாய் எப்படிக் கிடைக்கப் போகிறது!

நல்லது; ஒரு ரூபாய் கூடப் புதிதாக முதலீடு செய்வது தேவையில்லாமல் ஒரு கோடி பேருக்கு வேலையும் ஜீவனமும் அளிக்கும் தொழில் ஒன்று இந் நாட்டில் இருந்து வருகிறது. அதுதான் கைத்தறித் தொழில். இருபது லட்சம் வீடுகளில் இருபது லட்சம் கைத்தறிகள் ஏற்கனவே இருந்து வருகின்றன. தறி ஒன்றுக்கு ஐந்துபேர் வீதம் வேலை செய்து பிழைப்பு நடத்தலாம்.

இப்பேர்ப்பட்ட பதினாயிரம் கோடி ரூபாய் முதலீட்டுத் தொழிலை, ஒரு கோடி பேருக்கு வேலை தரும் அற்புதமான குடிசைத் தொழிலை,—நாளுக்கு நாள் நலிந்து நாசமாகாமல் காப்பாற்றுவதற்குச் சர்க்கார் முன்வரவில்லை!

கைத்தறியை விசைத் தறியாக மாற்றுவதற்கு யோசனை சொல்கிறார்கள். கைத்தறிக்கும் ஆலைகளுக்கும் உற்பத்தியைப் பங்கீடு செய்ய முயல்கிறார்கள். கூட்டுறவுச் சங்கங்கள் அமைத்து நிர்வாகச் செலவைப் பெருக்குகிறார்கள். ஆலை முதலாளிகளிடம் பிச்சை வாங்கிக் கைத்தறித் துணி வாங்குவோருக்கு ஒரு அணாவும் ஒன்றரை அணாவும் கமிஷன் கொடுக்கிறார்கள்.

ஆலைத் துணி உற்பத்தி என்னவோ நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது.

கைத்தறி நாளுக்கு நாள் க்ஷீணித்து வருகிறது.

குடிசைத் தொழில் மூலம் உற்பத்தி செய்ய முடியாத பொருள்கள் பல இருக்கின்றன.

முதலாளிகள் தங்கள் மூலதனத்தை அத்தகைய தொழில்களில் போடும்படி செய்யலாம் அல்லவா!

"எதற்கெடுத்தாலும் அன்னிய நாட்டிலிருந்து இயந்திரங்கள் தருவிக்கிறீர்களே! இது என்ன அநியாயம்!" என்று நேருஜி கேட்கிறார்.

ஆம்; அந்த இயந்திரங்களையே இந்த நாட்டில் செய்வதற்கு முதலாளிகள் மூலதனம் போட்டுத் தொழிற்சாலைகள் வைக்கலாம் அல்லவா!

ஒரு கோடி மக்கள் குடிசையில் அமர்ந்து பிழைப்பதற்குச் சாதகமாயுள்ள கைத்தறியின் தலையில் கையை வைப்பானேன்!

ஆலைகளில் துணி உற்பத்தி பெருகுவானேன்!

நேருஜியின் குறிக்கோளுக்கும் இந்திய அரசாங்கத்தின் நடைமுறைக்கும் உள்ள பெரிய வேற்றுமையைக் காட்டுவதற்குக் கைத்தறித் தொழில் சிறந்த உதாரணமாக விளங்குகிறது.

அப்படி உதாரணங் காட்டுவதற்காவது அதை இந்தமட்டும் விட்டு வைத்திருக்கிறார்களே என்று நாம் சந்தோஷப்பட வேண்டியதுதான்.

# நாளொரு நெருக்கடி! பொழுதொரு புரட்சி!

மத்திய கேந்திர நாடுகள் இன்று திடுக்கிடத்தக்க அரசியல் சூழ்ச்சிகளுக்கும் சதிகளுக்கும் நிலைக்களமாக இருந்து வருகின்றன. அந்த நாடுகளின் நிலைமை நாளொரு நெருக்கடியும் பொழுதொரு புரட்சியுமாக இருந்து வருகிறது என்று கூறுவது மிகையாகாது.

பல மாதங்களுக்கு முன் எகிப்தில் திடீரென்று கிளர்ந்தெழுந்த மின்னல் புரட்சியை யாரும் மறந்திருக்க முடியாது. அப்போது பண்டித ஜவாஹர்லால் நேரு எகிப்து நாட்டின் வழியாக லண்டனுக்குச் சென்றார். அவர் போகும்போது எகிப்து முடியரசாக இருந்தது. ஒரு சில தினங்களுக்குப் பின் திரும்பி வந்தபோதும் நேருஜி எகிப்தில் தங்கினார். ஆனால் அப்போது அந்த நாடு குடியரசாக மாறி விட்டது!

எகிப்திய பரூக் மன்னர் முடி துறந்த பின், எகிப்துக் குடியரசின் ஜனாதிபதி பதவிக்கு வந்த ஜெனரல் நாஜீப் அந்த நாட்டு மக்களின் ஏகோபித்த ஆதரவைப் பெற்றிருப்பதாகக் கூறப்பட்டது. ஆனால் அந்த நாடு குடியரசாக மாறிய சில தினங்களுக்குப் பிறகு ஜனாதிபதி ஜெனரல் நாஜீபுக்கும் பிரதம மந்திரி கர்னல் நாஸருக்கும் பலப் பரீட்சை நடக்கத் தொடங்கியது. அதன் விளைவாகக் கண்ணாமூச்சி போன்ற அரசியல் நாடகங்கள் நிகழ்ந்தன. ஜெனரல் நாஜீப் பதவி இழப்பதும், மீண்டும் நாஜீப் பதவிக்கு வந்து நாஸர் பதவி இழப்பதுமாக எகிப்து நிலைமை மோசமாகியது. இறுதியில் முன்போலவே மறுபடியும் ஜெனரல் நாஜீப் ஜனாதிபதியாகவும் கர்னல் நாஸர் பிரதம மந்திரியாகவும் வந்த பின்தான் எகிப்தில் அமைதி ஏற்பட்டது.

எனினும் அந்த அமைதி உண்மையான அமைதி அல்ல என்பதும், புயலுக்கு முன் நிலவும் பயங்கர அமைதி என்பதும் இப்போது எகிப்து நாட்டில் நிகழ்ந்துள்ள திடுக்கிடத்தக்க சம்பவங்களிலிருந்து வெளியாகி யிருக்கின்றன.

சில தினங்களுக்கு முன் எகிப்துப் பிரதமர் கர்னல் நாஸரைக் கொலை செய்ய முயற்சி நடந்தது அல்லவா! அதன் சம்பந்தமான சதியில் ஜெனரல் நாஜீபும் தொடர்பு வைத்துக் கொண்டிருந்ததாக அவர் ஜனாதிபதி பதவியிலிருந்து நீக்கப்பட்டிருக்கிறார். எகிப்து சர்க்காரை வீழ்த்தும் முயற்சியில் அந்த நாட்டின் ஜனாதிபதி சம்பந்தப்பட்டதாகப் புகார் எழுந்திருப்பதைக் காட்டிலும் திடுக்கிடத் தக்க விஷயம் வேறு என்ன இருக்க முடியும்!

ஏற்கெனவே, மத்திய கேந்திர நாடுகளில் ஒன்றான சிரியாவில் அந் நாட்டின் ஜனாதிபதியும் பிரதம மந்திரியும் மரண தண்டனை அடைந்து உயிர் துறந்தனர். அதற்குப் பின் அங்கு நியமிக்கப்பட்ட ஜனாதிபதியும் பதவி இழந்து, உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காக வெளி நாட்டுக்கு ஓடிவிட நேர்ந்தது. ஈரானில் பிரதம மந்திரி மூஸாதிக் சிறைத் தண்டனை அடைந்து, வெளி நாட்டு மந்திரி மரண தண்டனை அடைந்ததையும் கேள்விப்பட்டோம்.

இவ்வாறாக, இந்தியாவை அடுத்துள்ள நாடுகளில் ஜனநாயக ஆட்சி மறைந்து, இராணுவ ஆட்சி ஏற்பட்டு வருவதைப் பார்க்கும்போது, சுதந்திர இந்தியாவில் நிலவி வரும் சிறந்த ஜனநாயக ஆட்சியைக் குறித்துப் பெருமை அடையத் தோன்றுகிறது அல்லவா!

# மூவர் ஒப்புக்கொண்ட உண்மை!

கொழும்பு நவம்பர் மீ, 12உ

இலங்கைப் பிரதம மந்திரி ஸர் ஜான் கொத்தலாவலை இவ்வாரம் டில்லி ஒப்பந்தத்தைப் பார்லிமெண்டில் சமர்ப்பித்து ஒரு அறிக்கையை வெளியிட்டார். அந்த அறிக்கையில் புதிய ஒப்பந்தத்தை நேர்மையாக அமுல் நடத்த அரசாங்கம் என்ன நடவடிக்கை யெடுக்கப் போகிறது என்பதைப் பற்றியோ அல்லது அற்ப காரணங்களுக்காகப் பிரஜாவுரிமை மனுக்கள் நிராகரிக்கப்படுவதாகக் காங்கிரஸ் புகார் செய்வதைப் பற்றியோ ஏதும் குறிப்பிட வில்லை. டில்லியிலிருந்து திரும்பியவுடன் முன் கூட்டியே தயாரித்து வைத்துப் பத்திரிகை நிருபர்களுக்கு அளித்த அதே அறிக்கையை ஸர் ஜான் பார்லிமெண்டில் சமர்ப்பித்தது இந்தியர்களுக்குப் பெரிய ஏமாற்றத்தை அளித்துள்ளது.

ஆயினும் அந்த அறிக்கை மீது நடந்த விவாதம் ஒரு விதத்தில் நன்மை செய்துள்ளது என்பதை இங்கு நாம் குறிப்பிட வேண்டும். இலங்கை இது வரையில் நினைத்து வந்ததைப் போல இந்தியர்கள் மீது ஹிட்லரிய நடவடிக்கைகளைக் கையாண்டு அவர்களை இங்கிருந்து விரட்டிவிட முடியாதென்பதையும் நாடற்றவர்கள் இலங்கையின் பொறுப்புத்தான் என்பதையும் பிரதமர் ஸர் ஜான், முன்னாள் பிரதமர் ஸ்ரீ டட்லி சேனநாயகா, எதிர்க் கட்சித் தலைவர் ஸ்ரீ பண்டார நாயகா ஆகிய மும்மூர்த்திகளும் பகிரங்கமாகவும் உத்தியோக தோரணையிலும் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்.

நாடற்றவர்கள் மீது எவ்விதமான நடவடிக்கைகளை எடுப்பதா யிருந்தாலும் அவர்களுடைய எண்ணிக்கை எவ்வள வென்பது முதலில் தெரிய வேண்டு மென்றும் இதற்குச் சகல பிரஜாவுரிமை மனுக்களையும் அதி சீக்கிரமாக பைசல் செய்து முடிக்க வேண்டு மென்றும் எதிர்க் கட்சித் தலைவர் வற்புறுத்தி யிருக்கிறார். இதை அனுசரித்துப் பிரஜா பதிவு இலாகாவுக்கு அதிகப்படி அதிகாரிகளை நியமிக்க மந்திரி சபை இவ்வாரம் மான்யம் அனுமதித்திருக்கிறது. அதோடு டில்லி ஒப்பந்தத்தை அமுல் நடத்தத் தேவையான நடவடிக்கைகள் எடுப்பதற்கு ஒரு உப கமிட்டியையும் மந்திரி சபை நியமித்திருக்கிறது.

செனட் சபையிலும் இவ்வாரம் இந்தியப் பிரச்னையைப் பற்றி விவாதம் நடைபெற்றது. இலங்கை இந்திய அரசாங்கங்களுக் கிடையில் நடைபெற்ற சகல கடிதப் போக்குவரத்துகளையும் பிரசுரிக்க வேண்டு மென்று செனட்டர் பெரிசுந்திரம் ஒரு தீர்மானத்தைப் பிரேரேபித்துப் பேசுகையில் சமீப டில்லி ஒப்பந்தத்துக்குப் பிறகு நிலைமை மேலும் படுமோசமடைந்து உள்ளதென்றும், அற்பக் காரணங்களுக்காகப் பல்லாயிரக் கணக்கான பிரஜாவுரிமை மனுக்கள் தொடர்ந்து நிராகரிக்கப்பட்டு வருவதாயும் புகார் செய்தார்.

இலங்கை இந்தியர்கள் இந்நாட்டில் பிரஜா வுரிமை பெற வேண்டுமானால் இந்தியர் பாகிஸ்தானியர் பிரஜாவுரிமைச் சட்டத்தின்படி இலங்கையில் குறிப்பிட்ட சில வருட காலங்கள் வசித்திருந்தால் மட்டும் போதாது. இந்தச் சட்டத்தின் கீழ் உரிமை பெற முதலில் தாங்கள் இந்தியா அல்லது பாகிஸ்தானிலிருந்து வந்து குடியேறியவர்கள் என்பதை ருசுப்படுத்த வேண்டும். இவ்விதம் செய்ய வில்லை யென்ற காரணத்துக்காகப் பல்லாயிரக் கணக்கானவர்களின் பிரஜாவுரிமை மனுக்கள் நிராகரிக்கப்பட்டிருக்கின்றன. இந்திய வம்சாவளியினர் என்று இலங்கை அரசாங்கமே ஒப்புக் கொள்ள மறுக்கும் நபர்களை இந்தியப் பிரஜைகளாக இந்திய அரசாங்கம் ஏற்றுக் கொள்ள வேண்டு மென்று கோருவது எந்த விதத்தில் நியாயமாகும்! இதை செனட்டர் பெரிசுந்திரம் இடித்துக் காட்டிக் கேட்ட பொழுது சர்க்கார் கட்சியின் வாய் அடைத்து விட்டது.

* * *

சிங்களவர்களினால் நடத்தப்படும் ஸிலோன் டெயிலி நியூஸ் பத்திரிகைக்குக் கசப்பான உண்மைகள் இந்தியப் பத்திரிகைகளில் வெளியாகும் பொழுது உடம்பு என்னவோ செய்ய ஆரம்பித்து விடுகிறது! இருபத்து நாலு வருட காலம் இலங்கையில் வசித்து ஒரு சிங்களப் பெண்ணுடன் குடும்பம் நடத்துவோருக்கு இலங்கை அரசாங்கம் பிரஜாவுரிமை யளிக்க மறுத்ததைச் சுட்டிக் காட்டிச் சென்னை 'ஹிந்து' பத்திரிகை இவ்வாரம் ஒரு தலையங்கம் எழுதி யிருந்தது.

காங்கிரஸ் தலைவர்கள் தங்களுடைய குறைபாடுகளைச் சொல்ல இலங்கை அரசாங்கத்தையும் இந்தியப் பத்திரிகைகளையும் நாடுவதாயும் இது அவர்களுடைய இரு தேச விசுவாசத்தையும் ருசுப்படுத்துவதாயும் டெயிலி நியூஸ் பத்திரிகையின் ராஜீய நிருபர் உளறிக் கொட்டி யிருக்கிறார். காங்கிரஸ் தலைவர்களுக்கு அவர்களுடைய குறைகளைத் தெரிவிக்க இலங்கை அரசாங்கத் தலைவர்கள் சந்தர்ப்ப மளிக்கிறார்களா! இலங்கைப் பத்திரிகைகளோ காங்கிரஸ் செய்திகளை இருட்டடிக்கின்றன. இந்த நிலைமையில் காங்கிரஸ் தலைவர்கள் மீது குறை கூறுவது எவ்வளவு பெரிய அபாண்டம்!

தபால் மந்திரி ஸ்ரீ எஸ். நடேசன் இவ்வாரம் மட்டுவில் என்னுமிடத்தில் பேசிய பொழுது இலங்கையின் புராதன ஆலயங்களி லெல்லாம் தமிழ் சிங்களம் ஆகிய இரண்டு பாஷைகளிலுமே சிலா சாஸனங்கள் எழுதி வைக்கப்பட்டிருப்பதாயும் அவை தமிழரும் சிங்களவரும் இந்நாட்டில் என்றென்றும் சம அந்தஸ்து பெற்றிருந்ததைச் சுட்டிக் காட்டுவதாயும் சொன்னார். கடந்த காலத்திய நிலைமை இதுவா யிருக்கலாம். ஆனால் நிகழ் காலத்திலும் வருங் காலத்திலும் நிலைமை என்ன! இதுவே தமிழ் மக்களுக்கு இன்று பெருங் கவலையை அளித்து வருகிறது. —ரஜனி.

# அமரதாரா

### அத்தியாயம் 23

## பாதிரித் தோட்டம்

அன்றைக்கெல்லாம் என் மனத்தில் ஒரு புதிய பரபரப்புக் குடி கொண்டிருந்தது. ஒரு காரணமுமில்லாமல் வீட்டில் அங்கு மிங்கும் போய்க் கொண்டிருந்தேன். சில சமயம் அகாரணமாகச் சிரித்தேன். சில சமயம் எனக்கு நானே பேசிக் கொண்டேன்.

"அம்மா !" என்று உரத்துச் சத்தம் போட்டுக் கூப்பிடுவேன். அம்மா அருகில் வந்து, "என்ன, இந்து ! ஏன் கூப்பிட்டாய் ?" என்றால், பதில் சொல்லத் தெரியாமல் விழிப்பேன். நான் அம்மாவைக் கூப்பிட்டது எனக்கே நினைவிராது. எதற்காக அவளைக்கூப்பிட்டோம் என்று நினைத்துப் பார்த்தாலும் தெரியாது.

மோட்டார் விபத்தில் நானும் கன்றுக் குட்டியும் சிக்கிக் கொண்ட சமயத்தில் நான் பீதி யடைந்திருக்க வேண்டும் என்று அம்மா நினைத்தாள். அதற்காகச் சில பரிகாரங்களைச் செய்தாள். நெற்றியில் மந்திரித்த திருநீறு இட்டாள். கொஞ்சம் மிளகு எடுத்து என் தலையைச் சுற்றி எரிகிற அடுப்பிலே கொண்டு போட்டாள். அப்போது உண்டான காரப் புகையானது என் மனத்திலிருந்த பீதியையெல்லாம் விரட்டி அடித்து விடும் என்று எண்ணம் போலும் !

இப்படியெல்லாம் செய்தும் என் பிரமை நீங்காமற் போகவே, அம்மா மந்திரமூர்த்தியிடம் "இந்தப் பெண்ணை இனிமேல் தனியாக வெளியே அனுப்பவே கூடாது !" என்று சொன்னாள்.

"உன் மகளை வீட்டுக்குள்ளேயே கட்டிப் போட்டு வைத்திருக்க முடியும் என்று நினைத்தாயா? இன்றைக்கு இவள் இன்னும் வெளியில் புறப்படாமலிருப்பதே ஆச்சரியம் !" என்றார் மந்திரமூர்த்திப் பண்ணையார்.

**"வீட்டுக்குள்ளே பெண்ணைப்**
**பூட்டி வைப்போம் என்ற**
**விந்தை மனிதர் தலைகவிழ்ந்தார் !"**

என்னும் கவியரசர் பாரதியார் பாடலை நான் பாடிக் காட்டினேன்.

"பூட்டி வைக்கா விட்டால், என்றைக்காவது ஒரு நாள் 'காலை ஒடித்துக் கொண்டேன்' 'மண்டையை உடைத்துக் கொண்டேன்' என்று வந்து நிற்பாள் !" என்றாள் அம்மா.

"அப்படியெல்லாம் ஒன்றும் நேராது. நம் இந்துவைக் கடவுள் காப்பாற்றுவார் !" என்றார் மந்திரமூர்த்தி.

"ஆமாம், அப்பா ! இன்றைக்கு என்னையும் லில்லியையும் கடவுள்தான் காப்பாற்றினார் !" என்றேன் நான்.

"உங்களை மட்டும் என்ன ? எல்லாரையுந்தான் கடவுள் காப்பாற்றுகிறார் !"

"இல்லை, இல்லை ! எங்களை 'ஸ்பெஷலாக' வந்து காப்பாற்றினார். கடவுளுக்கு எல்லா பாஷைகளும் தெரிந்திருக்கும் அல்லவா, அப்பா ! இங்கிலீஷில் அழைத்தால்கூட வருவார் அல்லவா ?"

"நீ அவரை இங்கிலீஷில் கூப்பிட்டாயா, என்ன ?" என்று கேட்டார்.

"நான் கூப்பிடவில்லை ! மோட்டார் வண்டியில் வந்தவர், — ஜமீன்தார் தங்கபாண்டியனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தவர், — நானும் கன்றுக் குட்டியும் எப்போர்ப்பட்ட ஆபத்தான நிலைமையில்



இருக்கிறோம் என்பதைப் பார்த்து விட்டு 'ஓ மை காட்!' (Oh My God!) என்றார். கஜேந்திரன் 'ஆதிமூலமே!' என்று அழைத்ததும் பகவான் ஓடிவரவில்லையா? அதுபோலக் கடவுள் இங்கேயும் ஓடி வந்து மோட்டார் வண்டியை அவசரமாகப் 'பிரேக்' போட்டு நிறுத்தினார். இல்லாமற் போனால் நான் காலை நன்றாக ஒடித்துக் கொண்டோ, மண்டையை உடைத்துக் கொண்டோதான் வந்திருப்பேன்!'' என்றேன்.

இதைக் கேட்ட மந்திரமூர்த்தி சிரித்து விட்டு, "பார்த்தாயா, சந்திரமணி! உன் மகள் கடவுளுக்கே பயப்படாமல் பரிகாசம் செய்கிறாளே? இவள் எதற்குப் பயப்படுவாள்? இவள் ஏதோ பயந்து விட்டதாக எண்ணி மிகவும் கவலைப்படுகிறாயே?'' என்றார்.

என் தாயார் என்னைப் பார்த்து, "அப்படியெல்லாம் பேசக் கூடாது, இந்து! விளையாட்டுக்காகக் கூடத் தெய்வ நிந்தனை செய்யக் கூடாது. அந்தச் சமயத்தில் மோட்டார் வண்டியின் டிரைவருக்குப் 'பிரேக்' போட்டு வண்டியை நிறுத்தத் தோன்றியது அல்லவா? அதுதான் கடவுளின் திருவருள்!'' என்றாள்.

உண்மையில், தெய்வ நிந்தனை செய்ய வேண்டும் என்ற எண்ணம் என் மனத்தில் அணுவளவும் இருக்கவில்லை. மோட்டாரில் நான் பார்த்த புதிய மனிதரைப் பற்றி அவர்களிடம் பேச வேண்டும் என்று தோன்றியது. அதனாலேதான் அந்தப் பேச்சையே எடுத்தேன். ஆனால் அவர்களோ கடவுளின் கருணையைப் பற்றி எனக்குப் போதனை செய்ய ஆரம்பித்து விட்டார்கள்! அந்த மனிதரைப் பற்றி ஒன்றும் கேட்கவே இல்லை!

அத்துடன் விட்டு விடாமல், நான் மேலும் "அப்பா! தங்கபாண்டியனுடன் வந்த மனிதர் யாராயிருக்கும்?'' என்று மந்திரமூர்த்தியைக் கேட்டேன்.

"அதைப் பற்றி நமக்கென்ன விசாரம், இந்து! ஏதோ உன் பேரில் வண்டியை ஏற்றாமல் விட்டார்களே, அந்த வரையில் சந்தோஷப் படுவோம். மற்றப்படி, அரண்மனையைச் சேர்ந்தவர்களுடன் நமக்கு எவ்விதச் சம்பந்தமும் இல்லாமலிருப்பதே நல்லது!'' என்றார்.

"தங்க பாண்டியன் ரொம்ப நல்ல பிள்ளை என்று நீங்களே பலமுறை சொல்லியிருக்கிறீர்களே?''

"அதனால் என்ன? அவருடைய மாமன் சொக்கையா என்னைக் கடித்து மென்று தின்று விடலாம் என்று நினைக்கிறான். இந்த ஊரை விட்டே என்னைத் துரத்தி விடப் பார்க்கிறான். அது அவனாலும் முடியாது; அவனுடைய பாட்டனாகிய குள்ளப் பாண்டியன் திரும்பி வந்தாலும் முடியாது!'' என்றார் மந்திரமூர்த்தி.

இது என்னமோ உண்மைதான். என் தகப்பனார் காசிலிங்கம் மறைந்த பிறகு சிலகாலம் வரையில் சொக்கையா எங்கள் வழிக்கு வராமலிருந்தார். மறுபடியும் அவருடைய சொரூபத்தைக் காட்ட ஆரம்பித்துவிட்டார். பழையபடி கோர்ட் வியாஜ்யங்கள் ஆரம்பித்து நடந்தன.

ஜமீன் நிலங்களும் எங்கள் பண்ணை நிலங்களும் அடுத்தடுத்து உள்ள இடங்களிலெல்லாம் தகராறுகள் விளைந்தன. ஜமீன் ஆட்களை ஏவி விட்டுப் பண்ணை ஆட்களுடன் சண்டை பிடிக்கப் பண்ணினார். இந்தச் சண்டைகளின் மூலமாக அடிதடி வழக்குகள் ஏற்பட்டு நடந்தன. சில சமயம் ஜமீன் ஆட்களும் சில சமயம் பண்ணை ஆட்களும் தண்டனைக்கு உள்ளானார்கள். இதனாலெல்லாம் ஜமீனுக்கும் பண்ணைக்கும் மேலும் மேலும் விரோதம் வளர்ந்து வந்தது.

இவற்றையெல்லாம் நினைவு படுத்திக் கொண்டு நான் 'அப்பா சொல்லுவதில் நியாயம் இருக்கிறது' என்று ஒத்துக் கொள்ள வேண்டியதாயிருந்தது. ஆனால் உடனே மனம் சஞ்சலம் அடைந்தது. "நமது சண்டைக்கும் புதிதாய் வந்திருப்பவருக்கும் என்ன சம்பந்தம்? அவருடன் எதற்காக விரோதம் பாராட்ட வேண்டும்?'' என்று மனத்துக்குள் சொல்லிக் கொண்டேன்.

மறுநாள் மந்திரமூர்த்திப் பண்ணையார் ஏதோ ஒரு வியாஜ்யம் விசாரணைக்கு வருவதை முன்னிட்டுத் திருநந்திபுரத்துக்குப் புறப்பட்டுச் சென்றார்.

அப்பாவும் இல்லாமற் போகவே எனக்கு வீட்டில் இருப்புக் கொள்ளவில்லை. அம்மா குடும்பக் காரியங்களில் ஈடுபட்டிருந்தாள். பண்ணைக்குப் போகலாம் என்றால், அச்சமயம் விதை தெளி, நடவு, அறுவடை ஒன்றும் இல்லை. அருவிக்கரைப் பங்களாவுக்குப் போகலாமா என்று நினைத்தேன். பிறகு அந்த எண்ணத்தையும் மாற்றிக் கொண்டு, என்னுடைய பழைய வாத்தியார் அம்மாளைப் பார்த்து விட்டு வருவதற்காகக் கிளம்பினேன்.

குங்குமத்துறையில் எனக்குச் சிநேகிதிகள் யாரும் இல்லை என்று முன்னம் எழுதியிருக்கிறேன். என் பிராயத்துக்கு

ஒத்த வயதுடைய சிநேகிதிகள் இல்லை என்பது உண்மைதான். ஆனால் வயதிலும் அநுபவத்திலும் முதிர்ந்த சிநேகிதி ஒருவர் எனக்குக் கிடைத்திருந்தார்.

எங்கள் ஊரில் பெண்கள் பள்ளிக்கூடம் ஆரம்பித்த புதிதில் இரண்டு உபாத்தியாயினிமார் இருந்தனர். அவர்களில் ஒருவர் பெயர் சுசீலா. இவர் எல்லாக் குழந்தைகளிடமும் பிரியமாக இருந்தார். முக்கியமாக என்னிடம் விசேஷ அன்பு காட்டினார். என் தாயாருடைய சோகக் கதையைக் கேட்டதனால் தானோ என்னவோ அவருக்கு என்பேரில் அதிக அன்பு உண்டாயிற்று.

சுசீலா டீச்சர் கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்தவர். ஹிந்துக்களிலே பெண்களின் சம்மதத்தைக் கேட்காமல் கலியாணம் செய்து கொடுத்து விடும் வழக்கத்தை அவர் அடிக்கடி கண்டனம் செய்வார். "மனமொத்துச் செய்து கொள்ளும் மணந்தான் திருமணம், மற்றதெல்லாம் அடிமைத்தனம்" என்று கூறுவார். தம் வாழ்க்கையிலேயே அவர் அதை நிரூபித்திருந்தார். அவருடைய பெற்றோர்களின் விருப்பத்துக்கு மாறாக ஹிந்து மதத்தைச் சேர்ந்த 'அஞ்ஞானி' ஒருவரை அவர் மணந்து கொண்டார். ஆனால் சில காலத்துக்குள் அந்த அஞ்ஞானி கிறிஸ்துவப் பாதிரியாரிடம் "ஞானஸ்நானம்" பெற்று ஞானியாகி விட்டார். இன்னும் சில வருஷங்களுக்குப் பிறகு அந்த ஞானி பரிபக்குவ நிலையை அடைந்து பரம பதத்துக்கே போய் விட்டார்!—இவ்வாறு சுசீலா தேவியைப் பிடியாதவர்கள் அவரைப் பற்றிப் பேசுவார்கள். எனக்கு என்னமோ அவரிடம் மிக்க அன்பும் மரியாதையும் ஏற்பட்டிருந்தன. அக்கா தங்கைகளுடன் பிறவாதவளாகிய நான், சுசீலா தேவியை என்னுடைய மூத்த தமக்கையாகப் பாவித்து அன்பு செலுத்தினேன். வீட்டில் என் அன்னையிடமும் மந்திரமூர்த்தியிடமும் எனக்கு அவ்வளவு பாசம் இருந்திராவிடில், ஒருவேளை கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்தாலும் சேர்ந்திருப்பேன்.

நான் பள்ளிக்கூடம் போவதை நிறுத்தியவுடனேயே, சுசீலாதேவியும் உபாத்தியாயினி வேலையை விட்டு விட்டார். பள்ளிக்கூட சோதனைக்காக வந்த அதிகாரிகள் அவரிடம் சரிவர நடந்து கொள்ளாததினால், அவர் வேலையை விட்டு விட்டதாகச் சிலர் சொன்னார்கள். அந்த அதிகாரிகளிடம் இவர் சரியாக நடந்து கொள்ளவில்லையென்று வேறு சிலர் கூறினார்கள். இதன் உண்மையைப் பற்றி நான் விசாரித்தறிய முயலவில்லை. எதற்காக விசாரிக்கவேண்டும்? உண்மை எதுவாயிருந்தால்தான் என்ன? என் அன்னைக்கும் மந்திரமூர்த்திக்கும் அடுத்தபடியாக என்னிடம் அன்பு வைத்திருந்தவர் பேரில் யார் என்ன புகார் சொன்னாலும், அது என் காதில் ஏறுவதில்லை.

எங்கள் வீட்டிலிருந்து அருவிக்கரை பங்களாவுக்குப் போவதற்குக் குறுக்குப் பாதை ஒன்று உண்டு. ஏறக்குறையச் செங்குத்தாக நின்ற ஒரு மொட்டைப் பாறையின் மீது ஏறி அந்தப் பக்கம் இறங்கினால், விஸ்தாரமான தோட்டம் ஒன்று இருக்கிறது. அத்தோட்டத்தில் ஓங்கி வளர்ந்த விருட்சங்கள் பல இருந்தன. மாமரங்கள், பலா மரங்கள், சாதிக்காய் மரங்கள், செண்பக மரங்கள், புன்னை மரங்கள், எல்லாம் உண்டு. அத்தோட்டத்தின் ஒரு ஓரமாகச் சிறிய ஓடை ஒன்று இருந்தது. ஓடையில் பளிங்கு போன்ற தெளிந்த நீர் கூழாங்கற்களின் மீது உருண்டு புரண்டு சலசலவென்ற சப்தத்துடன் ஓடும் காட்சியைப் பார்த்துக் கொண்டேயிருந்தால் பொழுது போவதே தெரியாது. அந்த ஓடையின் ஓரமாகச் சில இடங்களில் மூங்கில் புதர்கள் அடர்ந்து வளர்ந்திருக்கும். மூங்கில் கழைகளின் நுனி தாழ்ந்து மூங்கில் இலைகள் ஓடை நீரைத் தொட்டுக் கொண்டிருக்கும் இடங்களும் உண்டு. மூங்கில் இலைகளின் மீது ஓடை நீர் உராய்ந்து கொண்டு போகும்போது உண்டாகும் இனிய ஓசை, பூத்துக் குலுங்கும் புன்னை மரங்களில் தேன் வண்டுகள் இசைக்கும் ரீங்காரத்துடன் போட்டியிட்டுக் கொண்டிருக்கும்.

இந்தத் தோட்டத்துக்குப் 'பாதிரித் தோட்டம்' என்று பெயர். அத்தோட்டத்தின் நடுவில் உள்ள பங்களாவுக்குப் 'பாதிரியார் பங்களா' என்றும் 'சிவப்புப் பங்களா' என்றும் பெயர் வழங்கின.

சில காலத்துக்கு முன்பு வெள்ளைக்காரப் பாதிரியார் ஒருவர் குங்குமத்துறைக்கு வந்திருந்தார். குங்குமத்துறையின் இயற்கை வனப்பு நிறைந்த சூழ்நிலை அவருக்குப் பெரிதும் பிடித்திருந்தது. ஆகையால் அப்பாதிரியார் அந்த ஊரிலேயே நிரந்தரமாகத் தங்கியிருந்து, அஞ்ஞானிகளாகிய ஹிந்து மதத்தினரைக் கிறிஸ்துவ ஞான மார்க்கத்துக்குத் திருப்பும் தொண்டு செய்யத் தீர்மானித்தார்.



இந்த உத்தேசத்துடன் ஐந்து ஏக்கரா நிலம் வாங்கி அதில் தோட்டம் போட்டார். தோட்டத்தின் நடுவில் பெரிய பங்களா ஒன்றும் கட்டினார். அதன் சுவர்களில் சிவப்பு வர்ணம் அடித்திருந்தபடியால் 'சிவப்புப் பங்களா' என்று சிலர் அதைச் சொன்னார்கள்

பாதிரியார் ஒன்று நினைக்க ஆண்டவன் வேறு ஒன்று நினைத்திருந்தார். பங்களா கட்டி முடிந்து இரண்டு வருஷம் ஆவதற்குள் பாதிரியாரை ஆண்டவன் பரம பதத்துக்கு அழைத்துக் கொண்டார். இது நடந்து இருபது ஆண்டுக்கு மேல் ஆகி விட்டது. இப்போது தோட்டம்



நன்கு பராமரிக்கப்பட்டு வந்தது. ஆனால் பங்களா வருஷத்தில் பத்து மாதம் பூட்டிக் கிடக்கும். சாரல் காலத்தில் யாராவது பெரிய மனிதர்கள் இரண்டு மாதத்துக்கு அந்தப் பங்களாவை வாடகைக்கு எடுத்துக் கொண்டு வசிப்பார்கள். மற்ற நாளெல்லாம் காலியாகவே இருக்கும். பங்களாவை யொட்டி வேலைக்காரர்கள் வசிப்பதற்குச் சிறிய வீடு ஒன்று கட்டியிருந்தார் பாதிரியார். அந்த வீட்டில்தான் எங்கள் சுசீலா அம்மாள் வயது முதிர்ந்த பெற்றோர்களுடன் வசித்து வந்தாள். சுசீலாவின் தந்தை தோட்டக் கலையில் நன்கு பயிற்சி பெற்றவராம். தோட்டத்தை மேற்பார்வை பார்த்து நன்கு பராமரிக்கும் வேலைக்காக அவருக்குச் சொற்ப சம்பள

மும் வாடகையில்லாமல் குடியிருக்கும் வசதியும் அளிக்கப்பட டிருந்தன.

சுசீலா தேவி பள்ளிக்கூடத்திலிருந்து விலகிய பிறகு, அரண்மனையில் வசித்த பெண் குழந்தைகளுக்குக் கல்வி போதிக்கும் அலுவல் பார்த்து வந்தார். அரண்மனையிலிருந்து இதற்காகக் கிடைத்த சன்மானம் அந்தச் சிறிய குடும்பம் வாழ்க்கை நடத்துவதற்குப் போதுமானதா யிருந்தது.

எனக்கு எப்போதாவது பொழுது போகாமல் அலுப்பாக இருந்தால், நான் சுசீலா தேவியின் வீட்டுக்குப் போவது வழக்கம். முக்கியமாக, மந்திரமூர்த்தி பண்ணையார் ஊரில் இல்லாத தினங்களிலேயே போவேன். அவர் ஊரில் இருந்தால், எனக்குப் பொழுது போகாத சங்கடம் ஏற்படுவதில்லை.

இன்றைக்கும் எங்கள் பழைய உபாத்தியாயினி அம்மாளை நினைத்துக்கொண்டு சிறிது நேரம் பேசிப் பொழுது போக்கிவிட்டு வரலாம் என்று எண்ணிப் புறப்பட்டேன். அந்த அம்மாள் நேற்று மாலை அரண்மனைக்குப் போய் விட்டு வந்திருப்பார்; ஆகையால் புதிதாக வந்திருப்பவரைப் பற்றி அவருக்கு ஏதேனும் தெரிந்திருக்கக் கூடும் அல்லவா? அப்படித் தெரிந்திருக்கா விட்டாலும் பாதகமில்லை. நேற்று நடந்த சம்பவத்தைப் பற்றி அவரிடம் சொல்லலாம். சுசீலா அம்மாளுடன் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தாலே மனத்திலுள்ள பரபரப்பு அடங்கி விடும். பாதிரியார் தோட்டத்தின் வழியாக ஒரு முறை போய்விட்டுத் திரும்பினாலும் மனத்தில் நிம்மதி ஏற்படும்......

மேட்டுப் பாறையில் ஏறி இறங்கிப் பாதிரித் தோட்டத்தின் குறுக்கே சென்ற ஒற்றையடிப் பாதையில் விரைந்து நடந்தேன். அன்று அத்தோட்டத்தின் வர்ண வனப்புக்களிலும் ஓசை இன்பங்களிலும் என் உள்ளம் ஈடுபடவில்லை. பூங்குயில்களின் இன்ப கீதம் காதில் விழவில்லை. தேன் வண்டுகளின் வீணைகானம் போதை அளிக்கவில்லை. நீரோடைக் கரையில் இளமூங்கில் இலைகளும் வழவழப்பான கூழாங்கற்களும் இன்ப இரகசியங்கள் பேசிக் குலாவிய ஒலிகள் செவியில் ஏறவேயில்லை. வான வில்லில் ஒளிரும் அத்தனை விதவிதமான வர்ண பேதங்களையுடைய மாமலர்கள் அத்தோட்ட மெங்கும் உதிர்ந்து சிதறிக் கிடப்பதை என்னுடைய கண்கள் கவனிக்கவில்லை.

வில்லிலிருந்து புறப்பட்ட அம்பு நேரே சென்று இலக்கினை அடைவது போல் நானும் ஒற்றையடிப் பாதை வழியாக விரைந்து சென்று சுசீலா தேவியின் வீட்டை அடைந்தேன். நான் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. அந்த அம்மாளும் என் வரவை எதிர் நோக்கிக் காத்துக்கொண்டிருந்ததாகத் தெரிந்தது.

"இந்து! நேற்று மோட்டார் விபத்தில் தப்பிப் பிழைத்தாயாமே? வயது வந்த பெண், இப்படியா கன்றுக் குட்டியைத் துரத்திக் கொண்டு, நடுச் சாலையில் ஓடுவது? நாலு பேர் சிரிக்க மாட்டார்களா?" என்றாள்.

"சிரித்தால் சிரிக்கட்டும், டீச்சர்! சிரிப்பு உடம்புக்கு நல்லது என்று நீங்களே சொல்லி யிருக்கிறீர்களே! என்னைப் பார்த்துச் சிரிப்பதால் நாலு பேருக்கு உடம்பு குணமானால் நல்லது தானே? அது போகட்டும்; உங்களுக்கு எப்படி அதற்குள் தெரிந்தது? புதிதாகச் செய்தி சொல்லப் போகிறோம் என்று எண்ணிக் கொண்டல்லவா ஆவலோடு வந்தேன்?" என்றேன்.

"நேற்று சாயங்காலம் அரண்மனைக்குப் போயிருந்தபோது தெரிந்தது. நேற்றெல்லாம் அரண்மனையில் இதைப் பற்றித்தான் பேச்சு!"

"எதைப் பற்றிப் பேச்சு?"

"எதைப் பற்றியா? நீ மோட்டார் அடியில் விழுந்து உயிரை விடப் பார்த்தாயாமே? அதைப்பற்றித்தான்! அந்தப் பிள்ளை கூட என்னைக் கேட்டான்: 'வீட்டில் ஏதாவது அவளுக்குச் சண்டையா? கோபித்துக் கொண்டு வந்து கார் அடியில்விழுந்து சாக நினைத்தாளா?' என்றான். 'அப்படி யெல்லாம் ஒன்றுமில்லை; வீட்டுக்கு அவள் செல்லப் பெண்; தாய் தகப்பனின் அருமைக் கண்மணி; ஆனால் கொஞ்சம் துருதுருப்புள்ளவள்' என்று சொன்னேன். அப்புறம் உன் தாய் தகப்பனாரைப் பற்றியும் அந்தப் பிள்ளை கேட்டான்......"

"இம்மாதிரி யெல்லாம் அநாவசியமாகக் கேள்வி கேட்ட பேர்வழி யார்? 'அந்தப் பிள்ளை' 'அந்தப் பிள்ளை' என்கிறீர்களே? அவருக்கு வேறு பெயர் கிடையாதா?" என்றேன்.

"இல்லாமல் என்ன? அவன் பெயர் ரங்கதுரையாம். நம் ஜமீன்தார் தங்க பாண்டியனுடன் கலாசாலையில் படிக்கிறானாம். இரண்டு பேரும் நெருங்கிய சிநேகிதர்களாம். விடுமுறையில் தன்னுடன் வந்து தங்கி இருக்க வேண்டும்

என்று வற்புறுத்தித் தங்க பாண்டியன் அழைத்து வந்திருக்கிறார். இது அந்த யம ராட்சதனுக்குப் பொறுக்கவில்லை!"

"யம ராட்சதனா? அது யார்?"

"யார் என்று நீதான் சொல்லேன்? வேறு யாராக இருக்க முடியும்? தங்க பாண்டியனுடைய மாமன் சொக்கையா தான். நாங்கள் பேசிக் கொண்டிருக்கும் போதே அந்தச் சைத்தான் வாசலில் வரும் சத்தம் கேட்டது. நான் உடனே எழுந்து பின் கட்டுக்குப் போய் விட்டேன். அப்புறம் அரண்மனையில் அரை மணி நேரம் ஒரே அமர்க்களமாயிருந்தது. மாமனுக்கும் மருமகனுக்கும் ஏகச் சண்டை; கூச்சல்; இரைச்சல்; ஒருவருக்கு மேல் ஒருவர் சத்தம் போட்டுப் பேசினார்கள். அந்தப்புரத்திலிருந்த பெண்கள் — குழந்தைகளுக் கெல்லாம் ஒரே கவலையாய்ப் போய் விட்டது!"

"மாமனும் மருமகனும் எதற்காகச் சண்டை போட்டார்கள்?"

"சொக்கையாவுக்கு ரங்க துரையின் முகத்தைப் பார்த்தாலே பிடிக்கவில்லையாம்! அந்தப் பிள்ளையின் முகத்தில் பால் வடிகிறது! அவனுடைய முகம் இந்த ராட்சதனுக்கு எப்படிப் பிடிக்கும்? 'வழியில் போகிற அநாதைப் பயல்களையெல்லாம் விருந்தாளியாக அழைத்துக் கொண்டு வந்து விடுகிறதா? நம்முடைய கௌரவம் என்ன? அந்தஸ்து என்ன? உன் அப்பா இப்படிச் செய்துதான் துர்க்கதிக்கு ஆளானார்!' என்றெல்லாம் இரைந்தான். தங்க பாண்டியன் சும்மா இருக்கவில்லை. சுடச்சுடப் பதில் சொன்னார். 'அந்தஸ்து - கௌரவம் என்பதெல்லாம் வெறும் போலிப் பேச்சு. ஜமீன்தார் என்றால் உயர்ந்தவர், மற்றவர்கள் தாழ்ந்தவர்கள் என்பது பழைய காலத்துக் கதை. பணக்காரன் - ஏழை என்ற வித்தியாசமே இந்த நாளில் கிடையாது. எல்லாரும் சமம்!' என்று இந்தத் தோரணையில் தங்க பாண்டியன் பேசினார். அடே அப்பா! அந்த சாதுப் பிள்ளை இப்போது எவ்வளவு தைரியசாலியாகி விட்டார்! 'எனக்குப் பிடித்தமான சிநேகிதனை நான் அப்படித்தான் அழைத்துக் கொண்டு வருவேன். ஒரு மாதம் ரங்க துரை இங்கேதான் இருக்கப் போகிறான். உங்களுக்கு அது பிடிக்கா விட்டால் நீங்கள் ஒரு மாதத்துக்கு வேறு எங்கே யாவது போய் விட்டு வாருங்கள்!' என்றார். இதைக் கேட்டதும் எனக்கே தூக்கிவாரிப் போட்டு விட்டது!"



"இதையெல்லாம் அவருடைய சிநேகிதர் ரங்கதுரையும் கேட்டுக் கொண்டிருந்தாரா, என்ன?"

அவருடையபெயர் ரங்கதுரை என்று அறிந்தபோது மனதிற்குள் அதை அடிக்கடி சொல்லிப் பார்த்துக் கொண்டிருந்தேன். இப்போது நாவினால் உச்சரித்த போது வாய் இனித்தது!

"இல்லை, இல்லை! நல்ல வேளையாகச் சொக்கையா வந்தவுடனேயே ரங்கதுரை ஊரைச் சுற்றிப் பார்த்து விட்டு வருகிறேன் என்று சொல்லிப் போய் விட்டான். மாமன் - மருமகன் சண்டையைக் கேட்டிருந்தால் ரொம்ப சங்கடப் பட்டுப் போயிருப்பான்."

"பிற்பாடு கேள்விப்பட்டாலும் அவருக்குச் சங்கடமாகத்தான் இருக்கும். உடனே புறப்பட்டு ஊருக்குப் போய் விடலாம் என்று தோன்றும்!"

"அப்படி யெல்லாம் ரங்கதுரை போய் விடமாட்டான், அது மட்டும் நிச்சயம். அரண்மனையிலிருந்து நான் கிளம்பிய போது அவன் எதிரில் வந்து கொண்டிருந்தான். இந்த ஊர் அவனுக்கு ரொம்பப் பிடித்திருக்கிறதாம். இந்த ஊரில் உள்ளவர்களையும் பிடித்திருக்கிறதாம்!"

இப்படிச் சொல்லிப் புன்னகை புரிந்து விட்டு வாத்தியார் அம்மாள் "ரங்க துரை இந்த வீட்டுக்கு வருவதாகக்கூடச் சொல்லியிருக்கிறான். நானும் அவனுக்கு இந்த வீட்டு அடையாளம் சொல்லி யிருக்கிறேன்!" என்றாள்.

என் உடம்பு ஏன் சிலிர்த்தது? என் மனத்தில் அந்தக் குதூகலம் ஏன் உண்டாயிற்று? இந்த வீட்டுக்கு அவர் வருவதாக இருந்தால், நமக்கும் அவரைப் பார்க்க ஒரு வாய்ப்புக் கிடைக்கும் என்ற எண்ணந்தான் காரணம்! ஆனால் அதில் என்ன அவ்வளவு சந்தோஷம்? முன் பின் தெரியாத ஒருவரைப் பார்க்க நான் ஏன் ஆவல் கொள்ள வேண்டும்?

அந்தக் காரணங்களை நான் ஆராய வில்லை. ஆராய்ந்திருந்தாலும் காரணம் கண்டு பிடித்திருக்க முடியாது. அருவி மலைமேலிருந்து ஏன் கீழே விழுகிறது? ஓடை நீர், மேட்டிலிருந்து ஏன் பள்ளத்தில் பாய்கிறது? இளந் தென்றல் வீசும் போது மாந்தளிர்கள் ஏன் சிலு சிலுக்கின்றன? மலர்கள் விரிந்ததும் வண்டுகள் வந்து ஏன் வட்டமிடுகின்றன? வஸந்த காலம் வந்ததும் இயற்கை அரசி ஏன் குதூகல மடைகிறாள்? இதற்கெல்லாம் காரணம் இல்லாததுபோல், என் மனத்தில் எழுந்த ஆர்வத்துக்கும் காரணம் சொல்ல முடியாதுதான்.

"இந்து! இங்கேயே சாப்பிடேன்! இன்று சைவச் சமையல்தான்!" என்றார் வாத்தியார் அம்மாள்.

"இல்லை, டீச்சர்! அம்மா எனக்காகக் காத்துக் கொண்டிருப்பாள்!" என்று சொல்லி விட்டுப் புறப்பட்டேன்.

## அத்தியாயம் 24

# "அஜந்தாச் சித்திரம்"

ஆசிரியை அம்மாளின் இல்லத்திலிருந்து புறப்பட்டு வந்த வழியாக என் வீடு நோக்கிச் சென்றேன். இப்போது நான் அவ்வளவாக அவசரப்படவில்லை. அவசரமாகப் போய் ஆக வேண்டிய காரியமும் ஒன்றுமில்லை.

> "வள்ளிகணவன் பேரை
> வழிப்போக்கர் சொன்னாலும்
> உள்ளம் குழையுதடி—கிளியே
> ஊனும் உருகுதடி!"

என்ற கிளிக்கண்ணியை என் தந்தை அடிக்கடி பாடிக் கொண்டிருப்பார். நானும் அந்த வரிகளை இப்போது முணு முணுத்துக் கொண்டே நடந்தேன். அந்தப் பாடலின் பொருள் எனக்கு இப்போதுதான் நன்கு விளங்கியது.

"ரங்கதுரை" "ரங்கதுரை" "ரங்க துரை" என்று வாய் விட்டுச் சொல்லிப் பார்த்துக் கொண்டேன். ஆகா! எத்தனை இனிமையான பெயர்? கிளி ஒன்று வளர்க்க வேண்டும்; அதற்கு இந்தப் பெயரைச் சொல்லிக் கொடுக்க வேண்டும். அது அடிக்கடி 'ரங்கதுரை' 'ரங்க துரை' என்று கூப்பிடும். அதனிடம் போய், "ஏ! கிளியே! அந்தப் பெயரை என் காது கேட்கச் சொல்லாதே!" என்று அதட்ட வேண்டும்......

முன்பின் தெரியாத ஒரு மனிதரைப் பற்றி இப்படி எண்ணமிட்டுக் கொண்டு போகிறோமே என்ற நினைவே அப்போது எனக்குத் தோன்றவில்லை. அது தகுதியற்ற காரியம் என்ற நினைவு சிறிது கூட இல்லை. அவரைப் பற்றி நான் சிந்திப்பதற்கு இயற்கையான காரணம் இருந்தது. உயிருக்கே அபாயம் விளைவிக்கக் கூடிய அபாயம் ஒன்றில் சிக்கிக் கொண் டிருந்தேன். அதில் சாகாமல் தப்பிப் பிழைத்தேன். அந்தச் சம்பவம் என் மனத்தில் ஒரு அதிர்ச்சியை உண்டாக்கி யிருந்தது. அப்படிப் பட்ட நிகழ்ச்சி பற்றியும், அதில் சம்பந்தப் பட்டவர்களைக் குறித்தும் அடிக்கடி எண்ணமிடுவது இயற்கையே அல்லவா?

ஒற்றையடிப் பாதையில், அடர்ந்த மரக் கிளைகள் விரித்த குளிர்ந்த நிழலில் நடந்து கொண்டிருந்தேன். மரங்களின் அடர்த்தி சிறிது குன்றி இடைவெளி தெரிந்த இடம் ஒன்று வந்தது. அந்த இடைவெளியைத் தாண்டியதும் வெகு நாட்பட்ட பழைய மரம் ஒன்று இருந்தது; அதை நோக்கி எதிரே பார்த்துக் கொண்டு நடந்தேன். ஆனால் எதிரே இருந்த பொருள்கள் கூட என் கண்ணுக்குப் புலப்பட்டுக் கவனத்தில் அவ்வளவாக வந்திருக்க முடியாது. ஏனெனில் என் சிந்தனை யெல்லாம் வேறு எங்கேயோ இருந்தது.

அந்தப் பழைய மரத்தடிக்கு வந்ததும் மேலே 'உர்' 'உர்' என்று சத்தம் கேட்டுத் திடுக்கிட்டேன். என் தலைக்கு மேல் மரக் கிளையில் குரங்கு ஒன்று இருப்பதை உள்ளுணர்ச்சியினால் அறிந்தேன்.

குரங்கு என்றால் மட்டும் எப்போதும் எனக்குக் கொஞ்சம் அச்சந்தான். குங்குமத்துறைக் குரங்குகள் மிக்க சாதுவானவை; ஒருவரையும் ஒன்றும் செய்வதில்லை. கையிலே வாழைப் பழம் வைத்துக்கொண்டு அழைத்தால் அருகில் வந்து கையை நீட்டி வாங்கிக்கொண்டுபோகும். ஆனாலும் குரங்கு அருகில் வரும்போது சிறிது அச்சமாகவே இருக்கும். 'குரங்குப் புத்தி' என்று சொல்கிறார்கள் அல்லவா? திடீரென்று ஒரு நாள் மேலே பாய்ந்து பிறாண்டினாலும் பிறாண்டும். இந்தத் தோட்டத்தில் சாதாரணமாகக் குரங்குகள் வருவதில்லை. இப்போது ஏதோ ஒரு குரங்கு தெறிகெட்டு வந்திருக்கிறது. அதை அண்ணாந்து பார்க்கவே நான் விரும்ப வில்லை. பார்த்தால் திடீரென்று மேலே பாய்ந்தாலும் பாய்ந்து விடும்; யார் கண்டது?

ஆமாம்; மேலே அண்ணாந்து பார்க்காமல் நாலு அடி நடந்தேன்.

"வா! வா! துணை ஒருவரும் இல்லையே என்று பார்த்தேன்!"

இந்த வார்த்தைகள் காதில் விழுந்ததும் எனக்கு மெய் சிலிர்த்தது.

குரல் வந்த திசையை நோக்கினேன். அந்தப் பழம் பெரும் விருட்சத்தின் முதற் கிளை பிரியும் இடத்தில் அவர் சாய்ந்து உட்கார்ந்து கொண்டிருந்தார். 'அவர்' என்ன? ரங்கதுரைதான்! நான் அவரைப் பார்த்தபோது அவரும் என்னை நோக்கினார். புன் சிரிப்பில் மலர்ந்த அவருடைய முகம் ஒரு கணம் என் கண் முன்னால் தெரிந்தது. அவர் கையில் விரித்து வைத்திருந்த புத்தகம் நழுவித் தொப்பென்று கீழே விழுந்தது.

மலைப் பாறை ஒன்று சரிந்து விழுந்தாற்போன்ற அதிர்ச்சியை அது உண்டாக்கியது. என் கண்கள் தரையில் கிடந்த புத்தகத்தை நோக்கின.

"மன்னிக்க வேண்டும். நான் உன்னுடன் பேசவில்லை. இந்தக் குரங்குடன் பேசினேன்!" என்ற வார்த்தைகள் கனவில் கேட்பது போல் காதில் விழுந்தன.

வெட்கமும் ஆத்திரமும் என்னைப் பிடுங்கித் தின்றன. அவர் என்னைக் குரங்கு என்று சொல்கிறாரோ என்று சந்தேகித்தேன். என் கால்கள் என்னை மேலே அழைத்துக் கொண்டு சென்றன. அந்த இடத்திலேயே நின்று அவரைப் பார்த்துச் சுடச் சுடப் பதில் சொல்ல வேண்டுமென்று தோன்றியது; அதற்கென்னவோ தைரியம் வரவில்லை.

அந்த மரத்துக்குச் சற்றுத் தூரத்திலிருந்த புன்னை மரத்தடிக்குச் சென்றதும் என் கால்களுக்கு முட்டுக் கட்டை போட்டு நிறுத்தினேன். அங்கே நின்று அவர் என்ன செய்கிறார் என்பதைக் கவனிக்க வேண்டும் என்று தோன்றியது. தரையில் விழுந்த புத்தகத்தை எடுப்பதற்காகக் கீழே இறங்கத்தான் வேண்டும். அப்புறம் என்ன செய்வார்?...

எதற்காக அவ்வளவு அவசரப்பட்டுக் கொண்டு ஓடி வந்தோம்? அந்தப் புத்தகத்தை எடுத்து நாமே அவர் கையில் கொடுத்திருக்கலாமே?...

என்னத்திற்காகக் கொடுத் திருக்க வேண்டும்? அதை அவர் விரும்பி யிருப்பாரோ, என்னமோ? 'இந்தப் பெண் கொஞ்சம் கூடக் கூச்சம் இல்லாதவளாயிருக்கிறாளே!' என்று எண்ணிக்கொண்டிருக்கலாம் அல்லவா?......

அப்படி எண்ணிக் கொண்டிருந்தால் என்ன குடி முழுகிப் போய் விடும்?...

புன்னை மரத்தின் அடியில் நிற்பதற்கு இப்போது நானே ஒரு காரணத்தை ஏற்படுத்திக் கொண்டேன்.

அங்கே தரையில் உதிர்ந்து வெண் முத்துக்கள் சிதறினாற் போற் கிடந்த புன்னை மொட்டுக்களையும் பூக்களையும் பொறுக்கத் தொடங்கினேன். பொறுக்கிய மலர்களை மடியில் கட்டிக் கொண்டேன். பின்னர், பூவும் மொட்டும் இளந் தளிர்களுமாகக் குலுங்கிய ஒரு சிறிய கிளையின் நுனியை ஒடித்துக் கொண்டேன். புன்னை மரத்தின் தாழ்ந்த கிளை ஒன்றைப் பிடித்துக் கொண்டு, ஒடித்த பூங்கொத்தைக் கையில் வைத்து அழகு பார்க்கவும், அதன் மணத்தை முகர்ந்து அநுபவிக்கவும் தொடங்கினேன்.

பின்னால், அவர் மரத்திலிருந்து இறங்கினாரா, இல்லையா, இறங்கி யிருந்தால் இந்தப் பக்கம் வருகிறாரா என்று தெரிந்து கொள்ள ஆவலா யிருந்தது. ஆனால் திரும்பிப் பார்க்கவும் மனம் இடங் கொடுக்கவில்லை. சற்று யோசித்த பின்னர், சிறிது முகத்தைத் திருப்பி அருகில் ரீங்காரமிட்டுக் கொண்டு வந்த தேனீயைத் தாவணியின் தலைப்பினால் விரட்டிக் கொண்டே கடைக் கண்ணால் பின்னால் பார்த்தேன்.

அந்த மனிதரை மரத்தடியில் காணோம்.

அப்போது எனக்கு ஏற்பட்ட ஏமாற்றத்துக்கும் மனச் சோர்வுக்கும் சிறிதும் காரணம் சொல்ல முடியாது.

சுத்தப் பைத்தியக்காரத்தனம்! இங்கே எதற்காக நிற்கிறோம்? அம்மா காத்துக் கொண்டிருப்பாள். போக வேண்டியதுதான்!......

ஆனாலும் மேலே நடந்து போவதற்குக் காலில் பலம் இருந்தால் தானே? திடீரென்று ஏன் கால்கள் இப்படிச் சக்தி இழந்து துவளுகின்றன?......

எப்படி வந்தாரோ, தெரியவில்லை! சட்டென்று அவர் என் முன்னால் தோன்றினார். மேலும் கீழுமாக என்னை உற்றுப் பார்த்துக் கொண்டே நின்றார். அம்மம்மா! என்ன கூர்மையான கண்கள்! கண்ணின் பார்வையினால் நெஞ்சை ஊடுருவுகிறது என்று சொல்லுகிறது இதைத்தான் போலும்!

வெட்கமும் வியப்பும் மகிழ்ச்சியும் ஆத்திரமும் என் மனத்தில் பொங்கிக் கொண்டிருந்தன.

ஏதாவது அவர் சொல்லுவார், அதற்குச் சரியான பதில் கூறலாம் என்று எண்ணினேன். ஆனால் அவர் வாயைத் திறந்து ஒரு வார்த்தை கூடப் பேசுகிறதாகவே தோன்றவில்லை.

கதைகளிலும் காவியங்களிலும் "கண்ணோடு கண்கள் பேசின" என்று வர்ணித்திருப்பதைப் படித்து விட்டு, இவரும் இப்படி நடக்கிறார் என்று தோன்றியது.

என் உள்ளத்தில் பரபரப்பு அதிகமாகி வந்தது. மௌனம் சாதிக்க முடியவில்லை.

"ஏன் இப்படி உற்றுப் பார்த்துக் கொண்டு நிற்கிறீர்கள்? பேசத் தெரியாதா? திடீரென்று ஊமையாகி விட்டீர்களா? வழியை விடுங்கள்! நான் போக வேண்டும்!" என்றேன்.

உடனே அவர் காணாத காட்சியைக் கண்டு அதிசயக் கடலில் மூழ்கியவரைப் போல் கண்ணிமைகளை அகல விரித்துப் பார்த்து, "ஓகோ! பேசும் பெண்மணிதானா நீ? அஜந்தாச் சித்திரம் என்றல்லவா நினைத்தேன்?" என்றார்.

அஜந்தாச் சித்திரம் என்றால் என்னவென்று அப்போது எனக்குத் தெரிந்திருக்கவில்லை. ஒரு பெண்ணின் மேனி அழகை எவ்வளவு சிறப்பாகப் புகழலாமோ அப்படி அவர் புகழ்ந்திருக்கிறார் என்பதையும் நான் அச்சமயம் அறிந்து கொள்ளவில்லை. ஏதோ பரிகாசம் செய்கிறார் என்று தோன்றியது. அவர் முகத்தில் மலர்ந்திருந்த குறும்புப் புன்னகை அந்த எண்ணத்தை வலுப்படுத்தியது.

பதிலுக்கு நானும் ஏதேனும் சொல்ல வேண்டும் என்று எண்ணினேன்.

"நான்கூட உங்களைப் பற்றி வேறு விதமாகச் சற்று முன்னால் சந்தேகப்பட்டேன்!" என்றேன்.

"என்னவென்று சந்தேகப்பட்டாய்?"

"எங்கள் ஊரில் மரக் கிளைகளின் மீது ஏறி உட்கார்ந்திருந்தால்......"

மேலே சொல்லத் தயங்கினேன்.

"நன்றாகச் சொல்லு! உங்கள் ஊரில் குரங்குகள்தான் மரக் கிளைகளில் ஏறி உட்கார்ந்திருப்பது வழக்கம். என்னைக் குரங்கு என்று நினைத்தாய் போலிருக்கிறது! அப்படித்தானே?"

"நான் ஒன்றும் உங்களைக் 'குரங்கு' என்று சொல்லவில்லை. நீங்களே சொல்லிக் கொள்கிறீர்கள்."

"யார் இல்லை என்றார்கள்? அதனாலேதான் என்னைத் தேடி வந்த குரங்கை 'வா! வா!' என்று அழைத்தேன். அதற்குள் நீ குறுக்கே வந்து காரியத்தைக் கெடுத்து விட்டாய்!"

"நான் என்ன கெடுத்து விட்டேன்? நீங்கள் ஏன் அந்த மரத்திலிருந்து கீழே இறங்கினீர்கள்?"

"உன்னைத் திடீரென்று பார்த்த ஆச்சரியத்தினால் கையிலிருந்த புத்தகம் நழுவி விழுந்து விட்டது. அதை எடுப்பதற்காக இறங்கினேன்."

"திரும்பி ஏறிக் கொள்வதற்கு என்ன? என்னைத் தொடர்ந்து வருவானேன்?"

"நீ இங்கே நிற்கிறாயே, எதற்காக என்று பார்க்க வந்தேன்."

"நான் உங்களுக்காக நிற்கவில்லை."

"நான் உனக்காகத்தான் வந்தேன்."

இதற்கு என்ன பதில் சொல்வதென்று எனக்குத் தெரியவில்லை. பேசாமலிருந்தேன். அவரும் பேசாமல் என்னைப் பார்த்துக் கொண்டே நின்றார்.

"ஏன் பேசாமல் நிற்கிறீர்கள்?" என்று கேட்டேன்.

"பேசுக் கிடம் ஏதடீ!—நீ
பெண்குலத்தின் வெற்றியடீ!"

என்று பாடினார் அவர்.

இது கவியரசர் பாரதியாரின் பாடல் என்று அறிந்திருந்தேன். ஆகையால் கேலிச் சிரிப்புடன், "உங்களுக்குச் சொந்தமாக ஒன்றும் சொல்லத் தெரியாதா?" என்று கேட்டேன்.



## நீங்கள் இன்று

## உங்கள் பற்களை

# மக்ளீன்

## செய்தீர்களா?



ஆம் நான் இன்று என் பற்களை மக்ளீன்ஸ் பற்பசையைக் கொண்டு சுத்தம் செய்தேன். வசீகரம் வாய்ந்த புன்னகைக்கு ஆரோக்கியமான பற்கள் அத்தியாவசியம் ஆகையால் தான் நான் பிரிதி தினமும் இரு முறை எனது பற்களை மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையைக்கொண்டு சுத்தம் செய்கிறேன். மக்ளீன்ஸிலுள்ள ஒரு தனிப்பட்ட பொருள் பற்களின் மேல் படிந்துள்ள மங்கலான பூச்சை நீக்கி பற்களுக்கு இயற்கையாக ஒளிரும் வெண்மையைக் கொணர்கிறது. அதிக வெண்மையான பற்கள், கெட்டியான ஈரு மற்றும் நறுமணமுள்ள சுவாசத்திற்கு மக்ளீன்ஸ் பற்பசையையே உபயோகியுங்கள்.



"எவ்வளவோ எனக்குத் தெரியும். ஆனால் உன் முகத்தைப் பார்த்ததும் எல்லாம் மறந்து போய் விடுகிறது!"

"நான் பள்ளிக்கூடத்தில் படித்த போது எங்கள் வாத்தியார் அம்மாள் சொல்லுவாள்; 'வகுப்பில் நான் கேள்வி கேட்கும் போது எல்லாரும் பளிச்சுப் பளிச்சென்று பதில் சொல்லுகிறீர்கள். இன்ஸ்பெக்டரஸ் அம்மாள் முகத்தைப் பார்த்ததும் எல்லாம் மறந்து போய் விடுகிறதே!' என்பாள்."

"உங்கள் பள்ளிக்கூடத்துக்கு வந்த இன்ஸ்பெக்டரஸ் அம்மாளின் முகம் அவ்வளவு அழகாயிருந்ததா, என்ன?"

என் கண் முன்னால் ஒரு கோடி நட்சத்திரங்கள் ஜொலித்தன. என் மேனியெங்கும் பதினாயிரம் புஷ்பங்கள் மலர்ந்தன. தேவலோகத்துக் கீத வாத்தியங்களின் இன்னிசை கான மழையாக வந்து என் காதில் பொழிந்தது.

மெதுவாகச் சமாளித்துக் கொண்டு, "உங்கள் கையில் இருக்கிற புத்தகம் என்ன புத்தகம்?" என்று கேட்டேன்.

"நீயே பார்த்துத் தெரிந்து கொள்!" என்று புத்தகத்தை நீட்டினார்.

அதைப் பெற்றுக் கொள்ள நான் தயக்கத்துடன் கையை நீட்டினேன். அப்போது என் கரத்தில் அணிந்திருந்த இரண்டு பொன் வளையல்களும் என்றுமில்லாத மெருகு பெற்று ஜொலித்தன.

புத்தகத்தை அவரிடமிருந்து வாங்கிக் கொண்ட போது வர்ணிக்க முடியாத மதுரம் ததும்பிய அமுத தாரை என் கை விரல்கள் வழியாக உடம்பெல்லாம் பாய்ந்து பூரிக்கச் செய்தது.

புத்தகத்தை நான் பிரித்துப் பார்க்கவில்லை; என்ன புத்தகம் என்று அட்டையைக் கூடப் பார்க்கவில்லை.

"புத்தகத்தை எப்படித் திருப்பிக் கொடுப்பது?" என்று கேட்டேன்.

"நானே உன் வீட்டுக்கு வந்து வாங்கிக் கொள்கிறேன்."

"எப்போது வருவீர்கள்?"

"இன்று சாயங்காலமே வருவேன். தங்க பாண்டியன் அழைத்துப் போவதாகச் சொல்லியிருக்கிறான். உங்கள் வீட்டுக்கு வந்து உனக்கு நேற்றுக் காயம் ஒன்றும் படவில்லையே என்று தெரிந்துகொள்ள எண்ணியிருந்தோம்."

"இப்போதுதான் அதைத் தெரிந்து கொண்டாகி விட்டதே?" என்றேன்.

"இன்னொரு தடவை தங்க பாண்டியனும் நானுமாக வந்து விசாரிக்கிறோம். உனக்கு என்ன நஷ்டம்?"

"தங்க பாண்டியனா? அவர் எங்கள் வீட்டுக்கு வர மாட்டாரே?"

"ஏன் வரமாட்டார்?"

"அவர் குடும்பத்துக்கும் எங்கள் குடும்பத்துக்கும் நெடுநாள் மனஸ்தாபம்."

"தங்க பாண்டியனுடைய மாமனைப் பற்றி நீ சொல்கிறாய். இன்னும் ஒரு வருஷத்துக்கெல்லாம் தங்கபாண்டியன் அதிகாரத்துக்கு வந்து விடுவான். சொக்கையா இருந்த இடம் தெரியாமல் போய் விடுவான்."

"தங்கபாண்டியனுக்கும் எங்களை அவ்வளவாகப் பிடிக்காது."

"இல்லவே இல்லை. நீ சொல்லுவது தவறு. உன் தகப்பனாரைப் பற்றித் தங்க பாண்டியன் புகழும் புகழ்ச்சிக்கு அளவேயில்லை. மெத்தப் படித்தவர், மிக்க அறிவாளி, தர்ம தாதா, குணக் குன்று என்றெல்லாம் வர்ணிக்கிறான். தகப்பனாரைப் பற்றி இப்படி எண்ணம் வைத்திருப்பவன் மகளிடத்திலும் மதிப்பு வைத்திருக்க வேண்டும் அல்லவா?"

"அவர் வர்ணிப்பதெல்லாம் என் வளர்ப்புத் தந்தை மந்திர மூர்த்தியைப் பற்றித்தான் இருக்க வேண்டும்."

"மந்திர மூர்த்தி உன்னை வளர்த்த தந்தையா? சொந்தத் தந்தை வேறு ஒருவர் உண்டா?" என்று அவர் மிக்க ஆச்சரியப்பட்டவர் போலக் கேட்டார்.

அந்த ஆச்சரியம் வேண்டுமென்று வருவித்துக் கொண்ட ஆச்சரியமோ என்று சந்தேகித்தேன். இவ்வளவு கேள்விப்பட்டவர் அதைப் பற்றியும் கேள்விப் படாமலா இருப்பார்? பரிகாசம் செய்கிறாரா, என்ன? அதற்கெல்லாம் நான் பயந்து போகிறவள் அல்ல.

"ஆமாம்; என் சொந்தத் தந்தை வேறொருவர் உண்டு. அவர் எங்களை விட்டுப் போய்ப் பத்துப் பன்னிரண்டு வருஷத்துக்கு மேலாகி விட்டது. என்னையும் என்னுடைய தாயாரையும் மந்திர மூர்த்தியின் வள்ளல் குணம்தான் காப்பாற்றி வருகிறது."

"நானும் இப்படி ஏதோ கேள்விப் பட்டேன். அது உண்மைதானா என்று தெரிந்து கொள்ள விரும்பினேன். அவ்

வளவு பெருங் குணம் படைத்த மந்திர மூர்த்தியை அவசியம் நான் வந்து பார்க்க வேண்டும். உன் சொந்தத் தந்தையைப் பற்றி அவர் போன பிற்பாடு ஒரு தகவலும் கிடைக்கவில்லையா ?"

"ஒரு தகவலும் இல்லை. அவர் உயிரோடிருக்கிறாரா, இல்லையா என்று கூடத் தெரியவில்லை !"

இப்படிச் சொன்னபோது என் கண்களில் கண்ணீர் துளித்தது எனக்கே வியப்பை அளித்தது.

இதற்கு முன்பு எத்தனையோ தடவை என் தந்தையைப் பற்றி அம்மாவிடமும் மந்திரமூர்த்திப் பண்ணையாரிடமும் பேசியிருக்கிறேன். அப்போதெல்லாம் கண்ணீர் வந்ததில்லை. இன்றைக்கு இந்த அன்னிய மனிதரிடம் பேசும்போது ஏன் கண்ணீர் வருகிறது? ஏன் தொண்டை அடைத்து விம்முகிறது ?

"எத்தனையோ காலத்துக்கு முன்னால் நடந்தது பற்றி இப்போது நினைத்து வருத்தப்பட்டுப் பயன் என்ன ?" என்று கேட்டார் ரங்கதுரை.

நான் கண்களைத் துடைத்துக் கொண்டு "நேரமாகி விட்டது; போய் வருகிறேன். சாயங்காலம் புத்தகத்தை வாங்கிக் கொள்ள நிச்சயம் எங்கள் வீட்டுக்கு வருவீர்கள் அல்லவா?" என்றேன்.

"கட்டாயம் வருகிறேன். புத்தகம் என்ன புத்தகம் என்றுகூட நீ பார்க்கவில்லையே ?" என்றார் ரங்கதுரை.

புத்தகத்தின் அட்டையைப் பார்த்தேன். டாக்டர் ரவீந்திரநாத டாகூரின் கதைப் புத்தகம் என்று தெரிந்தது. புத்தகத்தின் பெயரை உரக்க வாசித்தேன்.

"உனக்கு இங்கிலீஷ் கூடத் தெரியுமா ?" என்று கேட்டார்.

"கொஞ்சம் தெரியும். டாகூரின் கதைகளும் எனக்குப் பிடிக்கும். ஆனால் இவ்வளவு பெரிய புத்தகம் புரியுமோ என்னமோ தெரியாது !"

"புரியாவிட்டால் பாதகமில்லை. நான் இன்னும் ஒரு மாதம் இங்கேதான் இருக்கப் போகிறேன். தினம் உன் வீட்டுக்கு வந்து படித்து அர்த்தம் சொல்கிறேன் !" என்றார் ரங்கதுரை.

அந்த வார்த்தைகளைக் கேட்டதும் என் நெஞ்சம் எதற்காக அப்படிப் படபட வென்று அடித்துக் கொள்ள வேண்டும்? எவ்வளவோ யோசனை செய்தும் எனக்குப் புரியவில்லை. இதன் காரணத்தை அவரால் புரிய வைக்க முடியுமா?

பாதிரித் தோட்டத்து ஒற்றையடிப் பாதை கொஞ்ச தூரம் போனதும் இரண்டு கிளையாகப் பிரிந்தது. ஒன்று எங்கள் வீட்டுக்குச் சென்றது. இன்னொரு பாதை ஜமீன்தாரின் அரண்மனைப் பக்கம் போயிற்று.

அங்கே அவரும் நானும் பிரிந்து வெவ்வேறு வழியில் சென்றோம்.

"மாலையில் வருவார்! மாலையில் வருவார் !" என்று என் உள்ளம் சொல்லிக் கொண்டிருந்தது.

'இன்றைக்கு மந்திரமூர்த்தி ஊரில் இல்லை, சாயங்காலம் வந்தால் அவரைக் காண முடியாது' என்பதை அவரிடம் நான் சொல்லத் தவறி விட்டது அப்பொழுதுதான் நினைவுக்கு வந்தது.

"ஏன் சொல்லத் தவறி விட்டோம்?" என்ற கேள்வி அடிக்கடி என் மனத்தில் எழுந்து கொண்டிருந்தது. (தொடரும்)

அட்டைப்பட விளக்கம்

## அன்பும் ஆட்டுக் குட்டியும்

ஆண்டவன் படைப்பிலேயுள்ள ஜீவராசிகளை எடுத்துக் கொண்டால் கணக்கு எண்ணித் தொலையாது. அத்தனை ஜீவராசிகளிலும் வைத்து, ஆட்டுக் குட்டிக்கு இணை ஒன்றும் கிடையாது என்று சொல்லத் தோன்றுகிறது. அதன் மருண்ட பார்வையும், சாதுவான முகக் களையும், 'அம்மே' என்று உள்ளத்தில் இரக்கம் பெருகச் செய்யும் சத்தமும் வேறு எந்தப் பிராணிக்கு உண்டு? அதனால்தான் அதைப் பார்த்த மாத்திரத்தில் சாதாரண மக்கள் உள்ளத்தில்கூட அபரிமிதமான அன்பும் இரக்கமும் சுரந்து விடுகிறது. மகான்கள் உள்ளத்திலோ சொல்ல வேண்டாம்! பகவான் புத்தர் இந்த ஆட்டுக்குட்டிக்காகப் பரிந்து பேசி, பிம்பிசார மன்னனின் யாகத்தை நிறுத்திய அற்புத வரலாறு புத்தர் தோன்றிய கால முதல் இன்றுவரை உள்ளத்தை உருக்குவதாக இருக்கிறது!

பின், ஆட்டுக்குட்டியைப் பார்த்ததும் அந்தச் சின்னஞ் சிறு பெண்ணின் உள்ளத்திலே அன்பு பொங்கியதில் அதிசயம் என்ன இருக்கிறது? அந்த அன்பின் மெய்ப்பாடே அவளை அந்த ஆட்டுக் குட்டியை இரு கைகளாலும் எடுத்து மார்போடு அணைத்து வைத்துக் கொண்டு கொஞ்சிக் குலாவச் செய்திருக்கிறது!

பாரதியாரும், "**உங்களுக்குத் தொழிலிங்கே அன்பு செய்தல் கண்டீர்**" என்றே கூறினார்.

# உல்லாஸ தம்பதிகள்

# லோத்ரா

கர்ப்பாசய ரோக நிவாரணி




தமிழ் நாடு ஏஜண்டுகள் :

**சீதாராம ஜெனரல் ஸ்டோர்ஸ்**

மேல கோபுர வீதி :: மதுரை

---

# UPSET STOMACH

பிலிப்ஸ் தயாரிப்பான மில்க் ஆப் மக்னீஷியா, பித்தம், தலைவலி இதர அசௌகரியம் ஆகியவை போன்ற உணர்ச்சியை மூன்று விதங்களில் நிவர்த்திக்கிறது. (1) வயிற்றில் அமித அமிலச் சேர்க்கையை சமனப் படுத்துகிறது. (2) இதமான பலன் வாய்ந்த மலமிளக்கியாக வேலை செய்கிறது. (3) உங்கள் ஜீரணக் கருவிகள் அனைத்துக்கும் வலுவூட்டுகிறது. பிலிப்ஸ் இவை எல்லாவற்றையும் செய்வதால் — விரைவாக சரிவர செய்வதால் — நீங்கள் சீக்கிரமே குணம் காண்கிறீர்கள்! இனிய மணம் நிரம்பிய வில்லைகளாகவும் கிடைக்கும்.

428




**MILK OF MAGNESIA**

**A PRODUCT OF**

# PHILLIPS

# சித்திரங்கள் பேசுகின்றன!

சித்திரங்களுக்கு உயிர் ஊட்டி, நம் முன் நேருக்கு நேர் பேசவும், கதை சொல்லவும் செய்யும் சித்திரக் கலையின் சிறப்பை அறிந்து கொள்ளப் பானு சகோதரர்கள் ராஜாஜி மண்டபத்தில் வைத்திருக்கும் சித்திரக் கலைக் கண்காட்சியைப் பார்த்தால் போதும்.

காந்தி மகான் கைத்தடியைப் பிடித்து இழுத்துக் கொண்டு ஒரு சிறுவன் முன்னால் ஓடுகிறான். காந்தி மகான் மோகனப் புன்னகை புரிந்த வண்ணம் அந்தச் சிறுவன் பின்னால் செல்லும் காட்சியைக் காட்டும் சித்திரம். முகத்திலும் உடம்பின் ஒவ்வொரு நெளிவிலும் உற்சாகத்தைப் பிரதிபலிக்கும் தோற்றத்தில் காந்தி மகானுடன் சிலர் பம்பாய்க் கடற்கரையில் நடந்து செல்லும் காட்சி. மேற்படி சம்பவம் உண்மையிலேயே நம் முன் நிகழ்வது போன்ற பிரமையை நமக்குக் காட்டுகிறது.

அடுத்தாற்போல காந்தி மகான் வலக் கரத்தைத் தூக்கி ஆசீர்வதிப்பதுபோல் ஒரு சித்திரம். அதன் அடியில் காந்திஜி தமது குருநாதர் என்று போற்றிய "மூன்று குரங்குகள்" சித்திரத்தில் எழுதி வைத்திருக்கிறார்கள். இந்தச் சித்திரத்தின் வலது பக்கமாக நின்று பார்த்தால் அதே சித்திரம் புத்தர்பிரானாகத் தோற்றமளிக்கிறது. இடது பக்கத்தில் நின்று பார்த்தாலோ இயேசுநாதராகக் காட்சி தருகிறது.

இந்தமாதிரி சித்திர வித்தைகளுடன் இன்னும் முந்நூறுக்கு மேற்பட்ட சித்திரங்கள் இருக்கின்றன. பெரும் பகுதி காந்தி மகானின் புனித தியாக வாழ்க்கையைச் சித்திரிக்கும் ஓவியங்கள். இத்துடன் காங்கிரஸ் மகாசபையைக் கட்டி வளர்த்த புண்ணிய மூர்த்திகளின் திருவுருவங்கள், சுதந்திரப் போராட்ட நிகழ்ச்சிகள், சங்ககால இலக்கிய விளக்கங்கள், கம்பராமாயணக் காட்சிகள், புறநானூறு, திருக்குறள் முதலிய நூல்களில் இருந்து சில சித்திர விளக்கம் முதலியவைகளைக் கொண்டு ராஜாஜி மண்டபத்தில் விஸ்தாரமான கண் கவரும் காட்சியாக அமைத்திருக்கிறார்கள். இந்த அற்புதமான சித்திரக் காட்சித் திறப்பு விழாவைக் கலை நிபுணர்களான பானு சகோதரர்கள் பெரிய திருவிழாவாகவே நடத்தி விட்டார்கள்.

நவம்பர் 11-ந் தேதி முதல் நவம்பர் 17-ந்தேதி முடிய ஏழு தினங்களுக்கு வைத்திருந்த சித்திரக் கண் காட்சி பொது மக்களின் சௌகர்யத்துக்காக நவம்பர் 21-ந் தேதி வரையில் நீடிக்கப்பட்டிருக்கிறது.

தினம் தினம் ஆயிரக் கணக்கான மக்கள் கண்காட்சியைக் கண்டு களிக்கிறார்கள். கண்காட்சிக்குச் செலுத்தும் நுழைவுக் கட்டணம் காந்தி மகான் மணிமண்டப நிதியில் போய்ச் சேருகிறது. இச் சந்தர்ப்பத்தைப் பொது மக்கள் நன்கு பயன் படுத்திக் கொள்வார்கள் என்று நம்புகிறோம்.







சித்திரக் கண்காட்சியைப் பார்க்கும் போது நமக்கு முக்கியமாகத் தோன்றும் எண்ணம் என்னவென்றால், காங்கிரஸ் மகா சபை சுதந்திரம் பெறுவதற்குச் சாதித்த சாதனைகள், அந்தச் சாதனைகளை நிகழ்த்திய மகா புருஷர்களின் தியாகங்கள் எல்லாம் நினைவுக்கு வருகின்றன. இந்த எண்ணங்கள் நமது இதயங்களில் பசுமையாக இருக்கும்படி செய்து, காந்தி மகானுக்கு நல்ல ஞாபகார்த்தச் சித்திரக்கூடமாக அமைத்திருக்கும் பானு சகோதரர்களின் தேச பக்தியையும் கலை ஆர்வத்தையும் பாராட்டுகிறோம்.

ராஜாஜி மண்டபத்தில் முதல் நாள் நடந்த சித்திரக் கண்காட்சித் திறப்பு விழாக் காட்சிகள் சிலவற்றைப் படத்தில் காணலாம்.

# கம்பளிக் குல்லாய்






ஆர். எஸ். மணி

**ப**ள்ளிக்கூடம் முடிந்து விட்டது என்பதற்கு அறிகுறியாகக் 'கண' 'கண' வென்று மணி அடித்தது. வீட்டுக்குப் போகத் துடி துடித்துக் கொண்டிருந்த மாணவர்கள், புற்றிலிருந்து கிளம்பும் ஈசலைப் போல் விழுந்தடித்துக் கொண்டு வெளியே ஓடி வந்தார்கள். ராமுவும் தன்னுடைய பச்சைப் பையில் பலகையைத் திணித்துக் கொண்டே ஓடி வந்து பள்ளிக்கூட வாசலில் தயாராக நின்றிருந்த காரில் ஏறிக் கொண்டான்.

அதுவரை ராமுவையே கவனித்தவாறு நின்று கொண்டிருந்த முத்து சுய உணர்வு பெற்று வீட்டை நோக்கி நடக்கலானான். ஆயினும் அவன் மனம் மட்டும் ராமுவைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தது.

அன்று காலை பள்ளிக்கூடத்தில் வந்து சேர்ந்த ராமு அணிந்திருந்த நீல நிற நிஜாரையும், வெள்ளை அரைக் கைச் சட்டையையும் பிளாஸ்டிக் பெல்டையும் கண்டு உள்ளத்தைப் பறி கொடுத்தான் முத்து. அதே சமயத்தில் தன் கந்தல் உடைகளைப் பார்த்துக் கொண்டபோது அவமானத்தினாலும் வெட்கத்தினாலும் அவன் மனம் குன்றியது.

மாலை மூன்று மணி சுமாருக்கு வானம் இருண்டு சிலு சிலுவென்று காற்றடிக்க ஆரம்பித்தது. ராமு தன் பையிலிருந்த கம்பளிக் குல்லாயை எடுத்து அணிந்து கொண்டான்.

பச்சையும் சிவப்பும் கலந்த கம்பளி நூலினால் பின்னப்பட்டிருந்த கம்பளிக் குல்லாயைக் கண்டவுடன் அவன் உள்ளத்தில் அடங்கி இருந்த உணர்ச்சியும் ஆவலும் பொங்கி எழுந்தன. இம்மாதிரிக் குல்லாய் ஒன்று அவனுக்கும் இருந்தால் இந்தக் குளிர் காலத்துக்கு எவ்வளவு இதமாக இருக்கும்!

இவ்வாறு யோசித்த வண்ணம் கடைத்தெரு வழியே வீட்டுக்குச் சென்று கொண்டிருந்தான் முத்து. அவன் கண்களில் ஜவுளிக் கடைகளின் கம்பளித் துணிமணிகள் விழுந்தன. வாசற் புறத்தில் ராமு அணிந்திருந்தது போன்ற கம்பளிக் குல்லாய்களும் மாட்டி வைத்திருந்தன. அவனுடைய குழந்தை மனத்தில் ஆசை அதிகரிக்கவே விலையையும் விசாரித்து வைத்துக் கொண்டான். ஐந்து ரூபாய்க்கு அவன் எங்கே போவான்! வழிநெடுக யோசித்தவண்ணம் நடந்தான் முத்து. அவன் தகப்பன், தான் சம்பாதிக்கும் பணத்தை வீட்டின் ஒரு மூலையில் இருக்கும் பானையில் போட்டு மூடி வைப்பது வழக்கம். அது நினைவுக்கு வரவே, 'அப்பாவுக்குத் தெரியாமல் பணத்தை எடுத்துப் போய்க் குல்லாய் வாங்கிக் கொண்டால் என்ன!' என்று தோன்றியது அவனுக்கு.

ஆனால் மறுகணம் அவனுக்குத் தான் பள்ளிக்கூடத்தில் கற்று அறிந்திருந்த போதனைகள் நினைவுக்கு வந்தன. 'பொய் சொல்லுவது பாவம்; திருடுவது அதைவிட மகா பாவம்' என்ற போதனையில் ஊறிப் போயிருந்த அவனுக்குத் தன் ஆசையைப் பூர்த்தி செய்து கொள்ளத் திருடுவது மன்னிக்க முடியாத குற்றமாகத் தோன்றியது. அதனால் தன்மீது உயிர் வைத்திருக்கும் தந்தையிடம் தன் விருப்பத்தைச் சொல்லி நேர்மையான வழியில் ஆசையை நிறைவேற்றிக்கொள்ள முயலலாம் என்று எண்ணினான்.

ஆனால் வீட்டில் அவன் தகப்பன் கந்தசாமி இருந்த நிலை அவனுக்கு அவ்வளவு சாதகமானதாகத் தோன்றவில்லை. அடுப்பில் சோறு கொதித்துக் கொண்டிருந்தது. கந்தசாமி குளிர் காய்ந்த வண்ணம் அடுப்பின் அருகில் அமர்ந்திருந்தான்.



பிறநாட்டு நல்லறிஞர்களையும் கலைஞர்களையும் வரவேற்றுப் பாராட்டி வரும் ருஷ்ய நாட்டில் வீணை வாத்தியத்தின் சிறப்பை நிலைநாட்டி விட்டுத் திரும்பியிருக்கிறார், வீணை ஸ்ரீ நாராயணசாமி அவர்கள். திருவனந்தபுரம் ஸென்டிரல் ஸ்டேஷனில் ஸ்வாதித்திருநாள் சங்கீத கலாசாலை ஆசிரியர்களும் மாணவர்களும் வீணை ஸ்ரீ நாராயணசாமி அவர்களுக்கு மலர்மாலை சூட்டி உற்சாகமாக வரவேற்பளித்தார்கள்.

அவன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்துக் கொண்டிருந்தது. முத்துவின் மாமன் நாகரத்தினம் உற்சாகமின்றித் தலையைக் குனிந்தவாறு கயிற்றுக் கட்டிலில் அமர்ந்திருந்தான். எனவே, சந்தர்ப்பப் பிசகை அறிந்த முத்து, தன் எண்ணத்தை வெளியிட அது சரியான சமயமல்ல என்று எண்ணிப் பேசாமல் இருந்து விட்டான்.

முத்து அவ்வாறு நினைத்ததற்குக் காரணம் இல்லாமல் போகவில்லை. கந்தசாமியோ உலகத்துக்குப் பயந்து மானமாக வாழும் ஒரு மானி. ஆனால் அவனுடைய மைத்துனன் நாகரத்தினமோ அவனுக்கு நேர் விரோதம். சிறு வயதிலேயே முரடன், பொல்லாதவன் என்று பெயரெடுத்தவன். அதற்காக ஒரு தடவை சிறைத் தண்டனையும் அடைந்தவன்.

சிறைக்குச் சென்ற பிறகுதான் நாகரத்தினத்துக்குப் புத்தி வந்தது. இனிமேலாவது மானமாக வாழ்ந்து நல்ல மனிதன் என்ற பெயரெடுக்க வேண்டுமென்று நிடசித்தத்துடன் வீடு வந்து சேர்ந்தான். ஆனால் தனக்கு அவமானம் ஏற்படும் என்ற பயத்தினாலும், தன் மகனுக்கும் நாகரத்தினத்தின் தீய குணங்கள் படிந்து விடும் என்ற பயத்தினாலும் அவனைத் தன் வீட்டில் வைத்துக்கொள்ளக் கந்தசாமி முதலில் சம்மதிக்கவில்லை. ஆனால் நாகரத்தினம், கந்தசாமியின் மனத்தைத் திருப்தி செய்து வீட்டில் ஒண்டிக் கொண்டு விட்டான். உடம்பை வளைத்து உழைத்துச் சம்பாதிக்க வேண்டுமென்றுதான் நாகரத்தினம் முயன்றான். ஆனால் அவனுக்கு வேலை கிடைப்பதுதான் துர்லபமாக இருந்தது. அதனால் அவன் கந்தசாமிக்கு ஒரு சுமையாகவே வாழ்ந்து வந்தான்.

சூரியன் அஸ்தமித்துச் சற்று நேரமானவுடன் காடா விளக்கை ஏற்றி வைத்து விட்டு இருவருக்கும் சோறு போட்டான் கந்தசாமி.

"அப்பா! இன்று பள்ளிக்கூடத்திலே ஒரு பையன் வந்து சேர்ந்தான். அவன் கம்பளிக் குல்லாய் போட்டிருந்தான். அதுமாதிரி ஒன்று எனக்கும் வாங்கித் தருகிறாயா!" என்று கெஞ்சும் பாவனையில் கேட்டான் முத்து.

"நான் வேலைசெய்கிற எஜமானர் வீட்டுப் பிள்ளைதான் அது. அன்றாடச் சோற்றுக்கே கஷ்டப்படும் நாம் அவர்களைப் போல இருக்க முடியுமா! ......பேசாமல் படுக்கப் போவாயா!" என்று கடிந்தான் கந்தசாமி.

நயத்தினால் சாதித்துக் கொள்ள முடியாத காரியத்தைப் பிடிவாதத்தினால் சாதித்துக் கொள்ளலாம் என்பதை அநுபவ பூர்வமாகக் கண்டிருந்த முத்து, "எனக்கு ஒரு கம்பளிக் குல்லாய் வேணும்! இல்லா விட்டால் நான் படுக்கப் போக மாட்டேன்" என்று முனகியவாறே காலை உதைத்துக் கொண்டு அழ ஆரம்பித்தான். காலை உதறிய வேகத்தில் எதிரிலிருந்த சோற்றுப் பானை கவிழ்ந்து விட்டது. ஆத்திரம் கொண்ட கந்தசாமி ஆவேசம் வந்தவன் போல் அவன்மீது பாய்ந்து தன்னுடைய இரண்டு கரங்களையும் சேர்த்துப் பிடித்துக் கொண்டு முத்துவின் கன்னத்திலும் முகத்திலும் 'பளீர்' என்று அடித்து விட்டான்.

"அத்தான்! அடிக்காதீங்க; குழந்தையை அடிக்காதீங்க!" என்று முத்துவை இழுத்து அணைத்துக் கொண்டான் நாகரத்தினம்.

"அவனுக்காகப் பரிந்து பேசி அவனையும் உன்னைப் போல் ஆக்கி விடாதே! உன்னாலே எனக்கு வந்திருக்கிற அவமானமே போதும்!" என்று கடுசொற்களால் சுட்டுத் தள்ளினான் கந்தசாமி.

அவ் வார்த்தைகளினால் நாகரத்தினத்தின் உள்ளம் வெகுவாகப் புண்பட்டது. "நான் கெட்டவன்தான்! ஆனால் பிறக்கிற பொழுதே

அம்மாதிரி பிறந்து விடவில்லை. குழ்நிலையும் அறியாமையும்தான் என்னை அப்படி ஆக்கின!" என்று துக்கம் ததும்பக் கூறினான். பிறகு, சுவரோரமாக அமர்ந்து கரங்களை முகத்தில் பொத்திக் கொண்டு விசும்பிக் கொண்டிருந்த முத்துவின் அருகில் சென்று, "அழாதே, முத்து! நான் உனக்கு ஒரு குல்லாய் வாங்கித் தருகிறேன்" என்று சமாதானம் செய்து விட்டுக் கயிற்றுக் கட்டிலில் இருந்த துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு வெளியே கிளம்பினான்.

இந்த இரவு வேளையில் நாகரத்தினம் எங்கே போகிறான் என்பதைச் சற்றும் சட்டை செய்யாமல் தன் வேலையைக் கண்ணும் கருத்துமாய்க் கவனித்துக் கொண்டிருந்தான் கந்தசாமி.

கந்தசாமிக்கு எவ்வளவுக் கெவ்வளவு முன் கோபம் உண்டோ, அவ்வளவுக்கவ்வளவு இளகிய மனமும் உண்டு. தன் மகனின் விசும்பலைக் கண்டு உள்ளம் உருகிப் போனான். தாயில்லாத குழந்தையைச் சற்றும் யோசியாமல் அடித்து விட்டோமே என்று வருந்தினான்.

ஏழைக்கும் பணக்காரனுக்கும் வித்தியாசம் கண்டு பிடிக்க முடியாத பருவத்தில் இருக்கும் மகனை அடித்தது குற்றம் என்றே அவனுக்குத் தோன்றியது. அக் குற்றத்துக்குத் தகுந்த பிராயச் சித்தம் தன் குழந்தையின் ஆசையை நிறைவேற்றி வைப்பது தான் என்ற முடிவுக்கு வந்தான்.

மறு நாள் நடுப் பகலுக்குப் பிறகு நல்ல மழை ஆரம்பித்து விட்டது. ஆகவே கந்தசாமி சீக்கிரமாக வீட்டுக்கு வந்து விட்டான். அவன்வந்த சிறிது நேரத்துக் கெல்லாம் முத்து தலையிலும் உடம்பிலுமிருந்த தண்ணீர்ப் பொட்டுகளைத் துடைத்த வண்ணம் வீட்டில் நுழைந்தான்.

"என், முத்து! இத்தனை சீக்கிரம் வந்து விட்டாயே! மணி மூன்றுக்குமேல் இராது போல் இருக்கிறதே!" என்றான் கந்தசாமி.

"காற்று மழையிலே எங்கள் பள்ளிக்கூடத்திலே ஒரு பக்கம் சாய்ந்து விட்டது. அதனால் லீவு விட்டு விட்டார்கள். அப்பா உங்கள் எஜமானர் மகன் ஒரு கம்பளிக் குல்லாய் போட்டுக் கொண்டு வந்தான், பாரு! அதை யாரோ திருடிக் கொண்டு போய் விட்டார்களாம்!" என்றான் முத்து. கம்பளிக் குல்லாயைப் பற்றி முத்து பேச்செடுக்கவே, கந்தசாமிக்கு முன் இரவு நடந்த சம்பவம் நினைவுக்கு வந்து விட்டது. எனவே, பேச்சை மாற்ற நினைத்தான்.

"அதோ, அங்கே ஒரு ஓலைப்பெட்டி இருக்கிறது, பாரு! அதை எடுத்து வா!" என்றான் கந்தசாமி. முத்து தந்தையின் வெற்றிலைப் பாக்கு வைக்கும் ஓலைப் பெட்டியைத் தேடினான். அது அவன் கண்ணுக்குத் தென்படவில்லை. ஒருவேளை ஓலைப் பெட்டி பானைக்குள் இருக்குமோ என்று எண்ணி அதனுள் கையை விட்டான் முத்து. ஏதோ மெத்தென்று அவன் கையில் தட்டுப்பட்டது. உடனே அதை வெளியே எடுத்தான். மறுகணம் அவனுடைய கண்கள் ஆச்சரியத்தினால் அகல விரிந்தன. அவன் எந்தப் பொருளை அடைய வேண்டுமென்று துடிதுடித்துக் கொண்டிருந்தானோ, அதே பொருள்தான் அவன் கையில் காட்சி அளித்தது. கம்பளிக் குல்லாயை எடுத்து நன்கு கவனித்தான். பச்சையும் சிவப்பும் கலந்த குல்லாய்தான்! ராமு திருட்டுப் போய்விட்டதாகக் கூறிய அதே கம்பளிக் குல்லாய்தான்!! முத்துவின் உள்ளத்தில் பொங்கி எழுந்து கொண்டிருந்த மகிழ்ச்சி சட்டென்று அடங்கியது. சந்தேகத்துடன் தன் தகப்பனைப் பார்த்தான். அவன் பார்வையில் தொனித்த கேள்வியைப் புரிந்து கொண்டு விட்டான் கந்தசாமி.

முத்துவின் ஆசையைப் பூர்த்தி செய்ய வேண்டுமென்பதற்காக அன்று வேலைக்குப் போனவுடன் தன் மனச்சாட்சிக்கு விரோதமாக எசமானர் வீட்டிலிருந்து ராமுவின் குல்லாயை எடுத்து வந்து பானையில் பத்திரப் படுத்தி வைத்திருந்தான் கந்தசாமி. இரண்டொரு நாட்களுக்குப் பிறகு அதை



சென்ற இரண்டு ஆண்டு காலமாகச் சென்னை தேனும்பேட்டை திறந்த வெளி அரங்கில் பக்தி மயமான பல நாடகங்களை நடத்திச் சென்னை மக்கள் மனத்தில் ஒரு நிலையான இடம் பெற்று விட்டார் நவாப் ஸ்ரீ ராஜமாணிக்கம். தசாவதாரம், கிருஷ்ணலீலா, சம்பூரண ராமாயணம், ஐயப்பன், குமார விஜயம் முதலிய நாடகங்களின் மூலம் நாடகக் கலைக்கு அருந்தொண்டாற்றி வந்த ஸ்ரீ ராஜமாணிக்கம் மேற்படி நாடகங்களில் தலை சிறந்த நாடகமான "குமார விஜயம்" என்னும் நாடகத்தை நவம்பர் மீ 19உ முதல் சென்னை ஒற்றைவாடைத் தியேட்டரில் தொடர்ந்து நடத்தப் போகிறார். முதல்நாள் நாடகத்தில் திருப்புகழ்மணி ஸ்ரீ டி. எம். கிருஷ்ணசாமி அய்யர் அவர்களும், கல்வி மந்திரி கனம் சுப்பிரமணியம் அவர்களும் கலந்து கொண்டு சிறப்பிக்கிறார்கள். நாடகக் கலை ரஸிகர்கள் திரளாக விஜயம் செய்து நவாப் ஸ்ரீ ராஜமாணிக்கம் அவர்களின் நாடகக் கலைத் தொண்டுக்கு ஆதரவளிப்பார்கள் என்று எதிர்பார்க்கிறோம். குமார விஜயத்தில் பழனியாண்டவர் காட்சியை மேலே படத்தில் காணலாம்.



பம்பாய் ''டைம்ஸ் ஆப் இந்தியா'' பத்திரிகையின் உதவி புரொடக்ஷன் மானேஜர் ஸ்ரீ ஜி. எஸ். ரங்கநாத் அவர்களின் புதல்வி செல்வி தங்கமணிக்கும் சென்னை, க்ளாக்ஸோ ஆராய்ச்சிக் கூடத்தைச் சேர்ந்த ஸ்ரீ பி. எஸ். மணிக்கும் நவம்பர் 5ல் பம்பாய் மாதுங்காவில் சிறப்பாகத் திருமணம் நடந்தது. பம்பாய் டைம்ஸ் ஆப் இந்தியாவின் ஜெனரல் மானேஜர் ஸ்ரீ ஜே. ஸி. ஜெயின், திருமணத்துக்கு விஜயம் செய்து மணமக்களை ஆசீர்வதித்தார். வாழ்க மணமக்கள்!

மகனிடம் கொடுத்து மகிழலாம் என்று மனத்துள் திட்டமிட்டிருந்தான்.

''எஜமான் வீட்டிலிருந்து உனக்காகத்தான் கொண்டு வந்திருக்கிறேன். போட்டுக் கொள்!'' என்று நாசுக்காகக் கூறினான் கந்தசாமி.

தன் கையில் இருப்பது ஒரு திருட்டுப் பொருள் என்று அறிந்தவுடன் முத்துவின் இளம் உள்ளம் துடித்தது. முன்பு கம்பளிக் குல்லாயின் மீது அவனுக்கு எவ்வளவு அபரிமிதமான ஆசை இருந்ததோ, அவ்வளவுக் கவ்வளவு இப்பொழுது வெறுப்பு ஏற்பட்டு விட்டது.

''மாமனைத் திருடன் என்று சொன்னாயே! இப்பொழுது நீயும்தான் திருடன்! இந்தத் திருட்டுச் சொத்து எனக்கு வேண்டாம்!'' என்று அதை வீசி எறிந்தான் முத்து.

முத்துவின் வார்த்தைகள் கந்தசாமியின் உள்ளத்தில் சுருக்கென்று தைத்தன. தன்னையும் நாகரத்தினத்தையும் ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டான் கந்தசாமி. மறு கணம் முதல் நாள் இரவு, 'பிறக்கும்போதே நான் கெட்டவனாகப் பிறக்கவில்லை. சூழ்நிலையும் அறியாமையும்தான் என்னை அப்படி ஆக்கி விட்டன' என்று நாகரத்தினம் கூறிய வார்த்தைகள் அவன் அகக் கண்முன் மின்மினிப் பூச்சியைப் போல் தோன்றித் தோன்றி மறைந்தன. ஒரு அற்ப விஷயத்துக்காகத் தன் குணத்தில் மாசு ஏற்படுத்திக் கொண்டு விட்டதை நினைத்தபோது அவமானத்தினால் அவன் உள்ளம் குன்றியது. அந்த ஒரு கண நேரத்தில் தன்னைவிட நாகரத்தினமே மேலானவன் என்று தோன்றி விட்டது.

மறுகணம், 'கந்தசாமி கந்தசாமி' என்று அருணாசலம் அலறுவதைக் கேட்ட கந்தசாமி வாசலுக்கு ஓடோடி வந்தான்.

''நாகரத்தினம் காலையிலிருந்து என் ரிக்ஷாவை வாங்கிப் போய் ஓடி ஓடிச் சம்பாதித்துக் கொண்டிருந்தான். கொஞ்ச நேரத்துக்கு முந்தி, பெரிய தெருவிலிருக்கிற மரக்கிளை முறிந்து அவன் மேலே விழுந்து விட்டது. இப்பொழுதுதான் ஆஸ்பத்திரியிலிருந்து மோட்டார் வந்து அவனை எடுத்துப் போயிருக்கிறது. இதைச் சொல்லிப் போகத்தான் ஓடி வந்தேன்!'' என்று அருணாசலம் கூறியபோது கந்தசாமியின் உள்ளம் கிடுகிடுத்தது. தலை பம்பரம் போல் சுழன்றது. முத்துவை அழைத்துக் கொண்டு ஆஸ்பத்திரியை நோக்கி விரைந்தான்.

ஆஸ்பத்திரியில் பலத்த கட்டுகளுடன் படுத்திருந்தான் நாகரத்தினம். தன் அத்தானையும் முத்துவையும் கண்ட பிறகுதான் அவனுக்கு ஓரளவு தெம்பு வந்தது. ''முத்துவுக்குக் கம்பளிக் குல்லாய் வாங்க வேண்டும் என்று காலையிலிருந்து ஓடி ஓடிச் சம்பாதித்து ஒரு குல்லாயும் வாங்கி விட்டேன். வீட்டுக்கு வரும்போது இப்படி ஆகி விட்டது. இந்தக் குல்லாயை முத்துவுக்குப் போடுங்கள்!'' என்று கூறி மிகுந்த பிரயாசையுடன் தலைமாட்டில் ஒரு காகிதப் பையில் வைத்திருந்த கம்பளிக் குல்லாயை எடுத்துக் கொடுத்தான் நாகரத்தினம். உலகம் அறியாத முத்து அதை மகிழ்ச்சியுடன் வாங்கித் தலையில் போட்டுக் கொண்டான். நாகரத்தினம் புன்னகை புரிந்தான்.

கந்தசாமிக்கு அவனுடைய பரிதாப நிலை மிகுந்த மன வருத்தத்தை பளித்தது.

''நாகரத்தினம்! என் மகனுடைய சிறு ஆசையைப் பூர்த்தி செய்வதற்காக எத்தகைய ஆபத்தில் சிக்கிக் கொண்டு விட்டாய்!'' என்று கேட்டுக் கதறினான் கந்தசாமி.

''முத்து என்மீது எவ்வளவு அன்பு வைத்திருக்கிறான் தெரியுமா! அவன் அல்ப ஆசையை நிறைவேற்ற முடியாமல் நான் இருந்து என்ன பிரயோஜனம்!'' என்றான் நாகரத்தினம்.

உடனே கந்தசாமியின் சிந்தனை சுழன்றது.

'நானோ குழந்தையின் ஆசையைப் பூர்த்தி செய்வதற்காக என் குணத்திலே சற்று களங்கத்தை விளைவித்துக் கொண்டு அதைச் செய்ய நினைத்தேன். ஆனால் கெட்டவன் என்று பெயரெடுத்த நாகரத்தினமோ மாசு மறுவில்லாத வழியிலே குழந்தையின் ஆவலைப் பூர்த்தி செய்தான்' — இதை எண்ணியபோது கந்தசாமியின் கண்களில் நீர் மல்கியது.



திருச்சி சகோதரிகளான குமாரிகள் ஜெயா சாந்தா ஆகியவர்களின் இந்திய நடனம் மாயூரம் நகராட்சி பொருட் காட்சி கலையரங்கில் அக்டோபர் இரண்டாந் தேதி சிறப்பாக நடைபெற்றது. குமாரிகளின் நடனத்தைப் பொதுமக்கள் வெகுவாக ரஸித்தனர்.

# ப்ளிட்டில் ஆறு கீட நாசினிகளைக் கலப்பதால் அது அதிகப் பூச்சிகளை கொல்லுவதேன்?

தற்காலத்தில் விஞ்ஞானிகளுக்கு அநேக உபயோகமுள்ள கீடநாசினிகளைப் பற்றித் தெரியும்—ஆனல் ஒவ்வொன்றிலும் ஒரு குறையிருப்பதையும் அவர்கள் அறிவார்கள். எந்த ஒரு தனி கீடநாசினியும் எல்லாவகைப் பூச்சிகளையும் சேர்த்துக் கொல்லும் சக்தியுடையதல்ல.

உதாரணமாக
'A' என்ற கீடநாசினி
அதை ஸ்பர்சிக்கும் எல்லா ஈக்களையும் கொல்லக்கூடும்...
பிரதியளவு கொசுக்களையும் கொல்லலாம்...
ஆனல் மிகச்சொற்ப அளவு கரப்புகளையே கொல்லுகின்றது.







'B' என்ற கீடநாசினியோ
எல்லா கரப்புகளையும் கொல்லக்கூடும்...
ஆனல் ஒரு சில ஈக்களைத்தான் கொல்லுகிறது...
கொசுக்களை பாதிப்பதேயில்லை.



உண்மையைக் கூறுமிடத்தில், நீங்கள் எல்லாவகை வீட்டுப் பூச்சிகளையும் கொல்ல விரும்பினல், அதற்கு ஒரே வழிதான் உண்டு. அதாவது, நீங்கள் விதவிதமான கீடநாசினிகளைக் கலந்து உபயோகிக்க வேண்டும். அப்பொழுது ஈக்கள் ஒரு கீடநாசினியாலும், கரப்புகள் மற்றொன்றாலும், இம்மாதிரி எல்லாப் பூச்சிகளும் கொல்லப்படும். ப்ளிட்டின் "ரகசியம்" இதுவே. அதில் ஆறு கீடநாசினிகள் அடங்கியுள்ளன. ஒவ்வொன்றும் ஒன்றல்லது பல இனத்துப் பூச்சிகளை கொல்லக்கூடியது. இவ்வெல்லா கீடநாசினிகளும் இப்படி ஒன்று சேர்ந்திருப்பதால்தான் ப்ளிட் மிகச்சக்தி வாய்ந்த கீடநாசினியாக விளங்குவதுடன், நோய்க்கிருமிகளைக் கொண்டு சேர்க்கும் பூச்சிகளினின்று உங்கள் ஆரோக்கியத்திற்கு சிறந்த பாதுகாப்பு அளிக்கிறது.




நீங்கள் செலவழிக்கும் ஒவ்வொரு அணுவிற்கும் ப்ளிட் அதிகமான பூச்சிகளைக் கொல்லுகிறது

ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி

(கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

V. 9302

# SANDOW

# ஸாண்டோ

## நீடித்து சரியான நேரம் காட்டுவது

ஒரு 'ஸாண்டோ' கைக்கெடியாரம் வாங்குங்கள்; காலம் சொல்லும் நீங்கள் உங்கள் பணத்தைச் சரியாக செலவிட்டீர்கள் என்பதை. ஏனென்றால் 'ஸாண்டோ' நீடித்து சரியான நேரம் காட்டுவதற்குப் பெயர்போனது. கீழே தரப்பட்டுள்ள வசீகர மாடல்களைப் பாருங்கள். உங்களுக்கு ஒரு கைக்கடியாரம் தேவையானால்—புத்திசாலித்தனமாக ஒரு 'ஸாண்டோ' வாங்குங்கள். பல வருட திருப்தியான சேவைக்கென்றே தயாரிக்கப்பட்டவை.




**நெ. 3152**
டீக்கான டானு மாடல் ரோல்டு கோல்டு கேஸ், ஸ்டீல் பின்புறம்
ரூ. 142/-

**நெ. 3072**
வசீகரமான வளைந்த மாடல் ரோல்டு கோல்டு கேஸ் ஸ்டீல் பின்புறம் ரூ. 142/-

ரூ. 5/- அதிகம் கொடுத்தால் கில்ட் எழுத்துக்களும், முட்களும் பொருத்தப்பட்ட இந்த கெடியாரங்கள் கிடைக்கும்

# FAVRE-LEUBA & CO. LTD.




பேவர் - லூபா & கோ., லிட்.

பம்பாய் ● கல்கத்தா

# "கல்கி" மலர்கள்

இந்த ஆண்டு "கல்கி" தீபாவளி மலரை வழக்கத்தை விடச் சிறந்த முறையில் வெளியிட்டுத் தமிழ் மக்களை மகிழ்ச்சிக் கடலில் மூழ்கடித்து விட்டீர்கள். மலரைப் பற்றி ஒரே ஒரு குறையைத் தவிர வேறு ஒரு குறையும் கூற முடியாது. விலை குறைந்து போனதைப் பற்றித்தான் குறிப்பிடுகிறேன். மற்றப்படி மலர் எல்லா அம்சங்களிலும் சிறந்து விளங்குகிறது.

இதுபோலவே இதற்கு முன் வெளிவந்துள்ள "கல்கி" கைத் தொழில் மலர்கள் பலவிதங்களிலும் சிறந்து விளங்கின. சாதாரண "கல்கி" இதழின் விலைக்கே அதிக பக்கங்கள் உள்ள கைத் தொழில் மலர்களையும் கொடுத்ததைப் பாராட்ட வேண்டும். நாட்டுக்கு மிகவும் பயனுள்ள அந்த மலர்களைப் பற்றி இரண்டொரு வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன்.

தீப்பெட்டித் தொழில் சம்பந்தமாகத் தாங்கள் வெளியிட்டுள்ள மலரைப் பார்த்த பின்னர்தான் தீப் பெட்டித் தொழில் வீட்டுத் தொழிலாகத் தமிழ் நாட்டில் நடந்து வருவதைத் தெரிந்து கொண்டேன். அன்று முதல் நான் சிவகாசித் தீப் பெட்டிகளையே வாங்கி வருகிறேன். அந்தத் தீப் பெட்டிகள் விலை மலிவாக இருப்பதுடன் தரம் உயர்வாகவும் இருக்கிறது.

அதேபோல பனியன் தொழில் சம்பந்தமாகத் தாங்கள் வெளியிட்டுள்ள மலரைப் பார்த்து நான் தலை நிமிர்ந்து நடக்க ஆரம்பித்தேன். பனியன் தொழிலில் திருப்பூர்தான் இந்தியாவில் தலைசிறந்து விளங்கி வருகிறது என்பதை அறிந்து பெருமிதங் கொண்டேன். அதிலும் சிறு கைத்தொழிலாக நடந்து வருகிறது. பத்தாயிரக் கணக்கான தொழிலாளர்கள் அதில் ஈடுபட்டு உழைத்து வருகிறார்கள் என்று தெரிந்ததும் திருப்பூர் பனியன் தொழிலின் சிறப்பை எண்ணி எண்ணி வியந்தேன். அது முதல் திருப்பூர் பனியன்களையே வாங்குவது என்று தீர்மானித்தேன்.

தீபாவளிக்கு நானும் எனது நண்பர்களும் திருப்பூர் பனியன்களையே வாங்கினோம். பனியன்கள் தரத்திலும் அளவிலும் பூரண திருப்தி அளித்தன. இத்தனை காலமாக இதன் அருமை தெரியாமல் போய் விட்டதே என்று எண்ணி நானும் எனது நண்பர்களும் பேசிக் கொண்டோம். பனியன் தொழில் மலர் வெளியிட்டுப் பனியன் தொழிலுக்கு ஊக்கமூட்டி அதன் உயர்வைத் தமிழ் நாட்டுக்கு உணர்த்திய "கல்கி"ப் பத்திரிகையைப் பாராட்டுகிறோம்.

"கல்கி" பனியன் மலரில் வெளியாகி யிருந்த பனியன் தொழில் சம்பந்தமான அறிஞர்களின் கட்டுரைகளைப் படித்து ரசித்தேன். திரு பகீரதன் பனியன் தொழிலைப் பற்றி மிக அருமையாக எழுதி யிருக்கிறார். ஆனால் அவர் எழுதியுள்ள கட்டுரையில் உள்ள ஒரு குறிப்பு எங்கள் அனுபவத்தில் தவறாக இருக்கிறது.

திருப்பூர் பனியன்களின் அளவு சரியாக இருப்பதில்லை என்பதாகக் குறிப்பிட்டிருக்கிறது. அது முற்றிலும் தவறு. நானும் என் நண்பர்களும் வாங்கின திருப்பூர் பனியன்களின் அளவு குறிப்பிட்டபடி சரியாக இருந்தது. எல்லா பனியன்களின் அளவும் சரியாகவே இருக்கின்றன. திரு பகீரதன் யாரோ சிலர் சொன்னதை வைத்துக் கொண்டு நன்கு ஆராய்ந்து பாராமல் அவ்வாறு குறிப்பிட்டிருக்க வேண்டும் என்று நினைக்கிறேன்.

தமிழ் நாட்டில் மிகச் சிறந்த கைத் தொழிலாக வளர்ந்து வரும் திருப்பூர் பனியன் தொழிலைப் பற்றி இப்படித் தவறாக ஒரு குறிப்பு இருந்திருக்க வேண்டாம் என்பதற்காகவேதான் இந்தக் கடிதத்தை எழுதினேன்.

இன்னும் தமிழ் நாட்டில் உள்ள சிறு கைத் தொழில்களைப் பற்றி அடிக்கடி மலர்கள் வெளியிட வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறேன். தமிழ் நாட்டு மக்களின் முன்னேற்றத்துக்கு இது மிகச் சிறந்த தொண்டாக இருக்கும்.

பவானி
10—11—54 எம். கோவிந்தசாமி

[தங்கள் கடிதத்துக்கு மிக்க நன்றி. தமிழ்நாட்டில் கைத் தொழில்கள் ஓங்கி வளர்ந்து தமிழ் நாடும் தமிழ் மக்களும் உயர வேண்டும் என்பது தான் நமது நோக்கம். பனியன் தொழிலைப் பற்றித் தெரிந்துவரத் திருப்பூருக்கு நான் நேரில் சென்றிருந்தேன். திருப்பூர் பனியன்கள் அளவிலும் தரத்திலும் உயர்ந்தவை என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. பனியன் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களில் இரண்டொரு பனியன் உற்பத்தியாளர்கள் ஒரு சில வியாபாரிகளின் வற்புறுத்தலுக்காகக் குறைந்த அளவுள்ள பனியன்களுக்கு அதிக அளவு முத்திரையைக் குத்திவிடுகிறார்கள் என்று திருப்பூரிலேயே ஒரு புகார் என்னுடைய காதில் விழுந்தது. யாரோ இரண்டொருவர் இந்தத் தவறைச் செய்தாலும் அது திருப்பூரில் நல்ல முறையில் உற்பத்தி செய்து வரும் இதர பனியன் தொழில் உற்பத்தியாளர்களையும் பாதிக்கத்தானே செய்யும்? அப்படி இரண்டொருவரும் அந்தத் தவறைச் செய்யாமல் திருத்திக் கொள்ள வேண்டும் என்ற நல்ல நோக்கத்துடனேயே அதைக் குறிப்பிட்டிருந்தேன். திருப்பூர் பனியன்களின் அளவு சுத்தமானது என்பதையும் அதன் தரம் மிக உயர்வானது என்பதையும் எடுத்துக் காட்டித் தங்களைப் போல் இன்னும் சில அன்பர்களும், பனியன் உற்பத்தியாளர்களும், வியாபாரிகளும் எழுதி யிருக்கிறார்கள். பராபரியாகக் காதில் விழுந்த ஒரு புகாருக்கு இவ்வளவு முக்கியத்துவம் ஏற்பட்டு விட்டது பற்றி வருந்துகிறேன். திருப்பூர் பனியன் தொழில் வருங்காலத்தில் மேலும் வளர்ச்சியடைந்து நாடெங்கும் புகழ் பெறும் என்று எதிர்பார்க்கிறேன். —பகீரதன்]



பம்பாய்க் கார்ப்பரேஷனைச் சேர்ந்த இன்ஜினீர் ஸ்ரீ எஸ். சங்கரய்யர் அவர்களின் குமாரத்தி செல்வி ஆவுடையம்மாளுக்கும் சுசீந்திரம் ஸ்ரீ ரகுபதி ஐயரின் குமாரன் செல்வன் ஆர். கணபதிக்கும் பம்பாயில் அக்டோபர் முப்பத்தோராம் தேதி சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. வாழ்க மணமக்கள்!




★ காலத்திற்கு ஏற்றவை
★ நீடித்த உழைப்பு
★ சிறந்த தயாரிப்பு




# பனியன்கள்

எல்லா ரகங்களிலும் கிடைக்கும்

உற்பத்தியாளர்கள் :

## ஸ்ரீ முருகன் ஹொசைரி ஒர்க்ஸ்

18/9, வாலிப்பாளையம், திருப்பூர் (S. Ry.)

---

உங்கள் வாழ்க்கையை

# மலச் சிக்கல்

ஒரு பாரமாக்க வேண்டாம்.



தலைநோவுகள், உடம்பெரிச்சல், பசி மந்தம், ஜீவசக்தியின்மை, மேனியழகு மங்குதல், இவையெல்லாம் ஜீரண உறுப்புகளில் அசுத்தமிருப்பதன் நேரடியான விளைவாகும். மலச் சிக்கல் உங்கள் வாழ்க்கையே ஒரு சுமையாகக் கருதும்படி செய்ய விடக்கூடாது. ப்ரூக்லாக்ஸை உட்கொண்ட மாத்திரத்தில் புதிய ஜீவசக்தியுண்டாகும் ருசியிருந்த இந்த சாக்லேட் பேதி மருந்து குடலின் வேலையை சகஜமாக ஊக்கி கழிவடைப் பொருள்களை நிச்சயமாக வெளிப்படுத்துகிறது. இன்றிரவே ஒரு சாக்லேட் சாப்பிட்டு, காலை எவ்வளவு புத்துணர்ச்சியுடன் சக்தியுடன் விளங்குகிறீர்களென்பதை பாருங்கள்.

ஆகும் ப்ரூக்லாக்ஸ் என்று கேட்டு கவனித்து வாங்குங்கள்!




## ப்ரூக்லாக்ஸ்

### ஒரே இரவில்

உங்களை குணமாக்கும்

(லண்டன் வெஸ்ட்மின்ஸ்டர் லாபரேட்டரீஸ் லிட். தயாரிப்பு)

ஏஜண்டுகள்: ஓரியண்டல் மார்க்கண்டைல் ஏஜன்ஸி
99-A, அரமனைக்காரத் தெரு,
மதராஸ்—1

QBA. 19

★ பனியன் தொழில் மலருக்காக வந்த விசேஷக் கட்டுரை. காலதாமதமாக வந்ததால் இந்த இதழில் பிரசுரித்திருக்கிறோம். —ஆசிரியர்

# பின்னல் தொழிலில் நெருக்கடி


**லலித் மோஹன் முகர்ஜி**

(தலைவர், வங்காள ஹொசைரி உற்பத்தியாளர் சங்கம், கல்கத்தா.)


**1890**-ம் ஆண்டிலே தான் முதன் முதலாக இந்தியாவில், பனியன், கம்பளி பனியன், ஸ்டாக்கிங்ஸ், குழந்தைக்கான குல்லாய்கள் போன்ற சகல பின்னல் சாதனங்களையும் செய்யக் கூடிய ஹொசைரி (Hosiery) தொழிற்சாலை ஆரம்பமாயிற்று. கையினால் ஓட்டும் சில யந்திரங்களைக் கொண்டு அப்போது கல்கத்தாவில் முதலாவது ஹொசைரி தொழிற்சாலை அமைக்கப் பட்டது.

பிறகு 1892-ல் அதே தொழிற்சாலை அதிபர்கள் மின்சார சக்தியினால் இயங்கும் பெரிய தொழிற்சாலையை அமைத்தனர். சாயம் தோய்ப்பது முதல் சகல அலுவல்களும் யந்திரங்களின் மூலமே செய்யப் பட்டன. மேற்படி யந்திரங்களைச் சரியான முறையில் அமைப்பதற்காக இங்கிலாந்தைச் சேர்ந்த பிரபல கம்பெனியிலிருந்து மூன்று ஆங்கில நிபுணர்கள் தருவிக்கப் பட்டனர்.

இந்த நிலைமையில், இந்தியாவில் மூண்ட அரசியல் கிளர்ச்சி பின்னல் உடைத் தொழிலுக்கு உத்வேகம் அளித்து, அது அபரிமிதமாக முன்னேற்றம் அடைவதற்கு உதவியாக இருந்தது. 1904-ம் வருஷம் ஏற்பட்ட வங்காளப் பிரிவினையும், அன்னிய சாமான்கள் பகிஷ்கார இயக்கமும் உள்நாட்டில் பின்னல் சாதனங்களின் உற்பத்தி பெருகுவதற்கு மிகுந்த உதவி யளித்தன.

இந்தியாவில் எழுந்த சுதேசி இயக்கம் காரணமாகப் பல இடங்களில் பல சிறிய பின்னல் தொழிற்சாலைகள் ஆரம்பிக்கப்பட்டன. அவைகளுக்குத் தேவையான யந்திரங்கள் மாத்திரம் ஆயிரத்துத் தொள்ளாயிரத்துப்பன்னிரண்டாம் வருஷம் வரையில் இங்கிலாந்து தேசத்திலிருந்தே இறக்குமதி செய்யப்பட்டு வந்தன.

1918-ம் ஆண்டு முதலாவது மகா யுத்தம் முடிவடைந்த பின், பின்னல் உடை சாதனங்களுக்கு மிகுந்த கிராக்கி யிருந்ததால், இங்கிலாந்திலிருந்தும் ஜெர்மனியிலிருந்தும் பல அபிவிருத்திகளுடன் கூடிய நவீன யந்திரங்கள் தருவிக்கப் பட்டன.

* * *

**அ**தன் பின், மேற்படி தொழில் வெளி நாட்டினரின் போட்டி காரணமாகவும் உலக வர்த்தகத்தில் திடீரென்று ஏற்பட்ட மந்தம் காரணமாகவும் க்ஷீணிக்க ஆரம்பித்ததால், 1934-35ல் இந்திய சர்க்கார் உள்நாட்டுப் பின்னல் உடை உற்பத்தித் தொழிலுக்குப் பாதுகாப்பாகப் பல முறைகளைக் கைக் கொண்டனர். அதன் பலனாக, ஏற்கெனவே இருந்ததைக் காட்டிலும் இந்தியாவில் பின்னல் உடைத் தொழிற்சாலைகள் ஒரே வருஷத்தில் நாலு ஐந்து மடங்கு அதிகமாயின. அப்போது ஜப்பான் தேசத்தில் இருந்து பனியன் தொழிலுக்கு வேண்டிய ஏராளமான யந்திரங்கள் இங்கு இறக்குமதியாகத் தொடங்கின.

1945-ல் இரண்டாவது மகா யுத்தம் முடிந்த பின் பின்னல் தொழிலின் சரித்திரத்திலேயே புதிய சகாப்தம் ஆரம்பமாகியது எனலாம். இரண்டாவது மகாயுத்தம் முடிந்த பின், அத் தொழிலில் மிகுந்த முன்னேற்றம் ஏற்பட்டுள்ளதெனினும், அதே சமயத்தில் அது பல கஷ்டமான பிரச்னைகளையும் சமாளிக்க வேண்டிய மிகச் சங்கடமான நிலைமையும் உண்டாகி யிருக்கிறது.



சமீபத்தில் கொழும்பு ஸெனல்பெண்டு தியேட்டரில் நடனமாடிப் பொதுமக்களின் பாராட்டுதலைப்பெற்ற குமாரி சார்மேன் வேந்தர்கோன், தஞ்சை நடன ஆசிரியரான ஸ்ரீ டி. எஸ். கோவிந்தராஜு பிள்ளையிடம் பரதம் பயின்று அரங்கேறிய முதல் தமிழ்ப் பெண்மணியாவார்.











இன்று பின்னல் தொழில் இந்தியாவெங்கும் சகல மாகாணங்களிலும் பரவியிருக்கிறது. இந்தியாவில் உள்ள பெரும்பாலான பின்னல் தொழிற்சாலைகளும் பருத்தி நூல் உடைகள் பின்னுவதிலேயே ஈடுபட்டுள்ளன. லூதியானா, கான்பூர், ஆமதாபாத் இந்த இடங்களில் மாத்திரமே கம்பளி நூல்களைக் கொண்டு பல்வேறு பின்னல் சாதனங்களைத் தயாரித்து வருகிறார்கள்.

இந்தியாவில் உள்ள பருத்தி நூல் பின்னல் தொழிற்சாலைகளில் மாத்திரம் 22 கோடியே 59 லட்சம் ரூபாய் மூலதனம் போட்டிருக்கிறார்கள் எனில், அது எவ்வளவு முக்கியமான தொழில் என்பதை அறியலாம்.

1952-லிருந்து பருத்தி நூலால் பின்னப்பட்ட சாதனங்களின் விற்பனை நாளுக்கு நாள் குறைந்து வருகிறது. அதனால் மேற்படி சாதனங்களின் விலையும் குறைந்து விட்டது. வருஷத்தில் ஐந்து மாதங்கள்தான் பின்னல் சாதனங்கள் மும்முரமாக விற்பனையாகின்றன. பல சாதனங்களின் விலைகள், அவற்றின் உற்பத்திச் செலவைக் காட்டிலும் குறைந்து விட்டன. சுறு சுறுப்பாக வேலை செய்யும் பெரிய தொழிற்சாலைகளில் கூட நிட்டிங் இலாகாவில் அதிக வேலை இருப்பதில்லை. எனவே, போட்டா போட்டி காரணமாக இப்போது தொண்ணூறு சதவிகிதப் பின்னல் தொழிற்சாலைகள் நஷ்டத்தில் வேலைசெய்து வருகின்றன. மந்தமான இந்த நிலைமை இந்தியா தேசம் எங்கும் வெகுவாகப் பரவி யிருக்கிறது.

சென்ற மகா யுத்தம் நடந்து கொண்டிருந்த காலத்தில், மற்ற பல சாதனங்களைப் போல் பின்னல் சாதனங்களுக்கும் மிகுந்த கிராக்கி இருந்தது. அப்பொழுது போதிய அளவு நூல் கிடைக்காததால், ஒவ்வொரு தொழிற்சாலையிலும் உற்பத்தி மிகவும் கட்டுப்படுத்தப் பட்டது. எனினும் சாதனங்களின் விலைவாசிகள் அதிகமாக இருந்ததால், குறைந்த உற்பத்தியால் ஏற்படக் கூடிய நஷ்டம் ஈடு செய்யப்பட்டு வந்தது.

யுத்தம் முடிந்து, இந்தியா சுதந்திரமும் பெற்றதால், ஜனங்களின் தேவையைச் சமாளிக்கப் பின்னல் தொழிலை விஸ்தரிக்க வேண்டும் என்று பலரும் எண்ணினார்கள்.

1. பனியன் நெய்யும் இயந்திரம்.

2. திருப்பூர் ஸ்பைடர் பனியன் கம்பெனியைச் சேர்ந்த அலுவலகக் குழுவினர்.

3. பனியன் நெய்யும் இயந்திரத்துக்கு உபயோகிக்கும் 'கோன்' நூல் சுற்றும் இயந்திரம்.

4. பனியன் தொழிலுக்கு அவசியமான சலவைத் தொழிற்சாலையின் ஒரு தோற்றம்.

5. பனியன் நெய்யும் இயந்திரத்துக்கு வேண்டிய கோன்களில் இயந்திரத்தின் உதவி இல்லாமல் கையினாலேயே நூல் சுற்றுகிறார்கள். இத்தொழிலைக் கொண்டு திருப்பூரிலும் அதன் சுற்றுப்புறங்களில் உள்ள கிராமங்களிலும் ஆயிரக்கணக்கான மக்கள் பிழைத்து வருகிறார்கள்.

எனவே, பலர் பழைய பின்னல் தொழிற் சாலைகளை மேற்கொண்டு விஸ்தரிக்கவும், புதிதாகத் தொழிற்சாலைகளை அமைக்கவும் ஆர்வமாக இருந்தனர்.

வெளிநாடுகளிலிருந்து நிட்டிங் யந்திரங்கள் ஏராளமாக வந்து இறங்கத் தொடங்கின. 1948-ல் யந்திர இறக்குமதித் தடை ரத்து செய்யப்பட்டபின், அதற்கு முன் இருந்ததைக் காட்டிலும் மூன்றரை மடங்கு அதிகமாக நிட்டிங் யந்திரங்கள் இறக்குமதியாயின.

ஆனால் பின்னல் தொழில் அதிபர்கள் நினைத்தபடி காரியம் நடக்கவில்லை. கொரியா யுத்தம் நின்ற பின் 1952-ல் பின்னல் சாதனங்களின் விற்பனை ஒரே அடியாக விழத் தொடங்கியது. அது போலவே, அவற்றின் விலைகளும் விழலாயின. இது மேற்படி அதிபர்களுக்கு ஏற்பட்ட முதல் அதிர்ச்சியாகும்.

பின்னர், நூல் கட்டுப்பாட்டையும் சர்க்கார் ரத்து செய்ததால் பின்னல் தொழிலின் நிலைமை மேலும் மோசமாகியது.

இத்தகைய நிலைமைக்கு அரசாங்கத்தாரும் பொறுப்பாளிகள் ஆவர். இறக்குமதித் தடையையும், நூல் கட்டுப்பாட்டையும் ரத்து செய்யும் விஷயத்தில் சர்க்கார் முன்கூட்டியே சாதக பாதகங்களை ஆய்ந்தோய்ந்து பார்த்திருந்தால், பின்னல் தொழில் தற்போதைய நெருக்கடிக்கு உள்ளாகும்படி நேர்ந்திராது.

எனவே, பின்னல் தொழிலில் ஏற்பட்டுள்ள நெருக்கடி தீரவேண்டுமாயின், ஒன்று தொழிற்சாலைகளில் ஒரு நாளைக்கு எட்டு மணி வேலைநேரம், ஒரு வாரத்துக்கு நாலு நாள் வேலை என்று நிர்ணயிக்க வேண்டும். அல்லது விலையையும், உற்பத்தியையும் கட்டுப்படுத்த வேண்டும். ஒவ்வொரு தொழிற்சாலையின் உற்பத்தி சக்தியை அடிப்படையாகக் கொண்டு நூலைப் பங்கீடு செய்ய வேண்டும். 1948-ல் பின்னல் தொழில் விஸ்தரிக்கப் பட்டதில் இருந்து பின்னல் தொழிற்சாலைகளின் 60 சத விகித சக்தி உபயோகிக்கப்படாமல் ஸ்தம்பித்த நிலையில் இருப்பதால், மேலே குறிப்பிட்ட பரிகார முறைகளால் உற்பத்தி, தொழிலாளர் வேலை இவை சம்பந்தமாக எவ்விதச் சிக்கலும் ஏற்படுவதற்கில்லை.

1. பனியன் நெய்யும் எத்தனையோ வகை இயந்திரங்களில் இது ஒரு வகை.

2. பெண்கள் கும்பல் கும்பலாக அமர்ந்து சில தொழிற்சாலைகளுக்குள் இப்படி பனியன் இயந்திரத்துக்கு வேண்டிய 'கோன்'களில் கைராட்டையைக் கொண்டு நூல் சுற்றுகிறார்கள்.

3. நவீன முறையில் அமைக்கப் பட்டிருக்கும் கே. கே. சி. பனியன் தொழிற்சாலையில் பனியன் தயாராகிப் பெட்டிக்குள் வைக்கப்படுகிறது.

4. இன்டர்லாக்கிங் என்ற விசேஷ பின்னல் முறையில் நெய்யும் பனியன் இயந்திரம்.

5. திருப்பூரில் பிரசித்தி பெற்று விளங்கும் அக்பர் சலவைச் சாலைக்குள் ஒரு தோற்றம்.












# காட்ஸ்வால் உடைகள் உங்களுக்கு எப்பொழுதும் சுகசௌகரியம் தருவது

சீதோஷ்ண நிலை எப்படியிருந்தாலும் பாதகமில்லை, சௌகரியமான உடைக்கு ஏற்ற துணி காட்ஸ்வால்தான். பருத்தியும் கம்பளியும் சீரிய முறையில் கலந்து செய்யப்பட்ட இந்தத் துணி குளிராயிருக்கும்போது உங்களுக்கு கதகதப்பும் வெப்பமாயிருக்கும்போது குளுகுளுப்பும் தருகின்றது. காட்ஸ்வால் ஷர்ட்டுகளுக்கும் புஷ்-ஷர்ட்டுகளுக்கும் இணையற்றது. இயற்கை நார்ப்பொருள்களிலிருந்து தயாரிக்கப்படுவதால் உடம்புக்கு இதமாக இருக்கிறது. நீண்டகாலம் உழைப்பதுமட்டுமின்றி சுருங்காமலிருப்பதற்கும் உத்தரவாதமளிக்கப்படுகிறது—சுருங்கினால் பதிலுக்கு வேறு துணி கொடுக்கப்படும். காட்ஸ்வால் விதவிதமான நிறங்களிலும் பிரிண்டு டிஸைன்களிலும் உள்ளன—விருப்பம்போல் தேர்ந்தெடுக்கலாம்.



பின்னியின் காட்ஸ்வால்
எந்த சீதோஷ்ண நிலையிலும் சௌகரியமானது

| | | |
|---|---|---|
| சாதா நிறங்கள் | 29/30" | —கெஜம் ரூ. 3/10 |
| ,, ,, | 35/36" | —கெஜம் ரூ. 4/5 |
| பிரிண்டுகள் | 29/30" | —கெஜம் ரூ. 4/8 |
| செக் மோஸ்தர்கள் | 29/30" | —கெஜம் ரூ. 4/1 |

—விற்பனை வரி வேறு

பெங்களூர் வுல்லன், காட்டன், & ஸில்க் மில்ஸ் கம்பெனி லிமிடெட், பெங்களூர் 2

ஏஜண்டுகள், கார்யதரிசிகள், பொக்கிஷதார்கள்: பின்னி & கம்பெனி (மதராஸ்) லிட். BY. 441




## 27. திருட்டுக் குற்றம்

ஜகதிஷுக்குத் தன் விசித்திர நிலையை நினைத்துப் பார்த்த பொழுது சிரிப்புத்தான் வந்தது. வேலை வெட்டியின்றி வெகு நாட்களாக உட்கார்ந்திருக்கும் அவனுக்கு இன்றைக்கு இல்லாவிட்டால் இன்னொரு நாளைக்குக் கட்டாயம் ஏதாவது ஒரு வேலை வேண்டியதுதானே? அவனுக்குப் பழக்கப் பட்டதும் பிடித்ததுமான பத்திரிகைத் தொழில் அவனுடைய முயற்சி எதுவும் இன்றியே அவன் முன்னே வந்து நின்றது. அவ்வேலையை அவன் தேடிப் போகவில்லை; அதுவாக அவனைத் தேடி வந்தது. சரியென்று அவன் சம்மதம் தெரிவிக்க வேண்டியது தான் தாமதம், கைநீட்டிக் கேட்காமலேயே அவன் கையில் வந்து குதிப்பதாக இருந்தது அந்த வேலை. காற்றுள்ள போதே தூற்றிக்கொள் என்ற பழமொழியைக் காரியத்தில் காட்ட வேண்டிய அந்தச் சமயத்தில் அதை வேண்டாமென்று உதறித் தள்ளி விட்டானே, அது புத்திசாலிக்கு அழகாகுமா? எந்த மூகாந்தரத்தைக் கொண்டு அவன் அப்படிக் கூறினான்? அவனுக்குப் பிடிக்காத ஒரு விஷயத்தை, அதுதான் அந்தப் பத்திரிகையின் கொள்கை என்று யாரும் வரையறுத்துக் கூறவில்லை. அந்தப் பத்திரிகையை ஆரம்பிக்கப் போகிறவரும் என் பத்திரிகை இந்தக் கட்சியைத்தான் ஆதரிக்க வேண்டும், இதைக் கூடாது என்று ஒரு கட்டுத்திட்டம் வகுத்து அவனுக்கு அறிவிக்கவில்லை. அப்படியிருக்கும்பொழுது அவன் அந்தப்பொறுப்பை விரும்பி ஏற்காமல் ஏன் வெறுத்து உதறித் தள்ளி விட்டான்?

அவன் குடும்பம் ஒருவிதக் குறையுமின்றி ஒழுங்கு முறையுடன் ஓடியதென்றால் அதற்குக் காரணம் அவன் மனைவி கோகிலாதான். இதை ஜகதிஷ் நன்கு உணர்ந்திருந்தான். கோகிலா தன் நகைகளை விற்றுப் பணம் கொண்டு வந்ததை ஜகதிஷ் ஒரு முறை நேரில் தன் கண்களாலேயே கண்டிருந்தான். அவன் நோய் வாய்ப்பட்டிருந்த பொழுது குடும்பச் செலவுக்கும் வைத்தியச் செலவுக்கும் எத்தனையோ ரூபாய்கள் செலவழிந்திருந்தன. கால் காசுகூடச் சம்பாதிக்க முடியாத அவனுக்கு அத்தனை பணம் எங்கிருந்து வந்தது? எல்லாம் மனைவியின் நகை நட்டுக்களை விற்றதனால் வந்ததுதானே? இத்தகைய இழிவான முறையில் வயிறு வளர்க்கும்படியான நிலையில் நாம் இருக்கிறோமே என்று எண்ணிய ஜகதீஷை வெட்கம் பிடுங்கித் தின்றது. தலை தூக்கிப் பார்க்கக் கூடத் திராணியின்றி மனம் புழுங்கினான். ஜகதிஷ் அப்படியெல்லாம் சங்கோசமுற்றுச் சிரமப்படக் கூடாது என்பதற்காகக் கோகிலா எத்தனையோ பாடுபட்டாள். ஒருத்தி எத்தனைதான் நல்லவளாக இருக்கட்டுமே, எந்நாளுமே இத்தகைய பெரும் பொறுப்புகளை ஏற்பதென்றால் அது அவளால் முடிந்த காரியமா? விக்கம்கூட விரலுக்குத் தகுந்தபடிதானே வீங்குகின்றது? இருந்தாலும் கோகிலா தன் சக்திக்கும் அப்பாற்பட்ட காரியத்தைச் செய்யத்தான் முயன்றாள். நல்ல மனையாள் என்பவள் அப்படித்தானே இருக்க வேண்டும்?

நோய்ப் படுக்கையிலிருந்து எழுந்த ஜகதிஷின் மனக்கண் முன்னே கோகிலா சம்பந்தப்பட்ட எத்தனையோ நிகழ்ச்சிகள் வந்து நின்றன. அவற்றின் பலனாக அவன் மனம் மேலும் வெதும்பியது. அவனுக்கு உணவும் செல்லவில்லை; உறக்கமும் கொள்ளவில்லை. அதையெல்லாம் கவனித்த கோகிலா இப்படியிருந்தால் உடல்நிலை இன்னும் மோசமாகி விடும் என்று கூறி உணவு அருந்தித்தான் ஆகவேண்டும் என்று அவனைப் பலவிதத்திலும் வற்புறுத்தினாள்.

தன் அவல நிலையே நினைவாயிருந்த ஜகதிஷ் ஒரு நாள் மிகவும் மனம் வெதும்பிப் படுத்திருந்தான். நோயில் அடிபட்ட அவனுக்குப் பத்தியமாகவும் ருசியாகவும் இருக்கக்கூடியதான பதார்த்தங்களைச் செய்து எடுத்துக் கொண்டு கோகிலா அவன் அருகில் வந்து உட்கார்ந்தாள். ஜகதிஷ் தட்டில் உள்ள தின்பண்டங்களை ஒருமுறை பார்த்தான். தட்டில் உள்ள தின்பண்டங்களைத் தின்ன வேண்டும் என்ற ஆசையே அவனுக்கு எழவில்லை. குடும்பம் நடத்தும் விஷயத்தில் கோகிலா படும் கஷ்டங்களை நினைத்துப் பார்த்த அவன் சிந்தனையே உருவாக உணவு அருந்தும் உவகை கூட

இல்லாதவனாக உட்கார்ந்து விட்டான். அதைக் கண்ணுற்ற கோகிலா மிகவும் இனிமையான குரலில், "இதென்ன, பேசாமலே உட்கார்ந் திருக்கிறீர்களே! நான் வேண்டுமானால் வாயில் எடுத்துப் போடட்டுமா?" என்று கேட்டாள்.

அதைக் கேட்டவன் சும்மா இருக்க வில்லை. ஏதோ ஒரு தின்பண்டத்தைத் தன் கையினால் எடுத்து ஜகதீஷின் வாயில் போடவும் போனான். அதற்குள் ஜகதீஷின் கண்களில் திரையிட்ட நீர் முத்தாக உருண்டு கன்னங்களில் விழுந்து வழிந்தது.

"அடடே! உங்களுக்கு என்ன துயரம்? உங்கள் கண்களில் நீரைக் காண இந்தப் பாவி உயிரோடு இருக்க வேண்டுமா?" என்று கேட்ட கோகிலா தன் புடவைத் தலைப்பினாலேயே ஜகதீஷின் கண்ணீரைத் துடைத்தாள். ஆனால் அவளுடைய அந்தச் செய்கையினால், நிற்க வேண்டிய கண்ணீர் மேலும் பெருக்கெடுத்துத்தான் ஓடி வந்தது. அதைக் கண்டதும் கோகிலாவின் முகம் வாட்டமுற்றுத் தொங்கி விட்டது. அவள் பயந்து விட்டாள். ஜகதீஷின் துயரத்துக்குக் காரணம்தெரியாத அவளுக்கு என்ன ஆறுதல் சொல்வதென்று தோன்றவில்லை. கணவனின் கண்களிலே நீரைப் பார்த்த அவளுக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. அவள் கண்களிலும் நீர் 'குபுக்'கென்று பொங்கி வந்தது. கோகிலாவின் கண்களில் நீரைக் கண்டதும் ஜகதீஷ் சட்டென்று தன்னைச் சமாளித்துக் கொண்டான்; வேண்டுமென்றே வலுக் கட்டாயமாகப் புன் முறுவலையும் வரவழைத்துக் கொண்டான்.

"அம்மாடா! இன்று உங்களுக்கு என்ன வந்து விட்டது? உங்கள் கண்களில் நீர் துளித்து இன்று வரை நான் கண்டதே யில்லையே! நான் உயிரோடு இருக்க வேண்டும் என்றால் நீங்கள் இனி என்னெதிரே கண்ணீர் பெருக்கக் கூடாது. பெருக்கினால் அப்புறம் நீங்கள் என்னை இந்த உலகத்தில் காண முடியாது. என்ன, நான் சொல்வது புரிந்ததா?" என்று கோகிலா தன் கண்களை மறைத்திருந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டே கேட்டாள்.

"கோகிலா! நீயே பேசிக் கொண்டு போகிறாயே! என்னையும் இரண்டொரு வார்த்தைகள் பேச விட மாட்டாயா?" என்று கேட்டான் ஜகதீஷ்.

"முடியாது. முதலில் நீங்கள் உணவு அருந்தினால்தான் நான் உங்கள் பேச்சைக் கேட்பேன்!" என்று சொல்லியவாறே கோகிலா மறுபடியும் தன் கையில் ஒரு தின்பண்டத்தை எடுத்துக் கொண்டாள்.

"வேண்டாம், வேண்டாம்! நானே சாப்பிடுகிறேன்!" என்று சொன்ன ஜகதீஷ் எப்படியோ ஒரு கவளத்தை வாயில் போட்டுக் கொண்டு வெகு சிரமத்துடன் தொண்டைக்குக் கீழ் இறக்கினான். ஆனால் அன்று ஏனோ அவனுக்குத் தன் மனைவி தன்னிடம் காட்டும் அந்த அன்பையும் பரிவையும் காணப் பொறுக்கவில்லை. அவன் கண் கொட்டாமல் கோகிலாவையே பார்த்தவாறு, "ஏன், கோகிலா! ஒரு நாளைக்காவது நீ என்னை வெறுக்கக் கூடாதா? என்னிடம் கோபித்துக் கொள்ளக் கூடாதா? ஒரு தடவையாவது உன் கோபத்தைச் சமனப்படுத்தும் சந்தர்ப்பத்தைத் தயவு செய்து எனக்கு அளிக்கக் கூடாதா?" என்று கேட்டான்.

"என்ன இப்படித் தத்துப் பித்தென்று பேசுகிறீர்களே! உங்களை நான் எதற்காக வெறுக்க வேண்டும்? எதற்காகக் கோபித்துக் கொள்ள வேண்டும்? நீங்கள் சொல்வது எனக்கு ஒன்றும் விளங்கவே இல்லையே!"

"கோகிலா! ஒன்றுமே தெரியாதவள் போலப் பேசுகிறாயே! எனக்குத் தெரியாது என்று எண்ணாதே! அபாக்கியமே உரு வெடுத்தவனான என்னைக் கல்யாணம் செய்து கொண்டு நீ என்ன சுகத்தைக் கண்டாய்? சுகத்தைக் காண்பது ஒருபுறம் இருக்கட்டும். என்னிடம் எதற்காக இவ்வளவு அன்பைச் சொரிகிறாய்? நீ காட்டும் இந்த அபார அன்பும் பரிவும் என் மனத்தைச் சுடுகின்றன, தகிக்கின்றன; புண்படுத்துகின்றன. அதனால் நான் சொல்வதைக் கேள்! என்னை நன்றாகத் திட்டு; கடுமையாகக் கடிந்து கொள். அப்பொழுதுதான் என் ஆத்மாவுக்கு அமைதி ஏற்படும்; மனத்துக்கு நிம்மதி ஏற்படும்!" என்றான் ஜகதீஷ்.

அதைக் கேட்ட கோகிலா இலேசாகச் சிரித்தாள். "ஆமாம், இம்மாதிரி பல வருஷங்களுக்கு முன்னால் நீங்கள் என்னைப் பற்றி ஒரு கவிதை எழுதியிருந்தீர்கள் அல்லவா? நான்கு நாட்கள் இரவு பகல் என்று பாராமல் எனக்கு அதன் கருத்தைப் புரிய வைக்கப் பகீரதப் பிரயத்தனம் கூடச் செய்தீர்களே! ஆனால் மூளைக் குறைவுள்ள நான் தான் நீங்கள் எத்தனை எடுத்துச் சொல்லியும் புரிந்து கொள்ள வில்லை. இந்தச் சம்பவம் இன்றைக்கும் என் உள்ளத்தில் பசுமை மாறாமல் நிற்கிறது!" என்றாள்.

தன்னைப் பற்றிய புகழுரைகளைப் புரிந்து கொண்டாலும், புரிந்து கொள்ளாததாகக் காட்டிக் கொள்வதென்றும் அத்தகைய பேச்சுக்களை வளர விடாமல் தடுப்பதென்றும் கோகிலா தன் மனத்துள் முடிவு கட்டியிருந்தாள். அதனால் அவள் இம்மாதிரி சந்தர்ப்பங்கள் ஏதாவது நேர்ந்தால் புரிந்து கொள்ளாதவள் போல் நடிப்பாள்; அசடு போல் சிரிப்பாள். இல்லாவிட்டால் வேறு விஷயங்களைப் பற்றிய பேச்சை எடுத்து முந்திய பேச்சை மறக்கச் செய்ய முயலுவாள். அதோடு ஜகதீஷுக்குத் தன்னைப் பற்றிப் புகழ்வதற்குரிய சந்தர்ப்பமே சிறிதும் கிடைக்காமல் பார்த்துக் கொள்வாள்.

சிறிதும் வெளிப் பகட்டோ ஆடம்பரமோ இன்றிக் கணவனுக்காகவே உயிர் வாழ்பவளும், கணவனையே தன் தெய்வமாக—எல்லாமாக நினைப்பவளுமான மனைவி தன்

கணவன் கொள்ளும் ஆனந்தத்தில் என்ன பரமானந்தத்தைக் காண்கிறனோ, யார் கண்டார்கள்? தன்னுடையது என்று ஒன்றைத் தனித்து வைத்துக் கொள்ளாமல் தன்னையே கணவனுக்குச் சமர்ப்பணம் செய்து அவனுடனேயே ஐக்கியமாகி விடும் மாண்பு நம் பாரதப் பெண்மணிகளிடத்தில் எப்படித்தான் உருப்பெற்று ஊறி வளர்ந்திருக்கிறதோ? அதன் பலனைக் கோகிலா எந்த விதத்தில் பார்க்கப் போனாலும் ஜகதீஷின் வாழ்க்கைக்கு இன்றியமையாதவளாகத் தோன்றினாள். இல்லத்துக்கும் இல்லாளுக்கும் உள்ள தொடர்பு எத்தனையோ விஸ்தாரமானது. அதில் ஊறித் திளைக்கும் இல்லாளின் ஆனந்தத்துக்குக் கிடைக்கும் கௌரவமே தனிச் சிறப்பு வாய்ந்தது. ஆனால் எத்தனையோ கணவன்மார்களிடத்தில் இல்லத்தையும் இல்லாளையும் துறந்து இன்பம் அநுபவிக்கலாம் என்ற எண்ணம்தான் தலை தூக்கி நிற்கிறது. ஆனால் ஜகதீஷ் அவர்களைப் போலில்லாமல் ஒரு விதிவிலக்காக இருந்தான். கணவனுக்கும் மனைவிக்கும் இடையே இருந்த நீண்ட நெருங்கிய தொடர்பு அவனை இல்லத்திலும் இல்லாளிடத்திலும் இணையற்ற இன்பத்தை அநுபவிக்கக் கூடியவனாக ஆக்கி விட்டது.

தாம் பெறும் இன்பம் இவ் வையகமெல்லாம் தழைக்க வேண்டும் என்ற சீரிய நோக்கம் படைத்தவர்களைப் போல் அவன் தனக்கு இன்பம் அளிக்கும் இல்லாளைத் தானும் இன்பத்தில் ஆழ்த்த வேண்டும் என்று எண்ணுவான்; அதற்கான திட்டங்களும் போடுவான். ஆனால் அவன் என்ன திட்டமிட்டு என்ன? அவன் திட்டங்கள் அவன் நினைத்தபடி நிறைவேறினால் தானே? நம்மால் நம் மனைவிக்கு நாம் நினைத்தபடி இன்பம் அளிக்க முடியவில்லையே என்ற மனக் குறை அவன் பொறுமையை மிகவும் சோதித்தது. ஆனால் கோகிலா அதை ஒரு குறையாக எடுத்துக் கொள்ளவில்லை; நிறையாகவேதான் எடுத்துக் கொண்டாள். தன்னைப்போன்ற சுகசாலி இல்லையென்றே இறுமாந்தாள். அவனால் அவளுக்குச் சுகம் அளிக்க முடியாமற் போகப் போக அவள் தன்னைப் போன்ற பாக்கியசாலி யாருமே இல்லையென்று எண்ணத் தொடங்கி விட்டாள். கணவன் தன்னைக் கண்ணும் கருத்துமாகக் கவனிக்கிறான், தன்னை இன்பத்தி லாழ்த்து வதையே தன் குறிக்கோளாகக் கொண்டிருக்கிறான் என்றால் எந்த மனைவிக்குத்தான் இறுமாப்பு ஏற்படாது? இப்படி கோகிலா—ஜகதீஷின் தாம்பத்திய வாழ்க்கை இன்பமாக ஓடிக் கொண்டிருந்தது.

ஆலையிலிருந்து வீட்டை நோக்கித் திரும்பிக் கொண்டிருந்த ஜகதீஷின் மனக் கடலில் இத்தகைய எத்தனையோ சம்பவங்கள் அலை அலையாக எழுந்தன. நாம் எத்தனை தூரம் நடந்திருப்போம் என்பதில் அவனுக்குக் கவனம் செல்லவில்லை. மனத் திரையில் பளிச்சென்று பிரகாசிக்கும் எண்ணச் சித்திரங்களைப் பார்த்தவாறே அவன் தன் வீட்டை அணுகி விட்டான். கோகிலா மொட்டை மாடியிலிருந்து அவன் வருவதைப் பார்த்தாள். தன் வழக்கப்படி அவனை எதிர்கொண்டழைப்பதற்காக வாசற் படிக்கும் விரைந்தாள்.

ஜகதீஷ் தன் வீட்டு வாசலை அடைந்ததும் படியேறக் காலடி எடுத்து வைத்தான். அதே சமயம் பின்னாலிருந்து யாரோ கை நீட்டி அவன் தோள் பட்டையைத் தொட்டார்கள். அவனைத் தொட்டவனுக்கு மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கிக் கொண்டிருந்தது. ஏனெனில் அவன் அவ்வளவு வேகமாக ஓடி வந்திருந்தான். அவன் தன் கையிலிருந்த ஒரு காகிதத்தை ஜகதீஷின் கையில் திணித்து விட்டுக் கண் மூடிக் கண் திறக்கும் நேரத்தில் காற்று






தகப்பனுர் (குறுக்கெழுத்துப் போட்டி எழுதுபவர்):-ஏழாவது ஒன்ணு இரண்டா?
நர்ஸ் :— இரண்டு; உங்களுக்கு இரட்டைக் குழந்தைகள் பிறந்திருக்கு, ஸார்!

கப் பறந்து விட்டான். திகைத்து நின்ற ஜகதீஷ் சிறிது நேரம் கழித்து அந்தக் கடிதத்தைப் பிரித்துப் படித்தான். 'ஜகதீஷ், நீ எங்கு இருந்தாலும் உடனே ஓடி விடு. விவரத்தைக் கேட்டுத் தெரிந்து கொள்வதற்கென்று காத்திராதே. பதினையாயிரம் ரூபாய் திருடியதாக உன்மீது குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது!' என்று அந்தக் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தது.

அதைப் படித்து முடித்ததும் ஜகதீஷுக்கு ஆகாயமே இடிந்து தலையில் விழுந்து விட்டது போலத் தோன்றியது. பதினையாயிரம் ரூபாயா? திருட்டுப் போய் விட்டதா? அவன் திருடினனு? எங்கே திருடினன்? எப்பொழுது திருடினன்? எதற்காகத் திருடினன்? அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை.

கோகிலா பத்தடி தூரத்தில்தான் நின்று கொண்டிருந்தாள். அவளைப் பார்க்காமல் அவன் ஓடுவதா? அப்படி எதற்காக அவன் ஓட வேண்டும்? எதற்காக ஓட வேண்டுமா? இது என்ன அசட்டுக் கேள்வி? திருட்டுக் குற்றம் அவன்மேல் சாட்டப்பட்டிருக்கிறதே! அதற்காகவாவது அவன் ஓடித்தானே ஆக வேண்டும்? கண் காணுத இடத்துக்கு ஓடினல்தானே பிறர் கண்ணில் படாமல் இருக்கலாம்? இம்மாதிரி நிலையில் அவன் கோகிலாவைப் போய்ப் பார்த்துத்தான் என்ன செய்யப் போகிருன்? அவளிடம் இந்த விவரத்தையெல்லாம் எப்படிக் கூறுவது? என்னவென்று சொல்வது?

ஒரு கண நேரத்துக்குள் அவன் எது வெல்லாமோ இல்லாத சிந்தனைகள் எல்லாம் செய்து விட்டான். வீட்டுக்குள் நுழைவதா அல்லது வாசலில் இருந்த வண்ணமே வெளியே ஓடிவிடுவதா? இவ்விரண்டில் ஒன்றை நிச்சயிப்பதற்காக அவன் ஒரு கணம் திகைத்து நின்ருன். அதற்குள்ளாகவே இன்னெருவன் மூச்சு வாங்க மறுபடியும் அவனருகில் ஓடி வந்தான். "உங்களுக்குக் கடிதம் கிடைத்ததா, இல்லையா?" என்று பரபரப்போடு கேட்டான்.

"வந்தது!"

ஜகதீஷ் இயந்திரமாகப் பதில் சொன்னுன்.

"அப்புறம் எதற்காக இங்கே நிற்கிறீர்கள்? போலீஸ் உங்களைப் பின் தொடர்ந்து கொண்டிருக்கிறது. உடனே சீக்கிரமே இங்கிருந்து போய் விடுங்கள்!" என்ருன் அந்த ஆசாமி.

அப்புறமும் அங்கே நிற்க ஜகதீஷுக்கு என்ன பைத்தியமா பிடித்திருக்கிறது? வேகமாக அடிமேல் அடி எடுத்து வைத்துத் தன் கால் போனபோக்கில் நடக்கலானுன். அவன் பதினைந்து இருபது அடிகள்கூடப் போயிருக்க மாட்டான். அதற்குள்ளாக அவன் பின்னுலேயே ஒரு மோட்டார் வேகமாக வந்து நின்றது. திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். காருக்குள் உட்கார்ந்திருப்பவள் விஜயலக்ஷ்மி என்பதை அறிந்த பின்தான் அவனுக்குப் போன உயிர் வந்தது. விஜயலக்ஷ்மி தலையை வெளியே நீட்டி, "ஜகதீஷ் அண்ணுவா? எங்கே போய்க் கொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

"சும்மாத்தான் வெளியே உலாவப் போய்க் கொண்டிருக்கிறேன்!" என்று சொல்லி வைத்தான் ஜகதீஷ்.

அவனுக்கோ அங்கிருந்து எப்படியாவது சீக்கிரம் போய்விட வேண்டும் என்ற எண்ணம். கடிதம் எங்கிருந்து வந்தது, அதை எழுதியது யார் என்றெல்லாம் சிந்திக்க அவனுக்கு அப்பொழுது பொழுதும் இல்லை; மனமும் இல்லை. எத்தனைக் கெத்தனை முடியுமோ அத்தனைக்கத்தனை வேகமாகக் கண் காணுத இடத்துக்குச் சென்றுவிட வேண்டும் என்ற எண்ணம்தான் அவன் மூளையை அப்



ஒரு நல்ல ஆரோக்கியமான சின்னஞ்
சிறு குழந்தை தனது தாயின் இத
யத்தை மகிழச் செய்கிறது. திடகாத்
திரமான சிறிய உடல், வெண்மை
யான முத்துப் பற்கள்...இவைகளை
ஸெவன்ஸீஸ் காட் லிவர் ஆயில்
உட்கொள்ளுவதால் அடையலாம்.
இயற்கையான போஷாக்கு அளித்து
வலிவூட்டும் விட்டமின் சத்துக்கள்
நிரம்பியது காட் லிவர் ஆயில்.

# SevenSeaS

## ஸெவன்ஸீஸ்

## ஓர் இயற்கையான விட்டமின் உணவு




விவரங்களுக்கு :

கார் அண்டு கம்பெனி லிமிடெட்

த. பெ. 152 - 7814 - 1243

பம்பாய் - கல்கத்தா - மதராஸ்

BCS - 2



பி. டி. ஐ. ஸ்தாபனத்தின், பங்களூர் காரியாலய மானேஜர் ஸ்ரீ எ. ஆர். சுவாமி அவர்களின் குமாரி செல்வி ஜானகிக்கும் திருச்சூர். இம்பீரியல் பாங்கியைச் சேர்ந்த ஸ்ரீ ஆர். சுப்பிரமண்யனுக்கும் அக்டோபர் 24ம் தேதி பங்களூரில் சிறப்பான முறையில் திருமணம் நடந்தேறியது. வாழ்க மணமக்கள் !

பொழுது அரித்துக் கொண்டிருந்தது. அந்தகைய நிலையில் எங்கே போவது என்ற விஷயத்தை முடிவு செய்ய அவனுக்கு நேரம் எங்கே இருந்தது? அதனால் தெய்வ வசமாகத் தனக்குக் கிடைத்திருக்கும் அந்த வாகன வசதியைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்று உடனே தீர்மானித்தான்.

"நானும் உலாவத்தான் போகிறேன். என்னுடன் வேண்டுமானால் காரில் வாருங்களேன்!" என்று அதற்கேற்றாற்போல் விஜயலக்ஷ்மியும் சொன்னாள். ஜகதீஷும் சந்தர்ப்பத்தை நழுவவிடாமல் சட்டென்று சம்மதம் தெரிவித்துக் காரில் ஏறி உட்கார்ந்து கொண்டான்.

"ஆமாம், நீங்கள் இப்பொழுது தானே நோய்வாய்ப் பட்டிருந்து பிழைத்திருக்கிறீர்கள்? எங்கேயாவது உலாவப் போக வேண்டு மென்று தோன்றினால் எங்கள் வீட்டிலிருந்து காரோ வண்டியோ, எடுத்துக் கொண்டு போகக் கூடாதோ?"

"இதற்காக வெல்லாம் உங்களுக்கு வீண் சிரமம் கொடுப்பானேன் என்று......!"

வேறு சரியான பதில் கிடைக்காமற் போகவே ஜகதீஷ் ஆரம்பித்த வாக்கியத்தை அரைகுறையாக நிறுத்தினான்.

"எங்களுக்கு என்ன சிரமம்? வாகன வசதிகள் இம்மாதிரி காரியங்களுக்கு இல்லாமல் வேறு எதற்காக இருக்கின்றனவாம்? சிறிதும் சங்கோசமின்றித் தேவைப்படும் பொழுதெல்லாம் எடுத்துச் செல்லுங்கள். எங்களைக் கேட்க வேண்டும் என்பதுகூட இல்லை!" என்றாள் விஜயலக்ஷ்மி.

பிறகு சிறிது நேரம் இருவரும் பேசாமலே உட்கார்ந்திருந்தார்கள். மோட்டார் தன் போக்கில் வேகமாகச் சென்றுகொண்டிருந்தது. விஜயலக்ஷ்மி ஓரக் கண்களால் ஜகதீஷையே பார்த்துக் கொண்டிருந்தாள். ஜகதீஷ் அவளுடைய அச் செயலைக் கவனிக்கத் தவற வில்லை.

ஒருவன் தன்னை ரகசியமாகக் கடைக் கண்ணால் கவனிக்கிறான் என்று தோன்றினால் யாரையுமே நாணம் கவ்வுவது இயல்பு. அதுவும் அப்படிப் பார்க்கிறவர்கள் பெண்களாயிருந்து பார்க்கப்படுகிறவர்கள் ஆண்களாயி ருந்து விட்டால், கேட்கவும் வேண்டுமா? அம்மாதிரி சந்தர்ப்பங்களில் சில ஆண்கள் பெண்களைக் காட்டிலும் அதிகமாக வெட்கப்படத் தொடங்கினால் அதில் ஆச்சரியமுறுவதற்கு என்ன இருக்கிறது?

விஜயலக்ஷ்மியின் கடைக் கண் பார்வைக்கு இலக்கான ஜகதீஷ் நாணத்தினால் உடலைக் கூனிக் குறுகிக் கொண்டான். ஒரு கால் மீது இன்னொரு காலை எடுத்துப் போட்டுக் கொண்டான். அப்படிச் செய்வதனால் தன் நாணம் குறைந்து விடும் என்பது அவன் எண்ணம். ஆனால் அதற்கு நேர்மாறாக மேலும் நாணம் அதிகரிக்கத்தான் செய்தது.

அப்படி அவன் செய்யும்பொழுது ருசிகரமான இன்னொரு சம்பவமும் நிகழ்ந்தது. அதாவது ஜம்மென்று சுகமாக உட்கார்ந்திருந்த விஜயலக்ஷ்மியின் காலை அவன் கால் தீண்டிவிட்டது. எனவே, ஜகதீஷ் இன்னும் தர்மசங்கடமான நிலைக்குஉள்ளானான். விஜயலக்ஷ்மி தனது அந்தச் செய்கையைத் தவறாக எடுத்துக் கொண்டு விடக்கூடாதே, தன்னைத் தப்பர்த்தம் செய்து கொண்டுவிடக் கூடாதே என்று அவன் பயந்தான். அதற்காக அங்கே நிலவியிருந்த மௌனத்தைக் கலைத்து அவனாகவே அவளுடன் வலியப் பேச்சும் கொடுத்தான்.

"ஆமாம், தேர்தலின் முடிவு எப்பொழுது வெளியாகுமாம்?"

"இன்னும் சில தினங்களில் வெளியாகி விடலாமாம். ஆனால் நீங்கள்தான் தேர்தல் விஷயத்தில் எங்களுக்கு உதவி செய்ய மறுத்து விட்டீர்களே!"

"என்ன செய்வது? நான் என்னுடையதென்று ஒரு கொள்கை வகுத்துக் கொண்டிருக்கிறேன். அதை மீறிப் போக எனக்கு இஷ்டமில்லை. நான் சரியென்று சம்மதித்திருந்தால் என்னால் இயன்ற உதவிகளை நான் செய்திருக்க மாட்டேனா?"—ஜகதீஷ் இப்படிச் சொல்லிக் கொண் டிருக்கும் பொழுதே கனவேகமாகச் சென்று கொண்டிருந்த கார் கிறீச்சிட்டுக் கொண்டு நின்றது. எதிரே ஒரு போலீஸ்காரர் காரை நிறுத்துவதற்கான சமிக்ஞை காட்டியவாறு நின்று கொண்டிருந்தார். அதைக் கண்ட ஜகதீஷுக்குத் தான் ஓடி ஒளியும் ஒரு குற்றவாளி என்பது நினைவு வரவே பிராணனே போய் விடும் போலிருந்தது. (தொடரும்)

# உங்கள் பேனாவின்
# ஆயுளை
# நீடியுங்கள்!






## பார்க்கர் க்வின்க்

உபயோகியுங்கள்

## ஸால்வ்-X

### அடங்கிய மை இது ஒன்றே

இப்பொழுதே பார்க்கர் க்வின்க் உபயோகிக்கத் தொடங்குங்கள் பேனாவைப் பாதுகாக்கும் பொருள் ஸால்வ - X அடங்கிய மை இது ஒன்றுதான் இந்தப் பொருள் பேனா அடைபடுவதைத் தடுக்கிறது. உண்மையில் நீங்கள் எழுதுகையிலேயே பேனாவை துப்புரவாகக் கழுவி சுத்தம்செய்கிறது. மையோட்டம் தடையின்றி லாகவமாக அமைகிறது. க்வின்க் அழியா வர்ணங்களிலோ அல்லது கழுவக்கூடிய நிறங்களிலோ நீங்கள் விரும்பியபடி வாங்கலாம்.

விலை ரூ. 1/

பார்க்கர் பென் கம்பெனி (இந்தியா,) லிமிடெட்
த. பெ. 51, மதராஸ்
ஏக விநியோகஸ்தர்கள்: பாரி அண்டு கம்பெனி லிமிடெட்
டேர் ஹவுஸ், மதராஸ்-1



# சந்திர வதனம்

## ரா. ஜானகிராமன்

பூர்ணிரவு. வானத்திலே பூரண சந்திரன் பிரகாசித்துக் கொண்டிருந்தான்.

வைசாலி நகரத்தில் நிலவியிருந்த அமைதியை ராஜ வீதியின் வழியே சென்று கொண்டிருந்த இரண்டு புரவிகளின் குளம்பொலி குலைத்துக் கொண்டிருந்தது.

சாம்பல் நிறம் கொண்ட ஒரு உயர்ந்த ஜாதி அரபுக் குதிரையின் மேல் அமர்ந்திருந்தான், மகத சாம்ராஜ்யத்தின் அதிபன் தேவபூமி சுங்கன்.

தேவபூமிக்கு முப்பது வயதுக்கு மேலிராது. நல்ல உயரம், சிவந்த மேனி, எடுப்பான நாசி, அரும்பு மீசை. ஆனால் அருகில் சென்று பார்த்தால், ஒரு காலத்தில் மிகவும் சுந்தர புருஷனாகத் திகழ்ந்திருக்க வேண்டிய அவனுடைய முகத்தில் முதுமையின் சின்னங்களே காணப்பட்டன. கண்கள் குழி விழுந்திருந்தன. கன்னங்கள் ஒட்டி உலர்ந்து சுருக்கங்களுடன் காணப்பட்டன.

அவனுக்கு அருகில் சென்று கொண்டிருந்தவன் பெயர் வக்ரகேது. மன்னனின் அந்தரங்கத் தோழர்களில் ஒருவன்.

திடீரென்று தேவபூமியின் குதிரை நின்றது. காரணத்தை அறியாத வக்ரகேது கடிவாளத்தை இழுத்துப் பிடித்து மன்னனைப் பார்த்தான். தேவபூமியின் பார்வை சிறிது தூரத்தில் உயர எழும்பி நின்ற ஒரு மாளிகையின் உப்பரிகையின் மேல் லயித்திருப்பதைக் கண்ட வக்ரகேது, தானும் அங்கே நோக்கவும், திடுக்கிட்டான்.

பால் போன்ற அந்த நிலவின் ஒளியில், ஒரு மங்கை நின்று கொண்டிருப்பது நன்கு தெரிந்தது. மென்மையான தென்றலில் அவளுடைய கருங் கேசம் அலையலையாய்ப் புரண்டு கொண்டிருந்தது.

அந்தச் சமயத்தில் அவளுடைய பின் புறத்திலிருந்து யாரோ வந்து அவள் கண்களைப் பொத்தவும், வெகு லாகவமாகத் தன்னை விடுவித்துக் கொண்டு அந்தப் பெண் 'களுக்'கென்று சிரித்து விட்டு உட்புறம் சென்று மறைந்தாள்.

அவள் நின்று கொண்டிருந்த இடத்தையே கண் கொட்டாமல் தேவபூமி பார்த்துக் கொண்டிருந்ததை வக்ரகேது கவனித்தான். மெய்மறந்து குதிரையின் மீது உட்கார்ந்திருந்த மன்னனை மெதுவாகத் தோளில் தட்டினான்.

திடுக்கிட்டுத் திரும்பிய தேவபூமி, வக்ரகேதுவை நோக்கி விஷமத்துடன் குறுநகை புரிந்தான்.

"வக்ரகேது! அந்தப் பெண் யார்? சந்திரனைப் பழிக்கும் வதனத்துடன் கூடிய அவளைப் பார்த்ததும் ஒரு கணம் ஏதோ தேவ கன்னிகை தானோ என்று நான் மயங்கி விட்டேன். அவள் எப்படி இத்தனை நாட்கள் வரை என் திருஷ்டியில் விழாமல் தப்பினாள்!" என்று கேட்டான்.

"அரசே! அவள்......அவள்தான்......" வக்ரகேது மேலே பேச முடியாமல் திணறினான்.

"நண்பா! ஏன் இந்தத் தயக்கம்! சீக்கிரம் சொல்!" என்று துடித்தான் தேவபூமி.

"மன்னா! அவள்தான் முதலமைச்சர் வாசுதேவருடைய அருமைப் பெண் புஷ்யமித்திரை. வைசாலியில் தங்களுடைய பிரதிநிதியாயிருக்கும் சுசர்மனின் மனைவி."

வக்ரகேதுவின் தயக்கத்துக்குக் காரணத்தைத் தெரிந்து கொண்டான் தேவபூமி. அவனுடைய முகமும் பீதியால் ஒரு விநாடி நேரம் வெளுத்தது. ஆனால் உடனேயே சமாளித்துக் கொண்டு வக்ரகேதுவிடம் சொன்னான்:—

"நண்பா! அவள் யாராயிருந்தால் நமக்கென்ன! இன்றிரவே நம் அந்தப்புரத்தை அவள் அலங்கரிக்கச் செய்ய வேண்டியது உன் பொறுப்பு."

வக்ரகேது பதறிப் போய் விட்டான். பயத்தினால் அவன் உடல் 'கிடு கிடு' வென்று ஆடத் தொடங்கியது. நடுங்கும் குரலில் பேசினான்:

"வேண்டாம், அரசே! வேண்டாம். அந்த ஆசையை மட்டும் விட்டு விடுங்கள். நம்முடைய சாம்ராஜ்யத்திலிருக்கும் பேரழகிகள் எல்லாம் உங்கள் காலடியில் வந்து தவங் கிடக்கும்பொழுது உங்களுக்கேன் இந்த அற்ப மோகம்? நண்பன் என்ற முறையில் உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். வீணாக ஆபத்தில் சிக்கிக் கொள்ளாதீர்கள். வாருங்கள், அரண்மனைக்கு."

தேவபூமியின் உதடுகள் துடித்தன. கண்களை உருட்டி வக்ரகேதுவை நோக்கி விழித்தான். கோபத்தின் மிகுதியால் அவன் முகமே 'குப்' பென்று சிவந்தது.

"வக்ரகேது! இன்றுதான் நீ எப்படிப்பட்ட கோழை யென்று எனக்குத் தெரிந்தது. உனக்கு அச்சமிருந்தால் நானே இந்த விஷயத்தைக் கவனித்துக் கொள்கிறேன். நான் யார் என் பதையே மறந்து விட்டுப் பேசுகிறாய் நீ! மகத நாட்டின் அரசன் நினைத்தும் நடக்காதது என்று ஏதாவது உண்டா என்ன!"

தேவபூமி குதிரையைத் தட்டி விட்டான். வேக மாகச் செல்லத் துடித்துக் கொண்டிருந்த அந்தப் புரவி அரண்மனையை நோக்கிப்பாய்ந்து சென்றது.

இந்தியா முழுவதையும் ஒரு குடையின் கீழ்க் கொண்டு வந்து அன்பினாலும் தர்மத்தினாலும் ஆண்டு வந்த மகா சக்கரவர்த்தி அசோக வர்த்தன ருக்குப் பின் தோன்றிய மௌரிய அரசர்களால் மகத நாட்டைக்கூடச் சரிவர ஆள முடிய வில்லை.

கி. மு. 184–ல் மௌரிய வம்சம் க்ஷீணிக்கத் தொடங்கிய காலத்தில் புஷ்யமித்திரன் என்னும் சேனாபதி மகத ராஜ்யத்தின் தலைநகரான பாடலி புரத்தில் சிங்காதன மேறினான்.

சுங்க வம்சத்தை ஸ்தாபித்த புஷ்யமித்திரனும் அவனுடைய மகன் அக்னிமித்திரனும் சிறந்த வீரர்கள். சரிந்து கொண்டிருந்த மகத சாம்ராஜ் யத்தை அவர்கள் தூக்கி நிறுத்தினார்கள். ஆனால் அவர்களுக்குப் பின் தோன்றிய சுங்க அரசர்களின் ஆட்சியில் அது பழைய கதியையே அடைந்தது.

அந்த வம்சத்தின் பத்தாவது அரசனான தேவ பூமி சுங்கனின் காலத்தில் சாம்ராஜ்யம் என்று பெயரிட்டுக்கூட அழைக்க அருகதையில்லாமல் மகத ராஜ்யம் அழிந்து கிடந்தது.

தேவ பூமி சிறு வயதிலேயே பரம துஷ்டனாக விளங்கினான். ஆகவே, அரசனாக அவன் அரியாச னத்தில் அமர்ந்தவுடன், ராஜ்ய விவகாரங்களை யெல்லாம் முதல் அமைச்சர் வாசுதேவரிடம் ஒப் படைத்து விட்டு இன்பக் கேளிக்கைகளில் தன் பொழுதைப் போக்கி வந்தான்.

முதல் அமைச்சர் வாசுதேவர் மிக்க சாமர்த்திய சாலி. ராஜ தந்திரத்தில் நிபுணர். தேவபூமி பெயருக்கு மன்னனே தவிர வாசுதேவர்தான் உண்மையி லேயே மகத ராஜ்யத்தை அரசு செலுத்தி வந்தார்.

அவருடைய ஒரே புத்திரி யான புஷ்யமித்திரை மகா ரூபவதி. கல்வி கேள்விகளி லும் சிறந்தவள். மன்னனு டைய விபரீதப் போக்கை அவர் அறிந்திருந்த படியால், மிகுந்த சிரமத்துடன் அவளை கண்ணில் படாது அவளை வளர்த்து, முடிவில் வைசாலி யில் பிரதிநிதியா யிருந்த சுசர்மனுக்கு மணமுடித்து வைத்தார்.

சுசர்மன் சுத்த வீரன். அந் நாளில் வாட்போரில் நிகரற்று விளங்கினான். நேர்மையும் நியாயமும் நிறைந்த அறி வாளி. வைசாலி நகரத்து வாசிகள் அவனை மிகவும் மதித்து வந்தனர்.

சுசர்மன் தன் மனைவி புஷ்யமித்திரையை உயி ருக்கும் மேலாக நேசித்தான். கண்ணை இமை காப்பது போல அவளைக் காத்து வந்தான்.

பாடலிபுரத்தில் ஆடிய இன்ப வேட்டை போதாதென்று வைசாலிக்குப் புறப்பட்டுச் சென் றான் தேவபூமி. அங்கு தற்செயலாகப் புஷ்ய மித்திரையைக் கண்டவுடன் தன்னையே மறந் தான். வேட்கையின் மிகுதியில் தான் செய்ய நினைக்கும் காரியத்திலிருந்த ஆபத்தையும் பாவத் தையும் உணரவில்லை அவன். போர் முனையில் வாள் வீச்சைக் கண்டு பயந்தோடும் தேவபூமி, மன்மதன் கணைப் போரில் எப்படியேனும் வெற்றி காண உறுதி கொண்டான்.

அதே இரவு. நடுநிசியாவதற்கு இன்னும் சிறிது நேரமிருக்கும்.

உப்பரிகையிலே புஷ்ய மித்திரையுடன் சுசர்மன் உல்லாசமாக உரையாடிக் கொண்டிருந்தான்.

அந்தச் சமயத்தில் கையில் ஒரு ஓலையுடன் அங்கு ஒரு பணிப்பெண் வந்து நிற்கவும், சுசர்மன் எழுந்து அந்த ஓலையை வாங்கிப் படித்தான்.

தன் கணவனின் முகத்தில் தோன்றிய ஆயாசக் குறியைக் கவனித்த புஷ்யமித்திரை, "என்ன சமாசாரம்! இந்த வேளையில் யாரிடமிருந்து ஓலை வந்திருக்கிறது!" என்று கேட்டாள்.

"அரசன் தேவபூமி அனுப்பியிருக்கிறான். அவ சரமாக என்னைப் பார்க்க வேண்டுமாம். இந்த ஊருக்கு வந்து ஒரு திங்களுக்கு மேலாகியும் என்னைக் கண்டு பேச முயலாதவன் இன்றைக்கு எதற்காக இப்படித் திடீரென்று கூப்பிடுகிறா னென்று தெரியவில்லையே!"

புருவத்தைச் சுளித்து நிமிர்ந்து யோசனையி லாழ்ந்தான் சுசர்மன்.

"எதற்கும் போய்ப் பார்த்து விட்டுத் தான் வாருங்களேன். இல்லையேல் அரச கோபத்துக் குள்ளாக நேரும்" என்றாள் புஷ்யமித்திரை.

அவள் சொல்வது சரியென்று தோன்றவே சுசர் மன் குதிரையை ஆயத்தப் படுத்தச் சொல்லி விட்டு அரண்மனைக்குச் செல்லச் சித்தமானான்.

தேவபூமியின் அறையி னுள்ளே சுசர்மன் நுழைந்த சமயத்தில், மகத நாட்டின் மன்னன்



கைகளைக் கட்டிக் கொண்டு குறுக்கும் நெடுக்குமாக உலாவிக் கொண்டிருந்தான்.

சுசர்மனைக் கண்டதும் சட்டென்று திரும்பி அவன் எதிரில் வந்து நின்று கொண்டான்.

"சுசர்மரே! உங்களுக்குத் தொந்தரவு கொடுப்பதற்கு மன்னிக்கவும். ஒரு முக்கியமான தகவல் பாடலிபுரத்திலிருக்கும் நம் மூதன் மந்திரி வாக தேவருக்குத் தெரியப்படுத்த வேண்டும். சாதாரணப் போர் வீரன் எவனிடமும் நம்பிக் கொடுத்தனுப்புவதற்கில்லை. இந்த ஓலையை இப்பொழுதே எடுத்துச் செல்ல வேண்டும்."

தயாராக ராஜ முத்திரை போட்டு வைத்திருந்த ஓலைச் சுருளைச் சுசர்மனிடம் நீட்டினான் தேவபூமி.

அதைப் பெற்றுக் கொண்ட சுசர்மன், "அரசே! அப்படியென்ன அவசரமான காரியம்! என்னிடம் கூடச் சொல்லக் கூடாதா!" என்று கேட்டான்.

"ஒருவரிடமும் சொல்வதற்கில்லை. வீண் தாமதம் செய்யாமல் இங்கிருந்தவாறே பாடலிபுத்திரம் சென்று நாளைப் பகலுக்குள் விடையைப் பெற்றுக் கொண்டு வாரும்" என்று கூறினான் தேவபூமி.

சுசர்மனுக்கு ஒன்றுமே புரியவில்லை. ராஜ்ய விவகாரங்களில் தலையிடாத தேவபூமிக்கு அப்படியென்ன முக்கியமான காரியமிருக்குமென எண்ணமிட்டான் அவன். ஆகவே, இதில் ஏதோ சூது இருக்கிறதென்பதை மட்டும் உணர்ந்தான்.

"அரசே! நாளைக் காலையில் புறப்பட்டுச் சென்று பொழுது சாய்வதற்குள் திரும்பி விடுகிறேன். கங்கை பிரவாகமெடுத்து ஓடுகிறதென்று சொல்லிக் கொள்கிறார்கள். இன்றிரவே நதியைக் கடந்து செல்வது அசாத்தியம் என்று எனக்குத் தோன்றுகிறது."

சுசர்மன் தப்ப முயல்வதைத் தேவபூமி கண்டு கொண்டான். உடனே ஏளனமாகச் சிரித்துவிட்டு, "சுசர்மரே! நீரா இப்படிப் பேசுவது! என்னால் நம்ப முடியவில்லையே! தங்களால் சாதிக்க முடியாதது என்றும் ஒரு விஷயம் உண்டா என்ன!" என்று கேட்டான்.

இதற்குப் பதில் சொல்லத் தவித்தான் சுசர்மன்.

"உத்தரவு, அரசே! நான் சென்று வருகிறேன். ஆனால் ஒரு வேண்டுகோள். என் மனைவிக்கு



"ஜலதோஷம் காரணமாக என்னுடைய சொற்பொழிவை நிகழ்த்த முடியவில்லை. மன்னிக்க வேண்டும். நான் பேசுவதற்குப் பதிலாக என் பேச்சுப் பதிந்த கிராமபோன் தட்டை உங்கள் முன் வைக்கிறேன்!"

மட்டும் யாராவது சேவகன் மூலம் சொல்லியனுப்பி விடுங்கள். நான் உடனே திரும்புவேனென்று அவள் காத்திருப்பாள், பாவம்" என்று சுசர்மன் சொன்னதற்குச் 'சரி' யென்றான் தேவபூமி.

மன்னனை வணங்கிவிட்டுச் சுசர்மன் வேகமாக வெளியேறியவுடன் தேவபூமி சாளரத்தின் வழியே பார்த்துக் கொண்டிருந்தான். சற்று நேரத்துக்கெல்லாம் பாடலிபுத்திரத்தை நோக்கிச் செல்லும் ராஜபாட்டை வழியே ஒரு குதிரை புழுதியைக் கிளப்பிக் கொண்டு செல்வதைக் கண்டான். தொலைவில் அது சென்று மறையும் வரை காத்திருந்து விட்டுத் திருப்தியடைந்த தேவபூமி, கீழே விரைந்து சென்றான்.

*

சின்னத்தில் கை வைத்து வான வெளியை நிமிர்ந்து நோக்கினாள் புஷ்யமித்திரை.

அதுவரை நிர்மலமாயிருந்த ஆகாயத்திலே கூட்டம் கூட்டமாகக் கருமேகங்கள் வந்து சூழ்ந்து கொண்டிருந்தன. சிறு பொழுதில் மின்னும் நட்சத்திரங்களுடன் கூட முழுமதியும் மறைந்து எங்கும் காரிருள் கவிந்து கொண்டது.

திடுமெனப் பேய்க்காற்று வீசத் தொடங்கியது. கண்ணைப் பறிக்கும் மின்னலொன்று மேகத்திரையை வெட்டிச்சென்றது. அதைத் தொடர்ந்து மண்டையைப் பிளக்கும் இடி முழக்கமும் கேட்டது. மதம் பிடித்த இரு களிறுகள் ஒன்றுடன் ஒன்று மோதிக் கொண்டு பிளிறுவது போன்று பிரமை தட்டியது புஷ்யமித்திரைக்கு.

தனியே உப்பரிகையில் இருக்கப் பிடிக்காமல் கீழே இறங்கித் தன் சயன அறைக்குச் சென்றாள். மஞ்சத்தில் அமர்ந்தவாறே சாளரத்தின் வழியே அந்த அறையை ஒட்டி யிருந்த நந்தவனத்தை நோக்கினாள். பூத்துக் குலுங்கிக் கொண்டிருந்த செடிகள் காற்றில் நிலை கொள்ளாமல் தவித்தன.

காரணமில்லாத பயம் வந்து அவளைச் சூழ்ந்து கொண்டது.

வெளியே 'சோ'வென்று பெரு மழை பொழிய ஆரம்பித்து விட்டது.

அந்தச் சமயத்தில் அவள் அறையின் கதவு 'படீ'ரென்று திறந்து கொண்டது.

"வந்து விட்டீர்களா! ஏன் இவ்வளவு நேரம்!" என்று ஆவலுடன் கேட்டுக் கொண்டே எழுந்த புஷ்யமித்திரை, உள்ளே வந்தவனைப் பார்த்தவுடன் 'ஹா'வென்று வாய்விட்டலறி விட்டாள்.

ஏனெனில், சொட்டச் சொட்ட நனைந்த உடைகளுடன் இடுப்பில் கைவைத்தவாறே உதட்டில் புன்சிரிப்பு நெளிய, அவள் எதிரில் நின்று கொண்டிருந்தான் தேவபூமி சுங்கன்!

இருதயமே நின்று விட்டாற்போன்ற உணர்வு ஏற்பட்டது அவளுக்கு.

'கடகட'வென்று சிரித்தான் தேவபூமி.

"புஷ்யமித்திரை! நான் வந்தது உனக்குப் பிடிக்கவில்லையா என்ன! சுசர்மனைப் பாடலிபுத்திரத்துக்கு அனுப்பி யிருக்கிறேன். நாளையே திரும்பி விடுவான் என்றான்."

புஷ்யமித்திரையின் பயம் சற்றுத் தெளிந்தது.

"அரசே! நீங்கள் வந்து சென்னதற்கு மிகுந்த வந்தனம். எனக்கு வேலையிருக்கிறது. நான் போக வேண்டும். வழியை விடுங்கள்" என்று சொல்லிக் கொண்டே புஷ்யமித்திரை வெளியே செல்ல எத்தனிக்கவும், தேவபூமி வாசற்படியை மறைத்துக் கொண்டு நின்றான்.

"பெண்ணே! நான் வந்ததற்கு வேறொரு காரணமும் இருக்கிறது. இன்றிரவு உன்னைக்

# B. I. S. N. கம்பெனி லிமிடெட்



# S. S. ரஜுலா

**சென்னை - நாகப்பட்டினம் - பினாங்கு - சிங்கப்பூர்**

**மேற்படி கப்பல் கீழ்க்கண்ட தேதி வாக்கில் புறப்படும்**

**சென்னையிலிருந்து 3-12-1954 - நாகப்பட்டினத்திலிருந்து 4-12-1954**

**மாறுதலுக்கு உட்பட்டது**

ஸலூன் இடவசதி முழுவதும் புக் ஆகிவிட்டது. ஆனால் கம்பெனியின் ஏஜண்டுகளிடமிருந்து உணவுடனோ அல்லது உணவு இன்றியோ பர்த் வசதி இல்லாத பிரயாண டிக்கெட்டுகள் கிடைக்கும்.

கீழ்க்கண்ட பிரயாண மற்றும் ஆரோக்கிய பத்திரங்கள் தேவையாகும்.

1. மலேயா அல்லது சிங்கப்பூரில் உள்ள குடியேற்ற அதிகாரிகளால் கையெழுத்திடப்பட்ட அனுமதி பர்மிட்டுடன் கூடியதும் செல்லக் கூடியதுமான ஒரு பாஸ்போர்ட். பாஸ்போர்ட்டில் கையெழுத்திடப்படா விட்டால், ஒரு தனி அனுமதி பர்மிட்டோ அல்லது குடியேற்ற அதிகாரிகளால் அளிக்கப்பட்ட விஸிட்டர்ஸ் பாஸை பாஸ்போர்ட்டுடன் கொடுக்க வேண்டும். அல்லது மலேயா அல்லது சிங்கப்பூரில் உள்ள குடியேற்ற அதிகாரிகளால் அளிக்கப்பட்ட ரீ-என்ட்ரி பர்மிட். (பாரம் 1-D-64 அல்லது 65)

2. எல்லா ஸலூன், பர்த் வசதி இல்லாத பிரயாணிகளும் வருமான வரி ஆபீஸர்கள் ஒருவரிடமிருந்து (வெளி நாட்டுப் பிரிவு) முழு வருமான வரி செலுத்தியதற்கான அல்லது வரி விலக்கு சர்ட்டிபிகேட்டை, அவர்கள் வசிக்கும் வட்டாரத்து வருமான வரி ஆபீசரிடமிருந்து '' ஏ '' பாரம் வாங்கிக் கொண்ட பிற்பாடு பெற்றுக் கொண்டு வரவேண்டும்.

3. சுகாதார சர்டிபிகேட்டுகள் : 1-7-54 தேதி முதல் எல்லா ஸலூன் மற்றும் பர்த் வசதியற்ற பிரயாணிகள் காலரா தடுப்பு ஊசியும் வைசூரி அம்மை வராமலிருப்பதற்காக ஊசியும் போட்டுக் கொண்டதற்கு இந்திய அரசாங்கத்தினரால் வெளியிடப்பட்டுள்ள புதிய பாரங்களில் சர்டிபிகேட் வைத்திருக்க வேண்டும். மேற்படி சர்டிபிகேட்டுகள் அங்கீகரிக்கப்பட்ட சுகாதார அதிகாரிகளில் யாராவது ஒருவரின் அத்தாட்சி முத்திரையுடன் கூடியதாக இருக்க வேண்டும்.

இந்திய அரசாங்கத்தாரின் அங்கீகரிக்கப்பட்ட முத்திரை வைத்த சர்டிபிகேட்டுகளே பிரயாண டிக்கட்டுகள் வழங்குவதற்கு உரியது என ஒப்புக் கொள்ளப்படும்.

பினாங், போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலான இடங்களுக்கு நேரடியாக சரக்குகளின் ஏற்றுமதி ஏற்றுக் கொள்ளப்படும். சிங்கப்பூரில் மாற்றி பாங்காக்கிற்கு அனுப்புவதற்கான சரக்குகளும் ஏற்றுக் கொள்ளப்படும்.

○●○

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றுமதி விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதுக :

| | |
|---|---|
| **பின்னி & கோ., (மதராஸ்) லிட்.** | **மதுரா கம்பெனி லிமிடெட்** |
| 7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1 | முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம் |



கண்டது முதல் என் மனம் ஒரு நிலையிலில்லை. என் உள்ளத்தில் கொழுந்து விட்டெரியும் தாபத்தைத் தணிக்கும் சக்தி உன்னிடம் தான் இருக்கிறது. சரியென்று சொல்ல மாட்டாயா!" என்று பிதற்றிக் கொண்டே அவளை நெருங்கி, "பெண்ணே! வீண் தகராறு செய்யாதே! உன்னை என்னிடமிருந்து மீட்பதற்கு இன்று யாராலும் முடியாது" என்றான்.

வெளியே அண்டங்களெல்லாம் தவிடு பொடியாகி விட்டதுபோலப் பயங்கரமாக இடித்தது.

அதே சமயத்தில் அந்தப் பேரொலியையும் மங்கச் செய்யும் குரலில், "ஏன்! என்னால் முடியும்!" என்று யாரோ கர்ஜித்ததைக் கேட்டுத் திரும்பினான் தேவபூமி.

அறை வாயிலில் கோபக் கனல் வீசும் கண்களுடன் சுசர்மன் நின்று கொண்டிருந்தான். விளக்கொளியில் அவனுடைய கையில் உருவிய வாள் பளபளத்துக் கொண்டிருந்தது.

பேச முடியாமல் வாய் குளறியது தேவபூமிக்கு. கிலி பிடித்து, கால்கள் துவள, அவ்விடத்தில் நிற்க முடியாமல் தள்ளாடினான் அவன்.

"உன் தீய எண்ணங்களை ஒருவாறு ஊகித்தே திரும்பி வந்தேன். நான் நினைத்தவாறே நடந்து விட்டது. பதரே! உன் கை வரிசையை ஒரு அபலையிடமா காட்ட முயன்றாய்! உன் உடலில் சுங்கர்களின் இரத்தம் ஒரு சொட்டு இருக்குமாயின் என்னுடன் சண்டையிடத் தயங்காதே. உன் மானத்தை இந்த வாளின் முனையிலாவது காப்பாற்றிக் கொள்!" என்று முழங்கிக் கொண்டே கையிலிருந்த வாளைத் தேவபூமியை நோக்கி எறிந்தான் சுசர்மன்.

சுசர்மனின் கத்தி வீச்சு ஒன்றைக்கூடத் தன்னால் தடுக்க முடியாதென்பதைத் தேவபூமி நன்கு அறிவான். ஆகவே அவன் வீசியெறிந்த வாளைப் பிடிக்காமல் ஒதுங்கவும், அது 'கணகண' வென்று ஒலித்துக் கொண்டு தரையில் விழுந்தது.

அதே தருணத்தில் தப்பியோடும் எண்ணத்துடன் சாளரத்தை நோக்கிப் பாய்ந்தான் தேவபூமி. அவனைத் துரத்தி வந்த சுசர்மன் வாளை வீசவும் அது தேவபூமியின் மேலங்கியை மட்டும் கிழித்துக் கொண்டு சென்றது. மீண்டும் சுசர்மன் வாளை ஓங்குவதற்கு முன் தேவபூமி கீழே குதித்து ஓட்டம் பிடித்தான்.

அதே தினத்தில் பின்னிரவு. மழை நன்றாக அடித்து நின்று விட்டது. சுசர்மனின் மாளிகையில் அவனுடைய ஆப்த நண்பன் சசாங்கனுடன் சுசர்மன் உரையாடிக் கொண்டிருந்தான். மன்னனின் கேவலமான சூழ்ச்சி குலைந்ததைப் பற்றி விவரமாகத் தன் நண்பனிடம் தெரிவித்தான் சுசர்மன். சசாங்கன் சொன்னான்.

"சுசர்மா! இவ்வளவு தூரம் விஷயம் மிஞ்சி விட்ட பிறகு நீயும் உன் மனைவியும் இந்நகரில் இருப்பதே பெரும் அபத்தை விளைவிக்கும். தேவபூமியின் ஏவலைச் செய்ய இங்கு பலர் இருக்கின்றனர் என்று எனக்குத் தெரியும். பாடலியில் இருக்கும் வாசுதேவரிடம் உடனே செல்வதே உசிதமென்று என் புத்திக்குப் படுகின்றது."

சுசர்மன் ஏளனமாகச் சிரித்தான்.

"சசாங்கா! என் செவிகளையே என்னால் நம்ப முடியவில்லையே! நீ செய்யச் சொல்லும் காரியம் ஒரு சுத்த வீரனுக்கு அழகா என்ன! வேறென்ன சொன்னாலும் கேட்கிறேன். எக்காரணங் கொண்டும் நான் தேவபூமிக்குப் பயந்தோடுவதென்பது மட்டும் முடியாது."

சசாங்கன் குறுக்கிட்டான்.

"சுசர்மா! தேவபூமியின் முறைகளை நன்கறிந்த நீயா இப்படிப் பேசுகிறாய்! சூழ்ச்சியைச் சூழ்ச்சியால்தான் வெல்லவேண்டும். நண்பா! உன்னைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். என் சொல்லைத் தட்டாதே. இன்று விடிவதற்குள் மாறுவேடமணிந்து நீங்களிருவரும் நகரை விட்டுச் செல்லாவிடில் எந்த வழியிலாவது தேவபூமி உங்களுடைய உயிருக்கு உலை வைத்து விடுவானென்பது திண்ணம். உடனே புறப்படு!"

சுசர்மனைத் துரிதப்படுத்தினான் சசாங்கன். ஆனால் சுசர்மன் அசையும் வழியாகக் காணோம். வெகு நேரம் இரு நண்பர்களுக்கும் தர்க்கம் நடந்தது. முடிவில் சசாங்கனின் வற்புறுத்தலைப்






பொறுக்க முடியாமல் அவன் சொன்னதைச் செய்ய இசைந்தான் சுசர்மன். விடிவதற்குள் ஒரு மூடு பல்லக்கில் புஷ்யமித்திரையும் சுசர்மனும் மாறு வேடமணிந்து பாடலிபுத்திரத்தை நோக்கிக் குறுக்குப் பாதையில் சென்றனர்.

சுசர்மனின் மாளிகையின் உப்பரிகையில் நின்று கொண்டிருந்த சசாங்கன், பல்லக்கு கண்களுக்கு மறையும் வரை பார்த்துக் கொண்டிருந்து விட்டுப் பெருமூச்செறிந்தான். தன் உயிர் நண்பனும் அவர் அருமை மனைவியும் வழியில் தீங்கொன்று மடையாமல் செல்ல வேண்டுமேயென்று கவலைப் பட்டான் அவன். திடீரென்று அவன் மனத்தில் ஒரு எண்ணம் தோன்றியது. தானே நேரில் பாடலிக்கு ஒரு முறை போய் விட்டு வந்து விடலாமென்று தீர்மானித்துக் கொண்டான் அவன். நல்ல வேகமாகச் செல்லும் குதிரை மேல் சென்றால், குறுக்குப் பாதையில் சென்றவர்களைப் பாடலி சேருமுன் பிடித்து விடலா மென்று அவனுக்குத் தெரியும்.

சிறிது நேரத்துக்கெல்லாம் பாடலிக்குச் செல்லும் ராஜபாட்டை வழியே குதிரையின் மேல் வேகமாகச் சென்று கொண்டிருந்தான் சசாங்கன். அதிகாலை நேரமாகையால் ராஜபாட்டையில் ஆள் நடமாட்டம் அதிகமில்லை.

பாதையில் ஒரு கடினமான திருப்பம் வந்தது. மற்ற இடங்களை விட அங்கு செடி கொடிகள் அதிகமாக வளர்ந்திருந்தபடியால் இருண்டு காணப் பட்டது. பாய்ந்து வந்த குதிரையை இழுத்துப் பிடித்து மெதுவாக விட்டுத் திருப்பினான் சசாங்கன்.

சாலையின் இரு பக்கங்களிலிருந்தும் ஆயுதபாணிகளாக காலைந்து போர் வீரர்கள் வெளிப்பட்டு அவன் குதிரையைச் சூழ்ந்து நின்றனர்.

மின் வெட்டும் நேரத்துக்குள் இடையிலிருந்த வாளை உருவி, சண்டைக்கு ஆயத்தமானான் அவன். அதையே எதிர்பார்த்திருந்தவர் போல இரண்டு பேர் 'தொப்', 'தொப்' பென்று மேலே யிருந்த மரக் கிளைகளிலிருந்து அவன் மேல் குதித்தனர்.

அந்த அதிர்ச்சியைத் தாளாமல் குதிரையிலிருந்து கீழே மண்ணில் விழுந்தான் சசாங்கன். அவன் எழுந்திருக்க முயன்ற போது வீரர்களில் ஒருவன் அவனை வெட்டி வீழ்த்தினான். அந்தத் துஷ்டர்கள் தேவபூமியின் ஆணையின் பேரில் சுசர்மனைத் தீர்த்துவிட வேண்டுமென்று அனுப்பப்பட்டவர்கள். ஆனால் அவர்களோ உருவத்திலும் சாயலிலும் கிட்டத்தட்ட சுசர்மனையே ஒத்திருந்த சசாங்கனை, சுசர்மனென்று நினைத்துக் கொன்று விட்டனர்.

சசாங்கனின் உயிரற்ற உடலை அடர்ந்த காட்டுக்குள் வீசி யெறிந்து விட்டு வைசாலியை நோக்கி விரைந்தனர் அந்தக் கொலைகாரர்கள். செய்தியைக் கேட்ட மன்னன் தேவபூமி 'சுசர்மன் ஒழிந்தான்' என்று நினைத்து மகிழ்ச்சியடைந்தான். என்றாவது ஒரு நாள் புஷ்யமித்திரையை அடையலாமென மனப்பால் குடித்தான் அவன்.

மேற்சொன்ன சம்பவங்கள் நடைபெற்று ஒரு மாதத்துக்கு மேலாகி விட்டது. ஒரு நாள், மாலை நேரம். தேவபூமி சுங்கன் பாடலிக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தான்.

நகரில் நுழைந்த மன்னனை வரவேற்க முதன் மந்திரி வாசுதேவரையும் ஒரு சில அரசாங்க உத்தியோகஸ்தரையும் தவிர, வேறு மக்கள் தென்பட வில்லை. அரசனை தெய்வமென்று கொண்டாடி வந்த அந்தக் காலத்திலும் கூட மகதநாட்டின் மன்னன் தன் பிரஜைகளின் நன்மதிப்பைச் சிறிதும் பெறவில்லை.

மெய்காப்பாளர் சூழப் பாடலி புத்திரத்தின் அகன்ற வீதிகளின் வழியே சென்று கொண்டிருந்த தேவபூமியை மேன் மாடங்களிலிருந்து கண்ட மங்கைகளெல்லாம் ஓடி ஒளிந்தனர்.

தேவபூமி வாசுதேவரைக் கேட்டான்.

"முதன் மந்திரி! பட்ட மகிஷிக்கு நம் மேல் கோபமுண்டா வென்று உமக்குத் தெரியுமா?"

மேலெழுந்து வந்த உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு பதிலளித்தார் வாசுதேவர்.

"அரசே! வஸந்த மண்டபத்தில் தங்கள் வருகைக்காகக் காத்திருப்பதாகச் சொன்னார்கள் அரசி. தாங்கள் நேரே அங்கு செல்வதே நல மென்று எனக்குத் தோன்றுகிறது."

குதிரையைத் தட்டி விட்டு எல்லோருக்கும் முன்னால் சென்றான் தேவபூமி.

வஸந்த மண்டபத்தினுள் அவன் நுழையு முன்பே ஆதவன் மலைவாயில் விழுந்து விட்டான். அந்தி நேரத்தின் மங்கிய ஒளியில் மண்டபத்தின் நடுவிலிருந்த பளிங்கு மேடையில் மகத நாட்டின் அரசி உட்கார்ந்திருப்பது போலத் தேவபூமியின் கண்களுக்குத் தெரிந்தது.

அருகிலிருந்த பூஞ்செடியிலிருந்து மலர் ஒன்றைக் கொய்து தன் மனையாளின் கூந்தலில் சூட நினைத்து மெல்லடி வைத்துப் பின்புறமாகச் சென்றான் தேவபூமி. அருகில் சென்று காதல் மொழிகளைக் கொஞ்சியவண்ணம் அவள் தலையை மூடியிருந்த அங்கியை மெதுவாக நீக்கினான்.

திடீரென எழுந்து திரும்பிய உருவத்தைக் கண்டு திடுக்கிட்டான் தேவபூமி. அனல் பறக்கும் கண்களுடன் கோபமே பயங்கரமான உருக் கொண்டு வந்தாற்போல நின்று கொண்டிருந்தான் சுசர்மன்!

எதிர்பாராத அதிர்ச்சியினால் வாயடைத்து நின்றான் தேவபூமி. அவன் கையிலிருந்த மலர் தானாகவே நழுவிக் கீழே விழுந்தது.

'இடி இடி' யென்று பெருங் குரலில் நகைத்தான் சுசர்மன். அந்தச் சிரிப்பொலியில் மண்டபமே தன் தலை மேல் அதிர்ந்து விழுந்து விட்டதைப் போன்ற உணர்ச்சியை அடைந்தான் தேவபூமி.

திக்பிரமை பிடித்து நின்ற தேவபூமியை நோக்கிக் கர்ஜித்தான் சுசர்மன்.

"அங்களே! உன் கொடிய வாழ்க்கையின் முடிவு நெருங்கி விட்டது. முன்னொரு தரம் என் பிடியிலிருந்து தப்பி யோடி விட்டாய். ஆனால் இம்முறை அவ்வாறு தப்ப இயலாதென்பதை அறிந்துகொள். என் மனைவிக்கு நீ இழைக்க நினைத்த தீங்கைப் பற்றி நான் மறந்து விட்டேன். ஆனால் என் ஆருயிர் நண்பனை நீ வஞ்சகமாகக் கொன்றதை மட்டும் என்னால் மன்னிக்க முடியாது. உன் குற்றத்துக்கேற்ற தண்டனையைப் பெற்றுக்கொள். ஹூம்! சீக்கிரம்! உன் வாளை உடனே உருவி நில்!"

அந்தக் கோழை மன்னனுடன் சண்டையிடும் சந்தர்ப்பம் சுசர்மனுக்கு ஏற்படவில்லை. ஏற்கெனவே பலவீனமா யிருந்த தேவபூமியின் இருதயம் 'படபட'வென்று ஒரு முறை வேகமாக அடித்து விட்டு, நின்றே போய் விட்டது. அடி வெட்டப்பட்ட மரத்தைப் போல அவனுடைய உயிரற்ற உடல் 'மடா'ரென்று கீழே சாய்ந்தது. தேவபூமியின் பாப ஆத்மாவுக்கும் கடைசியில் விடுதலை கிடைத்து விட்டது.

பாடலிபுத்திரத்தின் வாசிகளெல்லாம் கொடுங்கோல் மன்னன் ஒழிந்தானென்று ஆனந்தக் கூத்தாடினர். எல்லோரும் தேவபூமி அடிமைப் பெண்ணொருத்தியால் மாய்க்கப் பட்டானென்ற வதந்தியையே நம்பினர்.




காலையில் சென்ட்ரல் ஸ்டேஷனுக்குப் போகத் தன்னைத் தயார் செய்து கொண்டிருந்தான் ரகு. பம்பாய் மெயிலில் அவன் அத்தை அன்று வருகிறாள். இன்னும் ஒரு மாதத்தில் நடக்க விருக்கும் ரகுவின் கல்யாணத்துக்காகத்தான் அவள் வருகிறாள்.

ரகுவின் தகப்பனார் அருணசலத்துக்குக் காந்தா ஒரே தமக்கை. அவளைத் தன் பிள்ளையின் கல்யாணத்துக்கு வரும்படி அழைத்திருந்தார். ரயிலும் வந்தது. அதில் அத்தையும் வந்தாள். "அத்தை, வா! பிரயாணம் சௌகரியமாக இருந்ததா?" என்று கூறி வரவேற்றான் ரகு.

"ஏண்டா ரகு! உனக்கா கலியாணம்?" என்று ஒரு பெரிய வெடிகுண்டைத் தூக்கிப் போட்டாள் அத்தை.

"ஏன் அத்தை உனக்குச் சந்தேகமா யிருக்கிறதா?" என்று கேட்டான் ரகு.

"என்னடா இது! கலியாணப் பிள்ளைக்குள்ள உற்சாகமே இல்லையே உன்னிடம்?"

"ஏது! வந்ததும் வராததுமாக என்ன வெல்லாமோ கேட்கிறாயே, அத்தை?"

"சரிதாண்டா! ஒரு 'பேபி டாக்ஸி'யைக் கூப்பிடு!" என்றாள் அத்தை.

வாடகைக் காரில் ஏறிக் கொண்டார்கள் அத்தையும் மருமானும். கார் நுங்கம்பாக்கத்தை நோக்கி நகர்ந்தது.

"அத்தை! நீ என் மனசை எப்படித் தெரிந்து கொண்டாய்?"

"ஏண்டா! நான் கிழவி ஆகிவிடவில்லை என்றாலும், நான் அடைந்திருக்கும் அனுபவம் போதுமே. விஷயம் என்ன, என்னிடம் சொல்லேன்?" என்றாள் அத்தை.

"விஷயமா, அத்தை? இந்தக் கலியாணத்தில் எனக்கு இஷ்டமே இல்லை. என் தலையில் அப்பா அந்தப் பெண்ணைக் கட்டுகிறார், போயேன்" என்று அலுத்துக் கொண்டான்.

"உன் மனசுக்குப் பிடிக்காத பெண்ணை ஏன் பலவந்தப் படுத்திக் கலியாணம் பண்ணி வைக்கிறான், அருணசலம்?"

"அத்தை, பெண் அழகில்லை. படிப்பாவது உண்டா? அதுவும் கிடையாது. பாட்டோ 'என்ன விலை?' என்று கேட்பாள். நான் ஒவ்வொரு பெண்ணாக வேண்டாம், வேண்டாம் என்று சொல்லித் தட்டிக் கழிக்கிறேனும். அதற்காக எனக்குத் தண்டனை இது."

"என்னடா ரகு! நீ ஒரு ஆண் பிள்ளைதானே! இப்படிப் பேச உனக்கு வெட்கமாக இல்லை? கலியாண முகூர்த்தத்துக்கு இன்னும் ஒரு மாதம்கூட இல்லையே!"

"அத்தை, உன்னைத் தான் நம்பி இருக்கிறேன். நீதான் ஏதாவது வழி பண்ணி இந்தக் கல்யாணத்தை நிறுத்தி விடணும்!" என்று பரிதாபமாகக் கெஞ்சினான் ரகு.

"பலே! ஆயிரம் பொய் சொல்லி ஒரு கலியாணம் முடிக்கணும் என்பார்கள். நீ உன் கல்யாணத்தை நிறுத்திவிட யோசனை கேட்கிறாய். எனக்கு ஒரு பெண் இருந்தாலாவது தைரியமாக உனக்குக் கொடுத்து இந்தக் கல்யாணத்தை நிறுத்தி விடுவேன்" என்றாள்.

காந்தாவை அத்தை என்றதனால் ஏதோ ஒரு பட்டிக்காட்டுக் கிழம் என்று அவளை நினைத்துவிட வேண்டாம். நல்ல நடு வயது ஸ்திரீ. ஆனால் அவள், பாவம்! ஓர் அநாதை. அவள் மணமாகிக் கணவனுடன் பம்பாய் சென்றாள். பம்பாயில் ஓரிரண்டு ஆண்டுகள் கணவனுடன் தனி வாழ்க்கை நடத்தினாள். கணவன் நல்ல உத்தியோகத்திலிருந்தான். திடீரென்று ஒருநாள் மாரடைப்பால் இறந்தான். காந்தா நிர்க்கதி ஆனாள். ஆனால் மனோதிடமும் தேகவலிவும் இருந்தன. பம்பாயிலேயே காலங் கழிக்கத் தலைப்பட்டாள். அங்கு அவள் தன் குணத்தினாலும், சாதுர்யத்தினாலும் பெரிய மனிதர்கள் வீட்டில் சேவை செய்யத் தலைப்பட்டாள். அந்தப் பெரிய மனிதர்கள் வீட்டுப் பெண்மணிகளுக்கும், காந்தா மாமி இல்லாமல் ஒரு காரியமும்



பம்பாய்ப் பிரமுகர் ஸ்ரீ ஏ.வி. ராமலிங்கம் அவர்களின் சகோதரர் ஸ்ரீ ஏ. வி. ஜி. சுந்தரம் அவர்களின் புதல்வி சௌபாக்கியவதி கமலத்துக்கும் ஸ்ரீ. டி. எஸ். கிருஷ்ண மூர்த்திக்கும் அக்டோபர் 24ந் தேதி பம்பாய் மாதுங்காவில் மிகவும் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. வாழ்க மணமக்கள்!

அக்டோபர் மூதல் தேதியன்று சென்னை செயின்ட்மேரீஸ் மண்டபத்தில் பர்மாஷெல் தொழிற் சங்க நாலாவது மகாநாடு வெகு விமரிசையாக நடைபெற்றது. மகாநாட்டுக்கு மூதல் நாள் நடந்த குடும்ப நிகழ்ச்சியில் பர்மாஷெல் கம்பெனி தண்டையார்ப் பேட்டைக் கிளையைச் சேர்ந்த ஸ்ரீ மோகனரங்கம் தம்பதிகள் நாட்டியம் செய்து சிறப்பித்த காட்சியையும், மகாநாட்டின் பொதுக் காரியதரிசி ஸ்ரீ ராஜகோபாலன் பேசும் பொழுது, மேடைமீது மூதன் மந்திரி ஸ்ரீ காமராஜர், சங்கத் தலைவர் ஸ்ரீ குருசாமி முதலியவர்கள் வீற்றிருப்பதையும் படத்தில் காணலாம்.

நடக்காது. குழந்தைகளுக்கு எண்ணெய் தேய்த்து விடுவது, அவர்களுக்கு விளக்கெண்ணெய் புகட்டுவது, அப்பளம் இடுவது, வடம் போடுவது, இட்டிலி, தோசைக்கு அரைப்பது எல்லாம் காந்தாமாமி செய்தால் தான் பம்பாய்த் தமிழன்னைகளுக்குத் திருப்தியாக இருக்கும். தவிரவும் சமயோசித புத்திமதி கூறுவதிலும், கலியாணங்கள் முடித்து வைப்பதிலும் காந்தாமாமிக்கு நிகர் காந்தா மாமி தான். அப்படிப்பட்டவள் தன் அருமை மருமான் ரகுவின் கலியாணத்துக் கென்று புறப்பட்டு வந்தாள். ரகு சொன்னதைக் கேட்டவுடன் அவள் மனம் படாத பாடுபட்டது.

வீடு வந்து சேர்ந்ததும் காந்தா தன் தம்பி அருணாசலத்துடன் தனியாகப் பேசினாள். தன் தம்பி மனைவி பார்வதியுடனும் பேசிப் பார்த்தாள். ரகுவுக்கு நிச்சயம் செய்திருக்கும் இந்தக் கலியாணம் நடக்கத்தான் வேண்டும் என்று அவர்கள் பிடிவாதம் செய்தார்கள். அதுமுதல் காந்தாவும் தன் காரியங்களைக் கவனிக்கத் தொடங்கினாள். நடுவில் ஒருநாள் பெண் வீட்டுக்குப் போய்ப் பெண்ணைப் பார்த்தாள். அவள் மனசுக்குத் திருப்தியே இல்லை. பம்பாயில் விதவிதமான ஜனங்களைப் பார்த்துப் பண்பட்ட கண்களாயிற்றே!

ரகு அத்தையை விடாமல் நச்சரித்தான். "அத்தை, எப்படியாவது இந்தக் கல்யாணத்தை நிறுத்திவிட வேண்டும். அத்தை! அது உன்னால்தான் முடியும். பெரிய மனசு வைத்து இந்தக் காரியத்தை எப்படியாவது செய், அத்தை!" என்று அவளிடம் ஒருவரும் அறியாமல் கெஞ்சினான்.

"ரகு! உன் அப்பாவும் அம்மாவும் இடித்த புளிமாதிரி இருக்கிறார்கள். இதில் நான் என்ன செய்ய முடியும்? என்னைப் பொல்லாப்புப் படச் சொல்கிறாயா?" என்றாள்.

"அத்தை! எனக்கு அதெல்லாம் தெரியாது. நீதான் எனக்குக் கதி" என்று மறுபடியும் கெஞ்சினான்.

"என்னடா ரகு, என்னை ஓயாமல் துளைத்தெடுக்கிறாயே! உனக்கு எங்கே வேலை, என்ன சம்பளம் என்கிற விவரம் ஒன்றும் சொல்லவில்லையே?"

"அத்தை, எனக்குக் 'கருடா அண்டு கம்பெனி'யில் வேலை. இருநூறு ரூபாய் சம்பளம்" என்றான் ரகு.

அத்தையின் முகம் ஆச்சரியத்தினால் மலர்ந்தது. "ஏண்டா, கருடா அண்டு கம்பெனியா? அதற்குத் தலைமை ஆபீஸ் பம்பாய் தானே?" என்று கேட்டாள்.

"ஆமாம், அத்தை! சென்னையில் அந்தக் கம்பெனிக்கு ஒரு கிளை ஸ்தாபனம் இருக்கு."

"பேஷ்! ரொம்ப நல்லதாய்ப் போயிற்று. என்னால் ஆனதை நான் செய்கிறேன். கவலைப்படாதே" என்று அத்தை சொன்னதும் ரகுவின் கண்களில் ஜலம் தேங்கியது.

"ஏண்டா அசடு! பெண்களைத்தான் பலவந்தப்படுத்திக் கலியாணம் செய்துகொள்ளச் சொல்வார்கள். இது புதுமாதிரியாக இருக்கிறது, பிள்ளையைக் கட்டாயக் கலியாணம் செய்து கொள்ளச் சொல்லுகிறது! நீ ஒரே பிள்ளையாய்ப் பிறந்து விட்டாய். அப்பா



ஹா, என்ன சகிக்க முடியாத தலைவலி!

# ஸாரிடான்

உட்கொள்ளுங்கள்

இப்பொழுது புதிய, சுகாதார முறையிலுள்ள
மைக்கா காகித பாக்கிங்கில் கிடைக்கும்

ஒரு வில்லை 2 அணா

மய நிறுத்துகிறது - விச்ராந்தி அளிக்கிறது - புத்துணர்ச்சியூட்டுகிறது



குடந்தை அரசினர் கல்லூரி நூற்றாண்டு விழாவில், தர்ம ரக்ஷாமணி ஸ்ரீ கே. பாலசுப்ரமண்ய ஐயர் எம். எல். ஸி., அவர்கள் தலைமையில், கல்லூரி ஆசிரியர்களும் மாணவர்களும் பாஸ மகா கவியின் "ப்ரதிமா நாடகம்" என்ற ஸம்ஸ்க்ருத நாடகத்தை மிகவும் சிறப்பாக நடித்தனர்.

அம்மாவுக்கு நீ கல்யாணம் செய்து கொண்டு குடித்தனம் பண்ணவும் வேண்டும் என்று ஆசை இருப்பது சகஜம்தானே!" என்றாள்.

காந்தா சென்னைக்கு வந்த ஒரு வாரத்துக்கெல்லாம் அவளுக்குப் பம்பாயிலிருந்து நிறையக் கடிதங்கள் வரத் தொடங்கி விட்டன. அவள் இல்லாமல் பம்பாய்ப் பெரிய மனிதர்களின் வீடுகள் சிரமப்படத் தொடங்கி விட்டதே காரணம். காந்தாவுக்கும் பம்பாய் சூழ்நிலையில் இருந்து விட்டுச் சென்னையில் இருப்பது முள்மேல் இருப்பது போலிருந்தது.

திடீரென்று ஒரு நாள் ரகு ஆபீஸிலிருந்து திரும்பி வந்ததும் "அப்பா! என்னை பம்பாய் தலைமை ஆபீஸுக்கு உதவி மானேஜராக மாற்றி விட்டார்கள். உடனே நான் வேலையை ஒப்புக் கொள்ள வேண்டுமாம். நாளைக் காலையிலேயே புறப்பட வேண்டுமென்கிறார் ஆபீஸ் மானேஜர்" என்றான்.

"ஏண்டா, கல்யாணத்துக்கு இன்னும் பத்து நாட்கள் தானே இருக்கிறது! லீவு போடு" என்றார் அருணாசலம்.

"என்னடா அருண்! வேலையை விடக் கல்யாணம் முக்கியமா? அவன் உத்தியோக உயர்வை ஏற்றுக் கொள்ள உடனே போக வேண்டுமென்கிறான். நீ அவனை லீவு போடு என்கிறாயே?" என்றாள் காந்தா அத்தை புன்சிரிப்புடன்.

"சரி! நான் சம்பந்தி வீட்டில் போய்ச் சொல்லி முகூர்த்தத்தைத் தை மாதத்தில் வைத்துக் கொள்ளச் சொல்லுகிறேன். அது சரி, காந்தா! பம்பாய்க்குப் போனால் இவன் எங்கு தங்குவான்? ஊருக்குப் புதுசாச்சே" என்றார் அருணாசலம்.

"அதற்கென்ன, தைமாதம் தானே கல்யாணம்? எனக்கு இங்கு என்ன வேலை? நான் அவன் கூடப் போகிறேன். என் வீட்டில் இருக்கட்டுமே அவன்!" என்றாள் காந்தா.

அவள் சொன்ன யோசனை சரியென்று அருணாசலமும் அவர் மனைவியும் சம்மதித்தார்கள். அருணாசலம் சம்பந்தி வீட்டுக்குப் போய் ரகுவின் உத்தியோக உயர்வைப் பற்றித் தெரிவித்து அத்தையின் யோசனையையும் தெரிவித்தார். சம்பந்தி வீட்டுப் பேர்களுக்குச் சந்தோஷம் பிடிபடவில்லை. தங்கள் வீட்டுப் பெண்ணைக் கல்யாணம் செய்வதாக நிச்சயம் செய்த வேளை மாப்பிள்ளைக்கு உத்தியோகம் உயர்ந்திருக்கிறது என்று கூறிச் சந்தோஷப் பட்டார்கள். முகூர்த்தத்தை ஒத்திப் போடுவதற்கும் அவர்கள் சம்மதித்தார்கள்.

ரகுவுக்குக் கொஞ்சம் திருப்தி யேற்பட்டது. எப்படியாவது இந்தக் கல்யாணம் ஒத்திப் போடப்பட்டதில் அவனுக்குப் பரம திருப்தி. அந்த வாரமே அத்தையும் ரகுவும் பம்பாய்க்குப் புறப்பட்டுப் போனார்கள்.

ரகு பம்பாயில் அத்தை வீட்டில் இருந்து கொண்டு நிம்மதியாக ஆபீசுக்குப் போய் வந்தான். இந்தக் கல்யாணம் ஒத்திப் போடப் பட்டது அத்தையின் அரிய முயற்சியினால் தான் என்பதைத் தெரிந்து கொள்ள அவனுக்கு அதிக நாள் ஆகவில்லை. அது பற்றிய முயற்சியைத் தெரிந்துகொள்ள அவனுக்கு ஆவலாயிருந்தது. ஒருநாள் அத்தையிடமே அதைப் பற்றிக் கேட்டான்.

"அத்தை! உன் வேலை ரொம்ப அபாரம்! என்னிடம் உண்மையைச் சொல்லு. உன்னைக் கோவிலில் வைத்துக் கும்பிட வேண்டும். அந்த முகூர்த்தம் நின்று போக நீ என்ன வேலை செய்தாய், சொல்!" என்றான் ரகு.

"கலியாணம் முழுக்க எங்கே நின்றது? காரியம் இன்னும் பாக்கி இருக்கிறதே!" என்றான் காந்தா அத்தை.

"அது சரி, இதுவரையில் எப்படிக் காரியத்தை முடித்தாய்? அதையாவது சொல்லு!" என்றான் ரகு.

"உனக்குக் 'கருடா அண்டு கம்பெனி'யில் வேலை என்று நீ சொன்னதும் எனக்கு உயிர் வந்தது. அந்தக் கம்பெனியின் சொந்தக்காரர் கணபதியின் மனைவி அகல்யா எனக்கு ரொம்ப வேண்டியவள். அவளுக்கு எழுதி உன்னைப் பம்பாய்க்கு மாற்ற உதவி கோரினேன். உடனே வெற்றி கிட்டியது. இன்னும் ஒரு பாதி இருக்கிறது. அதையும் முடிக்கணும்" என்று சொல்லிச் சிரித்தாள் காந்தா அத்தை.

ரகு பம்பாய் சென்ற சில தினங்களுக்கெல்லாம் அவனுக்கு மாமனாராக வர இருந்த ஜயராமன் அருணாசலத்தினிடம் ஓடோடியும் வந்தார். "சுவாமி, இதோ பாரும்" என்று ஒரு கடிதத்தைக் காண்பித்தார். அதைப் பார்த்ததும் சர்க்கார் இலாகாவி லிருந்து வந்த கடிதமாக இருந்தது. அதில் ஸ்ரீமான் ஜெயராமன், கல்கத்தா சுங்க இலாகாவுக்கு உடனே மாற்றப் பட்டதாகக் கண்டிருந்தது.

அவ்வளவு தான், கல்யாணக் கூட்டம் திக்குக்கு ஒன்றாகப் பிரிக்கப்பட்டு விட்டது. பிள்ளை பம்பாயில், பெண் கல்கத்தாவில், பின்னே வீட்டார் சென்னையில். அத்தை அழகாகப் பிரித்தாலும் கொள்கையைத் தன் சாமர்த்தியத்தால் நடத்தி விட்டாள். அருணாசலம் தன் மகன் ரகுவுக்கு, "உனக்குக் கல்யாணம் செய்து விட்டு மறு காரியம் பார்ப்பது என்றிருந்தேன். தெய்வத்துக்கு ஒப்பவில்லை. உனக்கு என்று கல்யாணமாகுமோ?" என்று மனத் தாங்கலுடன் கடிதம் எழுதி இருந்தார். ஆனால் அத்தையை நம்பி வந்தவன் கைவிடப்படுவானா? "கருடா அண்ட் கம்பெனி" சொந்தக்காரர் சும்மாவா ரகுவைக் கம்பெனியின் உதவி மானேஜராக்கினார்? அவருடைய அருமைப் பெண் சாந்தாவுக்கும் ரகுவுக்கும் மனம் பிடித்துச் சீக்கிரமாகக் கல்யாணம் நிச்சயமாயிற்று. அருணாசலத்தின் மனோரதம் நிறைவேறிற்று. அத்தையின் ரகசிய வேலையும் சுபமாகவே முடிந்தது!

•

# 'கஸ்டம்ஸ்' கஷ்டங்கள்

விடுதலை பெற்ற பிரஞ்சிந்திய மக்கள் அப்பகுதிகள் தாயகத்துடன் இணைந்தவுடன் தங்களுக்குப் பொதுவாக எதை விரும்புகிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டாமா? சோழவள நாட்டிலுள்ள காரைக்கால் மாவட்ட ஜனங்கள் இணைப்பை வெகு காலமாக எதிர்பார்த்து வந்தார்கள். இணைப்பினால் இவர்களும், மற்றும் புதுவை வாசிகளும் மகிழ்ச்சி அடைந்தது இயல்பு. ஆனால் பெரும்பான்மையான மக்கள் இன்னும் துக்கத்திலேயே இருந்து வருகிறார்கள். அவர்கள் மழை விட்டும் தூவானம் விடவில்லையே என்று ஏங்குகிறார்கள். இணைப்புக்கு முன்பும், இந்தியா சுதந்திரம் அடைந்த பிறகும் அவர்களுக்கு அன்றாடம் ஜீவிக்க வேண்டிய பொருள்கள் கிடைப்பது துர்லபமாகி விட்டது. பல தொல்லைகளைக் கொடுத்து வந்த "கஸ்டம்ஸ்" (சுங்கம்) இன்னும் எடுபடவில்லை. இவைகள் நீடித்திருக்கும் என்று சுங்க இலாகா கலெக்டர் விளக்கியிருக்கிறார். பலருக்குச் 'சுங்கச் சாவடி' அனுபவம் இருக்காது என நினைக்கிறேன்.

வெளிநாடுகள் போய் வருபவர்கள்கூடத் தன் சொந்த உபயோகத்துக்காகப் பல சாமான்களைத் தன்னுடன் கொண்டு வரலாம். சுங்க வரி கிடையாது. ஆனால் இப்பகுதியிலோ ஒன்றும் எடுத்தும் போகக் கூடாது கொண்டு வரவும் கூடாது என்று இந்திய சர்க்கார் உத்தரவு போட்டிருக்கிறார்கள். "கள்ளக் கடத்தலை"த் தடுக்க இந்த உத்தரவுகள் என்று சொல்லுவது நியாயமாகத்தான் தெரியும். ஆனால் ஒரு நபர், காரைக்காலிலிருந்தோ, புதுவையிலிருந்தோ, ஒரு சீட்டுக் கட்டு, ஒரு அங்க வஸ்திரம், தன் சொந்த உபயோகத்துக்குக் கொண்டு வந்தால், சுங்கச் சாவடிகளில் அவர் படும் அவஸ்தையை நேரில் பார்த்தவர்களுக்குத்தான் தெரியும். இவைகளை அனுமதித்தால் இந்திய கஜானா காலியாகி விடும் என்கிற மனப்பான்மையுடன் சுங்க அதிகாரிகள், ஒன்றுமறியாத பாமர மக்களை எல்லாம் கள்ளக் கடத்தல்காரர்கள் என்ற நோக்கத்துடனேயே சோதித்து அனுப்பி வந்தார்கள். இதனால் ஒரு இந்தியப் பிரதேசத்திலிருந்து, பிரஞ்சிந்தியப் பிரதேசத்துக்கு அவசியமான காரியங்களுக்குக் கூட ஜனங்கள் போக முடியாத நிலையில் இருந்தார்கள். காப்பிக் கொட்டை கிடைக்காத காரணத்தால், சென்னையில் வேலையில் இருக்கும் ஒரு குமாஸ்தா, காரைக்கால் பக்கத்துக் கிராம மொன்றில் இருக்கும் தன் வயதான தாயாருக்கு எப்பொழுதாவது விடுமுறையில் செல்லும் பொழுது இரண்டு ராத்தல் காப்பிக் கொட்டை வாங்கிச் சென்றால் சுங்க அதிகாரி பல "ஜபர்தஸ்து"கள் செய்வார். எடுத்துப் போக வேணுமானால், விலையை விட அதிகமான சுங்க வரி கட்ட வேண்டும். இந்த உதவியைக் கூடத் தன் தாயாருக்குச் செய்ய முடியவில்லையே என்று இவர் மனம் வெதும்புவார்.

சில வேண்டிய பொருள்கள் மலிவாக இருந்தால் அதை வாங்குவது சகஜம். இதில் என்ன தப்பு இருக்கிறது! கள்ளக் கடத்தலைத் தவிர்க்கச் சட்டங்கள் இயற்றியும், வியாபாரிகளிடம் இருக்கும் சாமான்கள் மீது வரி விதிப்பதும்தான் சரியான வழி. அன்றாடம் தேவைக்கே கஷ்டப்படும் ஜனங்கள் ஆடம்பரச் சாமான்களை வாங்கவே மாட்டார்கள். அதனால் நில சுங்கச் சாவடிகளை எடுத்து ஜனங்கள் தாராளமாகப் பயமில்லாமல் சென்று வர அனுமதிக்கப்பட வேண்டும். எல்லாரும் சொல்லுவது போல் "கஸ்டம்ஸ் கஷ்டங்கள்" ஒழிய வேண்டும். வியாபாரிகளும் தங்களிடம் இருக்கும் நவம்பர் 1-ந் தேதிக்கு முன் தீர்வை இல்லாமல் ஏற்றுமதி செய்த சாமான்களைச் சர்க்காருக்குத் தெரிவித்து, தீர்வையும் செலுத்த முன் வர வேண்டும்.

புது டில்லி
6—11—54

என். ராமமூர்த்தி




புதுமை பெறுங்கள்! முதலில் ஸ்நானம் செய்ததும் சார்மிஸ் டால்கம் பவுடரை உடல் முழுவதும் தூவுங்கள். எத்தகைய புதுமை உணர்ச்சி அது அளிக்கும் தெரியுமா?

மிருதுத்தன்மை பெறுங்கள்! உடலில் சுரணையுள்ள இடங்களிலும் பவுடரை நன்றாக தடவிவிடுங்கள். அது பட்டைப்போல படர்ந்து எரிச்சல் வராமல் பாதுகாக்கிறது.

நீடித்த இனிமையுடன் இருங்கள்! சார்மிஸ் டால்கம் பவுடரை தாராளமாக அடிக்கடி உபயோகியுங்கள். அது செலவில்லாமல் பெருவாழ்வு அளிக்கும் சாதனம். அழகிற்கும் காதல் கவர்ச்சிக்கும் இதுவே சிறந்த ரகசியம்.



# சார்மிஸ்

## டால்கம் பவுடர்

பரவசப்படுத்தும் மனோஹரமான நறுமண முள்ளது.

# வேதனையில் என் ஆப்த நண்பன்




CB/10




## 8. பரிசல் துறையில்

பிரபாகரனும் உமாவும் மாந்தோப்பை விட்டுப் பரிசல் துறைக்குச் சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் மாந்தோப்பை நோக்கிக் குதிரையின் மீது வெகு வேகமாக வந்து கொண்டிருந்தான் வீரப்ப தேவன்.

குதிரைக் குளம்படிச் சத்தம் கேட்டுக் கரியன் தோட்டத்து வாசலில் நின்று கவனித்தான். வீரப்ப தேவனைப் பார்த்ததும், "அரண்மனையிலிருந்து தேவர் வருகிறார்!" என்று குதூகலத்துடன் சொல்லிக் கொண்டே கரியன் 'அவனைக் கைகூப்பி வணங்கி, "வர வேணும், வரவேணும்!" என்று மரியாதையாக வரவேற்றான்.

தோப்பினுள்ளே நுழைந்த வீரப்ப தேவன் குதிரையின் மேலிருந்து கீழே இறங்கி, "என்ன கரியா, என்ன சமாசாரம்? நீ கட்டிய தோரணங்களும் மாவிலைகளும் வீணாய்ப் போய் விட்டன அல்லவா?" என்று கேட்டான்.

"வீணாய்ப் போவானேன், எசமான்? அவர்கள் இரண்டு பேர்களுக்கும் வரவேற்பு, விருந்து, எல்லா மரியாதைகளும் ஒழுங்காக நடந்திச்சுங்களே! அவர்கள் இரண்டு பேர்களுக்கும் ரொம்பவும் சந்தோஷம், எசமான்! அப்படியே அவர்கள் மிகவும் பூரித்துப் போய் விட்டாங்க, எசமான்!" என்றான் கரியன் மகிழ்ச்சியுடன்.

வீரப்ப தேவன், ஆச்சரியத்தினால் திகைத்துப் போனான். "என்ன, கரியா! உளறுகிறாய்? இங்கே வந்தது யார்? அதைச் சொல் முதலில்!" என்றான் வீரப்ப தேவன்.

"நீங்கள் முன்னதாகவே சொல்லி அனுப்பியிருந்த விருந்தினர்கள் தான் வந்திருந்தார்கள். அவர்களுக்கு ஒரு குறைவும் நேராமல் கவனமாக உபசரித்து அனுப்பினேன்!"

"கரியா, என்ன சொல்லுகிறாய்? யார் வந்தது?"

"ஒரு வாலிபனும் அவன் தங்கையும் வந்திருந்தார்கள். அவள் பெயர் உமா. அவன் அவளைக் கூப்பிட்டதிலிருந்து தெரிய வந்தது. எசமான், அடாடா! அவர்கள் இரண்டு பேரும் என்ன அழகு, போங்கள். ராஜா வீட்டுக் குழந்தைகள் மாதிரி இருக்காங்க!"

"போதும், போதும், கரியா! அவர்கள் இப்பொழுது இந்த மாந்தோப்பு மாளிகையில் தான் இருக்கிறார்களா?" என்று அவசரமாகக் கேட்டான் வீரப்பதேவன்.

"அவர்கள் இரண்டு பேரும் இங்கே இல்லை. இப்பொழுது தான் கொஞ்ச நேரத்துக்கு முன்பு போனார்கள்!"

"கரியா, ஏன் அவர்களை அனுப்பினாய்?"

"எசமான், அவர்களுக்கு நல்ல வரவேற்புக் கொடுத்து உபசாரம் செய்யணும் என்று சொல்லி அனுப்பினீர்கள். ஆனால் அவர்கள் இருவரையும் மாந்தோப்பு மாளிகையிலே வைத்துக் கொள்ளும்படி சொல்லவில்லையே!" என்றான் கரியன்.

"உம், சரி. அவர்கள் எங்கே போனார்கள், தெரியுமா?" என்று கேட்டான்.

"பரிசல் துறைக்குப் போனார்கள். அக்கரைக்குப் போய் அரண்மனைப் பக்கம் போவதாகச் சொன்னார்கள். அவர்கள் புறப்பட்டுப் போய் அரை மணி நேரம் தான் இருக்கும்."

"அவர்கள் நடந்துதானே போனார்கள்?"

"நடந்தா? என்ன அப்படிச் சொல்லி விட்டீர்கள்? நீங்கள் அனுப்பி வைத்த விருந்தினர்களை நான் அப்படி அவமதித்து அனுப்புவேனா? அப்படிச் செய்தால் உங்களிடம் நான் தப்ப முடியுமா? அது உங்களையே அவமதித்தது போல் அல்லவா ஆகும்? மகாராஜா இங்கே வந்தால் உபயோகப் படுத்தும் இரட்டைக் குதிரைகள் பூட்டிய வண்டியில்தான் அவர்களிருவரையும் அனுப்பி வைத்தேன்."

இதைக் கேட்ட வீரப்ப தேவன் பற்களை நறநறவென்று கடித்தான். "கரியா, ஏன் அவர்களை வண்டியில் ஏற்றி அனுப்பினாய்?" என்று கேட்டான்.

வீரப்ப தேவனின் கோபத்தைக் கண்ட கரியன் பயந்து கொண்டே "நீங்கள் சொல்லுவதைப் பார்த்தால் அவர்கள் இருவரும் உங்களுக்கு வேண்டாதவர்கள் போலல்லவா தோன்றுகிறது?" என்றான்.

உடனே வீரப்ப தேவன் கோபத்தைத் தணித்துக் கொண்டான். "இல்லை, இல்லை. அவர்கள் எனக்கு வேண்டியவர்கள்தான். இல்லா விட்டால் என்னத்துக்காக விசேஷ ஏற்பாடுகளுடனும் ராஜ மரியாதைகளுடனும் அவர்களுக்கு வரவேற்பு அளிக்கச் சொன்னேன்? அவர்களைப் பார்த்து ஒரு முக்கியமான சமாசாரம் அவசரமாகப் பேச வேண்டியிருக்கிறது. அவர்களை இனி மேல் எங்கே போய்ப் பார்க்கலாம்?" என்று கேட்டான். ஆனால் அவன் முகம் மாத்திரம் எவ்வளவு சமாளித்தும் கடுகடு வென்றுதான் இருந்தது. பிரபாகரன், உமா இருவர்மீதும் அரசனுக்கு உள்ள வெறுப்பைக் காட்டக் கூடாது என்பது அரசன் வீரப்ப தேவனுக்கு இட்ட கட்டளை. அவர்கள் இருவரும் துளியும் சந்தேகிக்காத வண்ணம் நடந்து கொள்ள வேண்டும் என்றும் அரசன் சொல்லி யிருந்தான்.

"ஐயா, அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். அவர்கள் இன்னும் பரிசல் துறையை விட்டுப் புறப்பட்டிருக்க மாட்டார்கள். அவர்கள் ஏறிச் சென்ற வண்டியும் இன்னும் திரும்பி வரவில்லை!" என்றான் கரியன்.

உடனே வீரப்ப தேவன் முகம் மலர்ந்தது. "அப்படியா! இதோ பரிசல் துறைக்குப் போகிறேன்!" என்று சொல்லி விட்டுத் தன் குதிரையின் மீது தாவி ஏறினான். குதிரை பரிசல் துறையை நோக்கிச் சிட்டாய்ப் பறந்தது.

"இருக்கட்டும், அந்த அயோக்கியர்களுக்கு ஒரு பாடம் கற்பிக்கின்றேன். இவர்களுக்கு விசேஷ மரியாதைகள்வேறு! அவர்கள் மாத்திரம் இதற்குள் அக்கரைக்குப் போய்ச் சேர்ந்திராவிட்டால் ... அவர்களைப் பெரிய ஏமாற்றத்துக்கு உள்ளாக்குகிறேன்" என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான் வீரப்ப தேவன்.

சற்று நேரத்துக் கெல்லாம் வீரப்ப தேவன் பரிசல் துறையை அடைந்தான். குதிரையை விட்டிறங்கி அங்கும் இங்கும் பார்த்தான்.

அவசரம் அவசரமாகப் பரிசலைப் பார்த்தான். பரிசலில் வீரப்பதேவன் ஏற்பாடு செய்து அனுப்பிய விலை உயர்ந்த ஆடைகளை அணிந்த வண்ணமாகப் பிரபாகரனும் உமாவும் உட்கார்ந்திருந்தார்கள். வேறு ஒருவரும் அப்பொழுது அந்தப் பரிசலில் இல்லை. வீரப்பதேவன் சற்று தூரத்தி லிருந்தபடியே அங்கு நின்று கொண்டிருந்த பரிசல் ஓட்டியைச் சைகை காண்பித்துத் தன்னருகில் கூப்பிட்டான். அந்தப் பரிசல் ஓட்டி சற்று வயது முதிர்ந்தவன். அதே இடத்திலே முப்பது வருஷத்துக்கு மேலே பரிசல் ஓட்டி அனுபவம் பெற்றவன். ஆற்றில் கரை புரண்டு வெள்ளம் போனாலும் எளிதில் நீந்தி அக்கரை செல்லக்கூடிய வலிமை பொருந்தியது அவன் தேகம். அந்தப் பக்கத்திலுள்ள யாவருக்கும் பரிசல் ஓட்டியைத் தெரியும். பரிசல் ஓட்டிக்கும் அங்கு தெரியாதவர்கள் கிடையாது. அப்படி இருக்கும் பொழுது அவனுக்கு வீரப்ப தேவனையும், அரண்மனையில் அவனுக்குள்ள செல்வாக்கையுமா தெரிந்திருக்காது? பரிசல் ஓட்டி வீரப்ப தேவனிடம் மிகவும் மரியாதையுடன் வந்தான்.

"ஏனப்பா, பரிசலை ஓட்டிச் செல்லுவதற்குக் கொஞ்சம் தாமதம் ஆகுமோ?" என்றான் வீரப்பதேவன்.

"ஆமாம், ஐயா! போதிய ஆள்கள் சேரவில்லை. கறிகாய்க் கூடைக்காரிகள் காய்கறிகளை விற்று விட்டு இப்பொழுது கூட்டமாக அக்கரைக்குப் போவதற்காக வருவார்கள். அவர்கள் வந்தவுடன் பரிசல் புறப்பட்டு விடும். இப்பொழுது



குழந்தை சதா சிணுங்கியவண்ணம் அடம் பண்ணிக் கொண்டேயிருந்தது. மேலும் அதன் வயதிற்கேற்ற புஷ்டியுமில்லை. இதனால் தாயார் மனவேதனை அடைந்ததில் ஆச்சரியமில்லையே!



நாளொரு வண்ணமும் பொழுதொரு மேனியுமாய்ச் சந்தோஷத்துடன் திகழ்ந்து விளங்கும் குழந்தைகளையுடைய, தாய்மார்களான தனது சிநேகிதிகளின் யோசனையை நாடினாள் அவள். அவர்கள் எல்லோருமே 'க்ளாக்ஸோ'வைச் சிபாரிசு செய்தனர்.




திடமான எலும்புகளும், பற்களும் உண்டாவதற்கெனவே விடமின் 'டி' யும், சுத்த ரத்த வளர்ச்சிக்காக இரும்புச்சத்தும் சேர்த்துத் தயாரிக்கப்பட்ட 'க்ளாக்ஸோ' ஒரு சிறந்த சுத்தமான போஷாக்களிக்கும்பால் ஆகாரம்.



'க்ளாக்ஸோ' குழந்தைக்கு எத்தகைய மாறுதலை உண்டாக்கிவிட்டது! இப்பொழுது குழந்தை நன்கு உறங்குகிறது. அன்றியும் கிரமமான தேக திடமும் மனச்சந்துஷ்டியும் பெற்றிருக்கிறது.

# Glaxo

'க்ளாக்ஸோ' ஒரு சிறந்த சுத்தமான போஷாக்களிக்கும் பால் ஆகாரம்

க்ளாக்ஸோ லேபாரடரீஸ் (இந்தியா) லிமிடெட், பம்பாய் – கல்கத்தா – மதராஸ்

# பிரசித்திபெற்ற பாண்ட்ஸ் க்ரீம்களின் உதவியால்
# உங்கள் வதனத்தை மென்மையாகவும்
# நிர்மலமாகவும் வைத்திருங்கள்



**ஒவ்வொருவருடைய சரும இயல்புக்கும் உகந்தவாறு இரண்டு மேன்மையான க்ரீம்கள்.**

எழிலரசியாகத்திகழ எந்தப் பெண் மணியும் ஆசைப்படுவது சகஜமே! அதை உத்தேசித்தே பாண்ட்ஸ் க்ரீம்களின் தயாரிப்பாளர்கள், உங்களுக்கு உதவியாக இதோ இரண்டு அழகு சாதனங்கள் வழங்குகின்றனர். பாண்ட்ஸ் க்ரீம்கள், வரட்சி அல்லது நசநசப்பு மிகுந்த பிரதேசங்களில் உங்கள் சருமத்தைப் பாதுகாப்பதற்கென்றே தயாரிக்கப்பட்டவை; உலர்ந்ததோ, இல்லை எண்ணைப்பசையுடையதோ ஆன எத்தகைய சருமத்திற்கும் பொருத்தமான வகையில் அமைந்தவை. உலகமுழுவதிலும் உள்ள எழில் நங்கையர்களைப் போல் நீங்களும் இந்த க்ரீம்களை பிரதிதினமும் உபயோகித்து, உங்கள் வதனத்தை புதுமலர்ப் புதுமையோங்க வைத்திருங்கள்!




உங்கள் முகப்பொலிவை பாழ்படுத்தும் வரட்சியான பிரதேசங்களில் — பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம் உங்களுக்கு தேவை. அதிலடங்கிய செழிப்பான எண்ணைகள் சருமத்திற்கு சமனமூட்டி, கடுமையான வெயில் மற்றும் வரட்சிக்காற்றினால் அது வாடி வதங்காமல் காப்பாற்றுகின்றன.




வெப்பம், நசநசப்பு மிகுந்த பிரதேசங்களில் — அல்லது சருமம் இயற்கையாகவே எண்ணைப்பசையுடையதானால் — பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகியுங்கள். இம்மெல்லிய க்ரீம், சருமத் துவாரங்களில் படியும் பிசுக்கையும் செத்த ஜீவாணுக்களையும் வெளியேற்றி உங்கள் மேனிக்கு சௌமியமான பாதுகாப்பு அளிக்கின்றது.

உங்களுக்கிஷ்டமான பாண்ட்ஸ் க்ரீமை நாள்தோறும் உபயோகியுங்கள். சொற்ப தினங்களில் உங்கள் வதனம் அன்றலர்ந்த மலர்போல் மென்மையாக, புதுமைப் பொலிவுடன் விளங்குவதைக் காண்பீர்கள் — உணரவும் செய்வீர்கள்!

## உலகில் எழிலரசிகள் உபயோகிக்கும் க்ரீம்கள்

# பாண்ட்ஸ்

கோல்ட் க்ரீம்

வானிஷிங் க்ரீம்




P. 9945

யாரோ அரண்மனையைச் சேர்ந்தவர்கள் போலத் தோன்றுகிறது — ஒரு பையனும் ஒரு பெண்ணும்—அவர்கள்தான் பரிசலில் உட்கார்ந்திருக்கிறார்கள் !''

“ அவர்களைத் துரத்திக் கொண்டுதான் வந்தேன் '' என்றான் வீரப்பதேவன்.

“ அப்படியா ? நான் அவர்களை இங்கே அழைத்துக் கொண்டு வரட்டுமா ?''

“ வேண்டாம், வேண்டாம் ! இந்தச் சமயத்தில் அவர்களை நான் சந்திக்க விரும்பவில்லை. நீ எனக்கு ஒரு உதவி செய்வாயா?'' என்று கேட்டான் வீரப்பதேவன்.

“ சொல்லுங்கள், ஐயா ! உங்களுக்கு எது வேண்டுமானாலும் செய்கிறேன் !'' என்றான் பரிசல் ஓட்டி.

“ இப்பொழுதே நீ பரிசலை ஓட்டவேண்டும். ஒருவருக்காகவும் காத்துக் கொண்டிருக்க வேண்டாம். பரிசலில் உட்கார்ந்திருப்பவர்கள் இரண்டு பேரையும் அக்கரைக்குக் கொண்டு போய்ச் சேர்த்துவிடு. ஆனால் அவர்களை அக்கரை சேர்ப்பதற்குள் அந்த வாலிபனிடம் உள்ள ஒரு பொருளை உன் சாமர்த்தியத்தினால் அபகரிக்க வேண்டும்.''

“ அது என்ன பொருள், ஐயா!'' என்று ஆவலாக விசாரித்தான் பரிசல் ஓட்டி.

“ அது ஒரு மாம்பழம். அதை அடைய

பரிசல் கட்டப்பட் டிருந்தது. அந்தக் கட்டை அவிழ்த்தான் பரிசல் ஓட்டி. மேலே கட்டப்பட்டிருந்த கயிற்றின் உதவியால் மெதுவாகப் பரிசலை அக்கரையை நோக்கி ஓட்ட ஆரம்பித்தான்.

“ ஏனப்பா, நாங்கள் இருவரும் மாத்திரம் தானா, வேறு ஒருவரும் ஏறவில்லையா ?'' என்று கேட்டான் பிரபாகரன்.

“ உங்களுக்காகத்தான் ஓட்டுகிறேன் !''

பரிசல்காரன் சொன்னதைக் கேட்ட உமா சந்தோஷமடைந்தாள். ''இந்த ஆறு ரொம்ப ஆழமோ? பயமாயிருக்கிறதே!'' என்று கேட்டாள் உமா.

“ ஆமாம். மிகவும் ஆழம்தான். நீந்தத் தெரியாதவர்கள் தவறி ஆற்றில் விழுந்து விட்டால் அவர்கள் இறக்க வேண்டியது தான் '' என்றான் பரிசலோட்டி.

இதைக் கேட்டவுடன் உமா பயந்து, “ ஐயோ !'' என்றாள்.

“ உமா, ஏன் அம்மா பயப்படுகிறாய் ? நமக்கு ஒன்றும் அப்படி நேரிடாது '' என்றான் பிரபாகரன்.

“ ஏன் நேராது ? இப்பொழுதுகூட அது நேரலாம் !'' என்றான் பரிசல்காரன். அப்பொழுது பரிசல் நடு ஆற்றுக்கு வந்து கொண்டிருந்தது.

“ நீங்கள் சொல்லுவது எனக்கு ஒன்றும்



"தம்பி, ஜாக்கிரதையாய்ப் பேசு. நீ திருடும்பொழுது நான் திருடக் கூடாதா?"

"நான் என்ன ஐயா, திருடினேன்?"

"உன் பையில் வைத்திருக்கும் மாம்பழத்தைத்தான்."

மாம்பழம் என்று அவன் சொன்னதும் உடனே பிரபாகரனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. இந்தப் பரிசல் காரனுக்குத் தான் வைத்திருக்கும் தங்க மாம்பழத்தைப் பற்றி எப்படித் தெரியும்? தங்க மாம்பழம் தன்னை விட்டுப் பிரியும் காலம் வந்து விட்டது போலிருக்கிறது என்று வேதனைப் பட்டுக் கொண்டு பரிசல் ஓட்டிக்குப் பதில் ஒன்றும் சொல்ல முடியாமல் திகைத்தான்.

"என்ன ஐயா, யோசிக்கிறீங்க. இப்படிக் கொடும் அந்த மந்திர மாம்பழத்தை!" என்று பிரபாகரன் அருகில் சென்றான் பரிசல்காரன்.

"எட்டி நில்லும். நான் வைத்திருக்கும் மாம்பழத்தை நீர் யார் ஐயா கேட்பதற்கு? கொடுக்க முடியாது!" என்று மறுத்தான் பிரபாகரன்.

"அது உன் மாம்பழம் அல்ல. நீ திருடிய மாம்பழம். அதைச் சொந்தக்காரரிடம் சேர்க்கவே நான் கேட்கிறேன். இப்பொழுது கொடுக்கப் போகிறாயா, இல்லையா?" என்று அதட்டினான் பரிசல் ஓட்டி.

"கொடுக்கா விட்டால் என்ன செய்வீர்?"

"என்ன செய்வேன் என்றா கேட்கிறாய்? முதலில் உன் தங்கையைத் தூக்கி இந்த வெள்ளத்தில் விட்டெறிவேன். சிறிது நேரத்துக்கெல்லாம் உன்னிடமுள்ள மாம்பழத்தைப் பிடுங்கிக் கொண்டு உன்னையும் இந்த வெள்ளத்தில் தூக்கி எறிவேன்" என்று கூறி உமாவைத் தூக்கச் சென்றான் பரிசல் ஓட்டி.

"ஐயோ, அண்ணா!" என்று உமா கூக்குரலிட்டுக் கொண்டே பிரபாகரனைக் கட்டிக் கொண்டாள்.

"அண்ணா, அண்ணா! வீண் பிடிவாதம் வேண்டாம். நம் உயிர் பெரிதா? மாம்பழம் பெரிதா? மாம்பழத்தைப் பரிசல்காரரிடம் கொடுத்துவிடு!" என்று கெஞ்சினாள் உமா.

பாவம், பிரபாகரன் என்ன செய்வான். ஒரு பக்கம் உமா, மற்றொரு பக்கம் தன் உயிரைப் போலக் கருதும் தங்க மாம்பழம்!

"என்ன, தம்பி! பேசாமல் இருக்கிறாய்? பரிசலை மேலே போக விடமாட்டேன். கொண்டு வா, அந்த மாம்பழத்தை" என்று தன் வலது கையை அகல விரித்தான் பரிசலோட்டி.

"இந்த மந்திர மாம்பழம் என்னிடத்தில் இருப்பதினால்தானே எனக்குப் பல துன்பங்களும் வந்து கொண்டே இருக்கின்றன? நான் வெகு சிரமப்பட்டுக் காப்பாற்றி வந்த மந்திர மாம்பழத்தை முன் பின் தெரியாத உன்னிடமா கொடுப்பது? முடியாது. அந்த மாம்பழம் உனக்கும் வேண்டாம். எனக்கும் வேண்டாம். 'களங்கமில்லாத வெள்ளமே, நீயே எடுத்துக் கொள்!' மந்திர மாம்பழத்துக்கு இன்று எதிர்பாராத விடுதலை" என்று சொல்லித் தன் பையிலிருந்து மாம்பழத்தை எடுத்துத் தன் முழு பலத்துடன் ஆற்றின் நடுவில் விட்டெறிந்தான் பிரபாகரன். பிரபாகரனைக் காட்டிலும் பரிசல் ஓட்டி நல்ல அனுபவம் வாய்ந்தவன் இல்லையா? "நீ விட்டெறிந்த மாம்பழம் அரை நொடியில் என் கையில் வரப் போகிறது!" என்று சொல்லிக் கொண்டே மின்னல் போலப் பாய்ந்து தண்ணீரில் குதித்தான்; எந்த இடத்தில் மாம்பழம் விட்டெறியப்பட்டதோ அங்கு நீந்திச் சென்றான்; தண்ணீரில் முழுகினான். சில நிமிஷங்களுக்குப் பிறகு தண்ணீருக்கு மேலே வந்தான். அவன் வரும் பொழுது அவன் கையில் மாம்பழம் காணப்பட்டது.

பாவம். பிரபாகரனுக்கு பேச முடியவில்லை. பரிசல் ஓட்டி கீழே தண்ணீரில் குதித்த உடன் மேலே கட்டியிருந்த கயிற்றின் உதவியால் வெகு வேகமாக அக்கரைக்குப் பரிசலை ஓட்டினான். பிரபாகரன் அக்கரை அடைந்த உடன் வெகு வேகமாக உமாவைப் பற்றிக் கொண்டு சென்றான். ஒரு கையால் மண் கூஜாவையும் மற்றொரு கையால் பிரபாகரனையும் பற்றிக் கொண்டு சென்றாள் உமா. உயிர் தப்பியதைப் பற்றி உமா சந்தோஷமடைந்திருந்தாலும் தங்க மாம்பழம் அண்ணாவின் கையை விட்டுப் போனதை நினைத்து அவள் அழ ஆரம்பித்தாள். அழுதுகொண்டே வந்து கொண்டிருந்த உமாவைப் பார்த்து "அசடே, எதற்காக அழுகிறாய்? நமக்கு இப்பொழுது என்ன வந்து விட்டது?" என்றான் பிரபாகரன்.

"தங்க மாம்பழத்தை வைத்துக்கொண்டு என்னவெல்லாமோ மனக் கோட்டைகள் கட்டினோமே! அந்தத் தங்க மாம்பழம் கடைசியில் பரிசல் ஓட்டியினிடம் போய்ச் சேரும் என்று நினைக்கவே இல்லையே!" என்று விம்மி விம்மி அழத் தொடங்கினாள் உமா.

(தொடரும்)

# ஹாஸ்யக் களஞ்சியம்



ஜிம்மி! ஜிம்மி! பிஸ்கட்டைத் தாவிப்பிடி.... என்ன! முழிக்கறே, பிஸ்கட் பிடிக்காதா?




"பல்லெல்லாம் முளைத்து விட்டதைப் பாட்டிக்குத் தொட்டுப் பார்க்கணுமாம்! வாயைத் திறந்து காட்டுடா, போக்கிரி!"




கொசுக்கடி மருந்து
"திடீரென்று இப்படிக் கொசு வாகப் பிடுங்குகிறதே? அவரே கொசுக்களையும் கையோடு கொண்டு வந்து விட்டு விட்டாரோ?"




"உங்க அம்மா நாற்காலி மேலே ஏறி நின்று படம் மாட்டினாளா? சரி! அதற்கு நான் என்னத்துக் குத் திரும்பிப் பார்க்கணும்?"



"நீங்கள் கேட்கும் 'பீஸ்' என்னால் கொடுக்க முடியவில்லை! என் வயிற்று வலியைத் திருப்பிக் கொடுத்து விடுங்கள்!"



1
2



"நீயா விருந்துக்குப் போகிறதென்று என்னை அழைத்து வந்தாயே? இந்த வெளிச்சத்தில் எனக்கு ஒரு வரி கூடப் படிக்க முடியவில்லையே!"



என்ன, ஐயா? தவுலுக்குப் பதிலாகப் பீப்பாயைத் தூக்கிக் கொண்டு வந்திருக்கிறீர்கள்?





"இந்த ஆஸ்பத்திரியிலேயே நம் குழந்தை ஒன்றுதான் அழகாயிருக்கிறது என்று நர்ஸ்களெல்லாம் சொல்லிப் பூரித்துப் போய் விட்டார்கள்!"

# சக்கரவர்த்தித் திருமகள்



## 36. குகனுடைய சந்தேகம்

நிஷாத மன்னன் குகன் பார்த்தான். கங்கை எதிர்க் கரையில் என்றும் காணாத கோலாகலம். ஒரு பெரும்படை வந்து நதிக்கரையில் தங்கி யிருப்பதாகத் தெரிந்தது. பக்கத்தில் நின்ற தன் குலத்தார்களுக்கும் காட்டி, "இது யார், என்ன காரணம் பற்றி இங்கே பெருஞ் சேனை வந்து கங்கையைத் தாண்டப் பார்க்கிறது? கொடியைப் பார்த்தால் அந்தக் கைகேயியின் மகன் பரதன் பெரும் படையைத் திரட்டிக் கொண்டு வந்திருக்கிறான் போல் தோன்றுகிறது. தேரின் மேல் காற்றில் திருவாத்தி மரக் கொடி ஆடுவது நன்றாகத்தெரிகிறது. அது அயோத்தி மன்னருடைய கொடி. இப்போது ராமனுடைய பகைவன் பரதனல்லவா அயோத்தி அரசன்? கைகேயி மகன் அக்கிரம வழியில் ராஜ்யத்தை அடைந்து விட்டு, இப்போது ராமனைக் கொல்லவும் வந்திருக்கிறான் போல் தோன்றுகிறது. நம்முடைய வீரர்களையும் இன்னும் கங்கைக் கரையில் நமக்குச் சேர்ந்தவர்களையும் உடனே திரட்டிக் கங்கைக் கரையை ஜாக்கிரதையாகக் காத்து நிற்க ஏற்பாடு செய்யுங்கள். ஓடங்களைக் கூட்டி அதில் ஆயுதங்களோடு வீரர்களை ஏற்றி யுத்தத்துக்கு ஆயத்தமாக இருக்க வேண்டும். பார்க்கலாம், இவர்கள் ராமனிடம் நல்ல எண்ணம் கொண்டவர்களாக இருந்தால் நதியைக் கடக்க உதவி செய்வோம். அல்லது கெட்ட எண்ணத்தோடு வந்திருப்பவர்களாகத் தெரிந்தால் இவர்களை இங்கேயே தடுத்துவிட வேண்டும். கங்கையைக் கடக்க விடக்கூடாது" என்றான்.



அவ்வாறே எல்லா ஆயத்தமும் செய்து விட்டு, மரியாதைக்கு வேண்டிய பரிசுகளை எடுத்துக் கொண்டு குகன் ஒரு படகிலேறி பரதனைச் சந்திக்கச் சென்றான்.

• • •

எதிர்க் கரையில் அதே சமயத்தில் சுமந்திரன், "அதோ! நம்முடைய நண்பன் குகன், ராமனிடம் அளவிலாத அன்பு கொண்ட நிஷாத ராஜன், தன்னுடைய ஜனங்களோடு நம்மை மரியாதை செய்து வரவேற்க வருகிறான். இவன் இந்தப் பிராந்தியத்துக்குத் தலைவன். இவனுக்கும் இவனுடைய குலத்தார்களுக்கும் இந்த வனத்தின் மூலைமுடுக்கெல்லாம் நன்றாகத் தெரியும். ராமசந்திரன் தற்போது இருக்குமிடம் நமக்குச் சொல்லுவார்கள். அவ்விடத்துக்கு நம்மை க்ஷேமமாகவும் சீக்கிரமாகவும் கொண்டு போய்ச் சேர்ப்பார்கள்" என்று பரதனுக்குச் சொல்லிக் கொண்டிருந்தான்.

இதற்குள் குகன் நதியைத் தாண்டி வந்து பரதனை நமஸ்கரித்தான்.

"சொல்லாமல் வந்து விட்டீர்கள். ஆயினும் என் பொருளெல்லாம் உமது என்று பாவித்து என்ன வேண்டுமோ

அதை உத்தரவிடுங்கள். உங்களையும் உங்கள் சேனையையும் உபசரிப்பது என் பாக்கியம்'' என்றான்.

"எண்ணிய எண்ணமே விருந்து" என்று உபசாரம் சொல்லிவிட்டு, பரதன் மேலும் சொன்னான்: "நான் இராமன் இருக்கும் இடம் போக வேண்டும். பரத்வாஜ ஆசிரமம் எங்கே இருக்கிறது? அதற்கு வழி எப்படி?''

இவ்வாறு கேட்டதற்குக் குகன் அஞ்சலி செய்து, "சுவாமி, நானும் என் ஆட்களும் தங்களுடன் கூடவே வந்து தங்களை ராமசந்திரனிருக்குமிடத்துக்கு அழைத்துப் போவதில் தடையொன்றுமில்லை. எந்த அபாயமும் கஷ்டமுமில்லாமல் கொண்டு போய்ச் சேர்த்து விடுவோம். ஆனால் மன்னிக்க வேண்டும், ஒரு சந்தேகம். என் மனத்தில் எழும் ஐயத்தைத் தீர்க்க வேண்டும், அரசகுமாரரே! இவ்வளவு பெரிய சேனையுடன் வந்திருக்கிறீர்கள். இது ஏன் என்று எனக்குக் கொஞ்சம் சந்தேகமாக இருக்கிறது?'' என்றான்.

இந்த மொழிகளைக் கேட்டதுமே பரதன் "ஆஹா! இதைவிட என்ன அவமானம் எனக்கு வேண்டும்? ஜனங்கள் என்னைக் கண்டு ராமன் விஷயமாகப் பயப்படும் காலம் வந்து விட்டதே! குகனே, நீ சந்தேகப்பட வேண்டாம். தகப்பனை இழந்த எனக்கு ராமனே தந்தையாவான். அவனை எப்படியாவது வேண்டிக் கொண்டு அயோத்திக்கு அழைத்துப் போக வந்திருக்கிறேன். தெய்வத்தின் மேல் ஆணையிட்டுச் சொல்லுகிறேன். என் உள்ளத்தில் வேறு எண்ணம் இல்லை'' என்றான்.

பரதனுடைய பெருந் துக்கமும் ராமனிடமுள்ள அவன் அன்பும் முகத்திலும் பேச்சிலும் குகன் கண்டு உள்ளம் பூரித்தான்.

"ஐயனே! உம்மைப் போன்ற மகான் வேறு யார் இருக்கிறார்கள் உலகத்தில்? தானாக வந்த பெரும் சம்பத்தை வேண்டாம் என்று துறக்க வல்லவர் தாங்களன்றி வேறு யாருளர்? தங்களுடைய புகழ் என்றென்றும் உலகத்தில் பரவி விளங்கும்'' என்றான் குகன்.

இரவாயிற்று. பரதனுடைய சேனைக்கு வேண்டியதெல்லாம் நிஷாத ராஜன் ஏற்பாடு செய்து முடித்தான். அனைவரும் படுத்தார்கள்.

குகனைச் சந்தித்த பிறகு பரதனுக்குத் துக்கம் முன்னிருந்ததை விட அதிகரித்தது. பரிசுத்த சுபாவத்தை ஜன்ம சம்பத்தாகப் பெற்றவன் பரதன். 'இப்படியாயிற்றே!' என்று அவன் ராமனை நினைந்து பெருமூச்சு விட்டு உடம்பெல்லாம் வேர்த்துத் தூக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்தான். அவனுக்கு நேர்ந்த பெரும் பழியும், தந்தை இறந்த துக்கமும், ராமனைப் பிரிந்த துயரமும் எல்லாம் சேர்ந்து நெருப்பைப்போல் அவன் உயிரை எரித்தன. குகனும் அவனுக்கு ஆறுதல் மொழிகள் சொல்லிக் கூடிய அளவு அவன் துயரத்தைத் தணித்து வந்தான். பரதனும் குகனும் கங்கைக் கரையில் சந்தித்து, துயரத்தைப் பங்கிட்டுக் கொண்டது ஆழ்வார்களும் பக்தர்களும் மிகவும் அனுபவிக்கும் கட்டம்.

ராமன் என்ன சாப்பிட்டான்? எங்கு உட்கார்ந்தான்? எங்கே படுத்தான்? என்ன சொன்னான்? என்ன செய்தான்? என்றெல்லாம் விசாரிக்க விசாரிக்க குகனும் அன்போடு எல்லாவற்றையும் சொல்லி இடங்களைக் காட்டியும் வந்தான்.

**ராஜாஜி**

முடிவில் லக்ஷ்மணன் எங்கே தூங்கினான் என்று கேட்டபோது அந்தக் கதையையும் சொன்னான்.

"ராமனும் ஜனகன் மகளும் தரையில் அங்கே படுத்திருப்பதைப் பார்த்து எனக்குத் தூக்கமும் வருமா என்று கண்ணீர் சொரிந்து அழுது இரவு முழுதும் வில்லும் கையுமாக என்னைப் போலவே படுக்காமல் நின்று காத்து வந்தான்'' என்று குகன் சொன்னபோது பரதன் துயரம் தாங்க முடியாமல் வருந்தினான்.

ராமனும் சீதையும் தரையில் கிடந்த இடத்தை பரதன் பார்த்து மூர்ச்சையடைந்தான். கோத் தாய்களுக்கு அதைக் காட்டி, "இதுவே என்பொருட்டு ராமன் தரையில் படுத்த இடம். புல்லும் அமுங்கிக் கிடக்கிறது, பாருங்கள்'' என்றான்.

என்ன உண்டார்கள் என்று கேட்டபோது குகன் சொன்னான்: "அப்பனே! அன்றிரவு விரதமிருந்து லக்ஷ்மணன் கொண்டு வந்த ஜலத்தை ராமன் அருந்தி மீதியைத் தம்பியும் அருந்தினான். நான் இட்ட ஆகாரத்தை அப்படியே திருப்பி விட்டு உபவாசமாகத் தூங்கினார்கள். மறுநாள் காலை தலை மயிரைச் சடையாகத் திரித்துக் கொண்டு காலால் நடந்து சென்றார்கள்'' என்றான்.

ராமனை அயோத்திக்கு எப்படியாவது அழைத்துப் போய் முடிசூட்டுவது என்று தீர்மானித்திருந்ததால் ஓரளவு மகிழ்ச்சியடைந்திருந்த பரதனுடைய உள்ளம் கங்கைக் கரை வனத்தில் குகனுடன் பேசிய பேச்சுக்களாலும் பார்த்த காட்சிகளாலும் மறுபடியும் துயரத்தில் ஆழ்ந்து விட்டது.

“என் பொருட்டு நீ புல்மேல் படுத்தாய். நான் இதைக் கண்டும் உயிருடன் இருக்கிறேன். நான் கிரீடமும் சூட்டிக் கொள்ள வேண்டுமாம்!” என்றான்.

“எப்படியாவது ராமனைத் திருப்பி அழைத்துப் போய்ச் சிம்மாசனத்தில் அமரச் செய்வேன். வேண்டுமாயின் அவன் கொண்ட பிரதிக்ஞையைப் பதினான்கு வருஷம் நான் அவனுக்குப் பதிலாகக் காட்டிலிருந்து முடிப்பேன். இதில் குற்றமில்லை. சத்தியம் குலையாது ஒப்புக் கொள்வான்” என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டு ஆறுதல் அடைந்தான்.

மறு நாள் காலை சீக்கிரமாகவே பரதன் சத்ருக்னனை எழுப்பினான். “என்ன இன்னும் தூங்குகிறாய்? விடிந்து விட்டது. பரிவாரமும் சேனையும் கங்கை தாண்ட வேண்டு மல்லவா? சீக்கிரம் குகனுக்குச் சொல்லி எல்லாம் செய்து முடிக்க வேண்டும்” என்றான்.

“அண்ணனே! நான் தூங்க வில்லை. எனக்கும் உன்னைப் போலவே இரவெல்லாம் ராமனைப் பற்றிய நினைவுதான்” என்றான் சத்ருக்னன்.

இப்படிப் பேசும் போதே குகன் வந்து சேர்ந்தான். “சுகமா? இரவு சரியாகக் கழிந்ததா? உங்களுடைய பரிவார மெல்லாம் சுகமா?” என்றெல்லாம் கேட்டு உடனே விடைபெற்றுக் கொண்டு போய் பெரியதொரு படகுப் படை தயார் செய்தான். வெகு விமரிசையாக எல்லாம் நடந்தது. பார மூட்டைகளும், வண்டிகளும், பரதனுடன் வந்த பெரிய சேனையும் படகுகளில் ஏற்றப்பட்டன. கங்கா நதியில் பரதனுடைய பரிவாரம் ஏறிய படகுகளைக் கடத்தினார்கள். அப்போது எழுந்த ஆரவாரம் ஒரு பெரிய திருவிழாப் போலிருந்தது. பரதனுக்கிருந்த துக்கம் கூட்டத்துக்கு இல்லை. பரதன் எப்போது புறப்பட்டானோ அப்போதே அவர்கள் ராமன் திரும்பி வந்து விடுவான் என்று நிச்சயமாகத் தீர்மானித்துக் கொண்டு விட்டார்கள். ராமன் திரும்பி வந்து பட்டாபிஷேகமும் நடக்கும், தீர்ந்து போன துயரங்களெல்லாம் கனவாக மறையும் என்று எண்ணிச் சந்தோஷமாகச் சென்றார்கள். தற்போது திருவிழாக் காலங்களில் பெரிய ரயிலடியில் நடைபெறும் கோலாகலமாக அன்று கங்கைக் கரையில் நடந்ததைப் போலவே வால்மீகி சித்திரித்திருக்கிறார். சேனை முழுதும் நதியைத் தாண்டி யாயிற்று என்று கண்ட பின் பரதனும் தனக்காக அமைத்திருந்த படகில் ஏறிச் சென்றான். கங்கையைக் கடந்து எல்லாரும் பரத்வாஜ முனிவருடைய ஆசிரமம் போய்ச் சேர்ந்தார்கள்.

பரதனுடைய கதை ஒன்று போதும் ராமாயணம் படித்து நாம் மேம்பட்ட நிலையடைவதற்கு. சக்கரவர்த்தித் திருமகனும் பரதனும் ஆண்டவனுடைய திருவவதாரம் என்றாலும் சரி, இல்லை இவர்கள் வால்மீகி முனிவருடைய கற்பனைச் சிருஷ்டியாகவே இருந்தாலும் சரி, முனிவருக்கு அதற்காகக் கோயில் கட்டித் தலைமுறை தலைமுறையாகப் பூஜிக்கத் தகும். இத்தகைய சிருஷ்டி முனிவருடைய கற்பனையில் உண்டாவதற்கு முனிவர் உள்ளத்தில் எத்தகைய ஞானமும் பக்தியும் இருந்திருக்க வேண்டும்! அது மட்டுமல்ல. அதை நாம் படித்துப் பெரு மகிழ்ச்சி யடைகிறோமே அதுவும் நம்முடைய உள்ளத்தில் மறைந்து கிடக்கும் நல்லறிவும் கடவுள் பக்தியுமே. நாமே அறியாமல் பக்தியும் ஞானமும் நாம் பிறக்கும் போதே அடைந்திருக்கிறோம். அது உள்ளே பெருஞ் செல்வமாகக் கிடக்கிறது. இல்லாவிடில் இந்த மக்கள் சமூகம் மிருகக் கூட்டமாகத் தானே இருந்து நம்மைவிடப் பெரிய மிருகங்களுக்கு இரையாகி அழிந்தும் போயிருப்போம்.

## 37. பரத்வாஜ ஆசிரமம்

பரதன் பரிவாரத்துடன் பரத்வாஜ ஆசிரமத்தை நோக்கிச் சென்றான். பிரயாகவனம் போய்ச் சேர்ந்ததும் சிறிது தூரத்தில் ரம்மியமான ஒரு சோலையும் அதன் மத்தியில் பர்ண சாலையும் இருக்கக் கண்டார்கள். அதுவே பரத்வாஜ ரிஷியின் ஆசிரமம் என்று அறிந்து பரதன் தன் பரிவாரக் கூட்டத்தை நிற்கச் சொல்லி விட்டு வசிஷ்டர் முதலிய சில முக்கியமான பெரியவர்களுடன்

# குடலை ஒழுங்காக வைத்திருங்கள் — உற்சாகத்துடன் விளங்குங்கள்



திடாரோக்யமே சுகவாழ்வுக்கு அடிப்படை. திடாரோக்யம் பெறும் வழி, குடலில் விஷக்கழிவுகள் தங்காமலிருப்பது தான். தளதளக்கிற ஈனோஸ் 'ப்ரூட் ஸால்ட்' சாப்பிடுங்கள். அதன் சௌமிய விரேசக குணத்தினால், ஹானிகரமான கழிவடைப் பொருள்கள் அவ்வப்பொழுது வெளியேற்றப் படுகின்றன. உங்கள் ரக்தமும் சுத்தியடைந்து, நீங்கள் பூரண ஆரோக்யமும் உற்சாகமும் பெற அது விசேஷ வகையில் உதவுகிறது.

# ஈனோஸ் 'ப்ரூட் ஸால்ட்'

உங்களை தென்பாகவும் சுருசுருப்பாகவும் வைத்திருக்கிறது




புதுமை கெடாமலிருக்க புட்டிகளில் விற்கப்படுகிறது.

'ஈனோ' மற்றும் 'ப்ருட்ஸால்ட்' என்ற பதங்கள் ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டிரேட் மார்க்குகள்

ENO 8164

அடக்கமாகச் சென்றான். தன்னுடைய பட்டாடை, வில், அம்பு, கத்தி முதலிய க்ஷத்ரிய வேஷங்களைக் கழற்றி வைத்து விட்டு வசிஷ்ட முனிவரை முன்னிட்டுக் கொண்டு காலால் நடந்து சென்றான். பிறகு மந்திரிகளையும் ஓர் இடத்தில் நிற்கச் சொல்லி விட்டான். வசிஷ்டரை மட்டும் கூட அழைத்துச் சென்றான். வசிஷ்டரைக் கண்டதும் பரத்வாஜர் ஆசனத்திலிருந்து எழுந்து சிஷ்யர்களை ராஜகுமாரனுடைய பாதத்துக்கு ஜலம் கொண்டு வரச் சொல்லி வசிஷ்ட முனிவரை எதிர் கொண்டார்.

பரத்வாஜ முனிவரை பரதன் வணங்கினான். அவரும் இவன் யார் என்பதை அறிந்து கொண்டார். ராஜகுமாரனுக்குச் செய்ய வேண்டிய உபசாரத்தை முறைப்படி செய்வித்து க்ஷேம சமாசாரம் விசாரித்தார். ஏற்கெனவே தெரிந்த துயரமான விஷயமான படியால் தசரதனைப் பற்றிக் கேட்க வில்லை.

* * *

**நா**ன் 'சக்கரவர்த்தித் திருமகன்' எழுதுவது வால்மீகி ராமாயணத்தின்படி. குகன் எப்படி பரதனுடைய பரிவாரத்தைக் கண்டு சந்தேகித்தானோ அப்படியே பரத்வாஜ ரிஷியும் பரதனுடைய எண்ணத்தைச்சந்தேகித்துக் கேட்டதாக வால்மீகி இந்த இடத்தில் பாடியிருக்கிறார். துளசி ராமாயணத்தில் இப்படி இல்லை. துளசி ராமாயணம் முற்றிலும் பக்தி மயம். ரிஷிகளுக்குத்தெரியாத ஒரு விஷயமில்லை. ஆன படியால் துளசி ராமாயணத்தில் பரதனைப் பற்றிப் பரத்வாஜருக்குச் சந்தேகம் எப்படி யிருக்க முடியும்? ஆனால் கம்பர் பாடியிருப்பது வால்மீகி முனிவரைப் பின்பற்றியே இருக்கிறது. இந்தக் கட்டத்தில் மட்டிலுமல்ல, இன்னும் பல இடங்களிலும் நன்றாகக் காணப்படுகிறது. கம்பர் வால்மீகி-ராமாயணத்தை மிகக் கவனமாகப் பின்பற்றியே தம்முடைய தனிச் செல்வமான கற்பனா சக்தியையும் உபயோகித்து அபார அழகுடன் தம் ராமாயணத்தைப் பாடி யிருக்கிறார். ஏதும் மாற்றாமலே அநேக இடங்களில் சாமர்த்தியமாகச் சிக்கல்களைச் சரிப்படுத்தி விட்டிருக்கிறார். மாற்றிப் பாடியிருப்பது வெகு சில இடங்களிலேயே.

துளசி ராமாயணம் அப்படியில்லை. ஏராளமான மாறுதல்கள் செய்திருக்கிறார். தம் சொந்த சொத்தாகவே பாவித்து துளசிதாஸர் ராமனைப் பாடியிருக்கிறார். அது அவருடைய அபார பக்தியினால் உண்டான உரிமை.

கம்பர், பரத்வாஜ பரத சம்பாஷணையை வால்மீகி சொல்லியபடியே வைத்துக் கொண்டு ரிஷி சொன்னதைக் கேட்ட பரதன் பெரும் சினங் கொண்டு பதில் சொன்னதாக மிக அழகாகப் பாடியிருக்கிறார்.

எப்படியாயினும் பரத்வாஜ ரிஷி அப்'பாவி பரதனைச் சந்தேகப் பட்டுக் கேட்டது நமக்கு 'ஒரு மாதிரியாக'த் தான் இருக்கிறது. குகன் கேட்டதில் தனி யழகு பொதிந்து கிடக்கிறது. பரத்வாஜர் சந்தேகித்தது நியாயமாகத் தோன்ற வில்லை. இதற்குச் சமாதானம், "அப்பனே, உன்னை நான் அறியாதவனா? உன்னுடைய குணத்தைத் திண்ணமாக்கி, விளக்கிக் காட்டி உன்னைப் புகழ் பெறச் செய்வதற்காகவே பரீக்ஷையாகக் கேட்டேன். பரிசுத்தமான எண்ணத்தை ஊர்ஜிதப் படுத்துவதற்காகவே கேட்டேன்" என்று வால்மீகி ராமாயணத்தில் ரிஷி சொன்னதாகக் காணப்படுகிறது.

நம்முடைய காலத்தில் ரிஷிகளைப் பற்றி நாம் கொண்டுள்ள சித்திரம் வேறு; வால்மீகி காலத்தில் வேறு. எப்படி ஸ்ரீராமன் சாக்ஷாத் பகவானுடைய திருவவதாரமாயினும் வால்மீகி ராமாயணத்தில் ஒரு வீர புருஷனாகச் சித்திரிக்கப்படுகிறானோ, அப்படியே பரத்வாஜ ரிஷியும் அவர் ராமனிடம் வைத்த வாத்ஸல்யத்தினால் பரதனைச் சந்தேகித்ததாகச் சொல்லப்படுகிறது. "ராகவஸ்நேக • பந்த"த்தால் ரிஷி இவ்வாறு கேட்டதாகவும் பிறகு பரதன் வருந்தியதைக் கண்டு சமாதானமாகச் சில மொழிகளைச் சொன்னதாகவும் வால்மீகி பாடி யிருக்கிறார். வால்மீகி ராமாயணத்தில் எல்லாப் பாத்திரங்களும் அபூர்வ குணங் கொண்ட மானிடர்கள். தெய்விகத் தன்மை இளம் சூரியனைப் போல் லேசாக வீசுகிறது. அவ்வளவே. மானிட இயல்பு அதிகம். பின்னால் வந்த துளசிதாஸர் காலத்தில் பக்தி ரசம் நடுப்பகல்போல் விளங்குகிறது. வேறு எதற்கும் இடமில்லாமல் பூரண ஒளி பெற்று விட்டது. கம்பருடைய சித்திரத்தில் பக்தி பிரதானமாகவே இருந்தாலும் வால்மீகி சித்திரத்தினுடைய மானிட வண்ணம் அறிந்து போகாமல் பக்தியைப் பின்னால் எழில் வீசும்படி வைத்து, மானிட சித்திரத்தை இன்னும் பேரழகு பெறும்படி செய்திருக்கிறார்.

பரதனைக் கண்டதும் பரத்வாஜர் க்ஷேம சமாசாரம் விசாரித்து விட்டு,

"பரதனே, நீ ஏன் ராஜ காரியத்தை விட்டு விட்டு இங்கே வந்தாய்? உன் பொறுப்பு அயோத்தியையில் அல்லவா இருக்கிறது? எனக்குக் கொஞ்சம் சந்தேகம் தோன்றுகிறது. இளைய மனைவியின் பேச்சைக் கேட்டுத் தசரதன் ராமனைப் பதினான்கு வருஷம் காட்டில் வசிக்கும்படி ஆணையிட்டதனால் அவன் தன் தம்பியையும் மனைவியையும் அழைத்துச் சென்று வனத்திலிருக்கிறான். உன் ராஜ்ய பரிபாலனத்துக்கு இன்னும் கொஞ்சம் இடையூறு இருக்கிறதென்று எண்ணினாயா? அதை நீக்குவதற்காக ஏதாவது இன்னும் யோசனையா?" என்று கேட்டார்.

இந்த மொழிகள் முனிவர் வாயினின்று வர பரதன் கண்களில் நீர் தாரை தாரையாகப் பெருகிற்று. பேச்சுக் குளறிப் போயிற்று.

"ஐயோ, நான் செத்தேன்!" என்றான். "தாங்களே என்னைச் சந்தேகித்து விட்டீர்களா? பகவானே, வேண்டாம். என்னைக் கொல்லாதீர்! என்னைப் பெற்றவள் நான் எங்கேயோ இருந்த சமயத்தில் எனக்குத் தெரியாமலும் என் சம்மதம் கொஞ்சமும் இல்லாமலும் செய்து விட்டதை என் பேரில் சுமத்தலாகாது. எப்படியாவது ராமனுக்குச் சமாதானம் சொல்லி அயோத்திக்கு அழைத்துப் போய் அவனை அரசனாக்கி அவனுக்கு நான் ஆயுள் முழுதும் அடிமையாக இருந்து சேவை செய்ய வேண்டுமென்றல்லவா வந்திருக்கிறேன்? ராமன் இருக்குமிடம் தங்களைக் கேட்டுத் தெரிந்து கொண்டு அவனைப் பிரார்த்தித்து அழைத்துப் போக வந்திருக்கிறேன். என்னை இப்படிச் சொல்லாதீர்!" என்று பரதன் அழுதான்.

அதன்மேல் பரத்வாஜர், "பரதனே, உன் உள்ளத்தின் பான்மை எனக்குத் தெரியும். ரகு வம்சத்தில் பிறந்த நீ வேறு எப்படி யிருக்க முடியும்? ராமனிடத்தில் உனக்குள்ள பக்தி எப்போதும் உறுதியாக இருந்து உன் கீர்த்தி வளர்ந்து ஓங்குவதற்காகவே நான் இவ்வாறு கேட்டேன், வருத்தப்பட வேண்டாம். சக்கரவர்த்தித் திருமகன் சித்திர கூட மலையில் இருந்து வருகிறான். இன்று இங்கே தங்கி நாளை மந்திரிகளுடன் அவ்விடம் போவாயாக. இந்த ஆசிரமத்தில் இன்று தங்குவதற்கு ஒப்புக் கொண்டு என்னை மகிழச் செய்வாய்!" என்றார்.

"ஸ்வாமி, தாங்கள் எனக்குச் செய்த அர்க்கியம், பாத்யம் இவை போதாதா? எல்லா அதிதி பூஜையும் பெற்றுப் பெரிய விருந்தும் உண்ட மாதிரி அடியேன் திருப்தி யடைந்து விட்டேன்" என்றான் பரதன்.

வனத்தில் வசிக்கும் ஏழை தவசிக்குத் தொந்தரவு கொடுக்கக் கூடாது என்று அரசகுமாரன் எண்ணுகிறான் என்பதை பரத்வாஜர் தெரிந்து கொண்டு புன் சிரிப்புச் சிரித்து, "அப்படியில்லை, உன் பக்திக்கும் பதவிக்கும் தக்க உபசாரம் செய்யக் கடமைப் பட்டிருக்கிறேன்" என்று சொல்லி, "உன் சேனை பரிவாரம் எல்லாரும் ஏன் தூரத்தில் நின்று விட்டார்கள்? ஏன் நீ அவர்களை அழைத்து வரவில்லை?" என்று கேட்டார்.

"பரிவாரங்களோடு ரிஷிகளுடைய ஆசிரமத்தின் அருகில் போகக் கூடாது என்கிற நியமப்படி அவ்வாறு செய்தேன். என்னுடன் வந்திருக்கும் கூட்டம் மிகப் பெரிது. அது இங்கே வந்தால் உங்களுக்குப் பெரிய இடையூறாக விருக்கும்" என்றான் பரதன்.

"அப்படி யில்லை. எல்லோரையும் வரச்சொல்லி உத்தரவிடுவாய்!" என்றார்.

அவ்வாறே பரதனும் தன் பரிவாரத்துக்குச் சொல்லி யனுப்பினான்.

பரத்வாஜர் தம் ஹோமசாலைக்குச் சென்று மூன்று தரம் மந்திரத்தோடு நீர் அருந்தி முகத்தைத்துடைத்துக்கொண்டு, "ஏ, விசுவகர்மாவே! ஏ, மயனே!" என்று தேவாசுர சிற்பிகளைக் கூவி யழைத்தார். "பரதனுக்கும் அவன் பரிவாரத்துக்கும் நான் விருந்து செய்ய விரும்புகிறேன். அதற்கு வேண்டியன வெல்லாம் நடைபெற வேண்டும்" என்றார் பரத்வாஜர்.

யமன், வருணன், குபேரன், அக்னி முதலிய தேவர்களையும் வரவழைத்து, "உங்கள் உதவியைக் கொண்டு பரதனுக்கு நான் அதிதி பூஜை செய்ய விரும்புகிறேன்" என்றார்.

அற்புதமான நிகழ்ச்சி நிகழ்ந்தது. முன் விசுவாமித்திரருக்கு வசிஷ்டர் செய்த விருந்து போல் பரத்வாஜரின் ஆசிரம வனத்தில் நடந்தது. ஆனால் அப்போது விசுவாமித்திரர் நடத்தியது போல் பரத்வாஜர் ஆசிரமத்தில் ஒரு விவகாரமும் கலகமும் நடைபெறவில்லை. எல்லாருக்கும் தகுந்த விடுதிகள், ஸ்னானாதி விஷயங்களுக்குச் சௌகரியங்கள்,

# 'பாலுட்ரின்'

## மலேரியாவை வீழ்த்துகிறது

**நிச்சயமாக – ஆபத்தில்லாமல் – குறைந்த சிலவில்**

**மலேரியாவின் சின்னங்கள்:**

முதலில் குளிரால் நடுக்கமுண்டாகும். ஜுரம் ஆரம்பமாகும். பிறகு உடம்பு முழுவதும் வியர்த்து வலி உண்டாகும். இந்த அறிகுறிகள் ஏற்பட்டால் உடனேயே டாக்டரைப் பாருங்கள்.

எப்பொழுதும் 'பாலுட்ரின்' சாப்பாட்டிற்குப் பிறகு ஒரு டம்ளர் தண்ணீருடன் உட்கொள்ளுங்கள்.

*வயதுவந்தவர்களுக்கும் 12 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கும்: ஒரு மாத்திரை.* (0.3 Gm.)
*6 லிருந்து 12 வயதுவரையுள்ள குழந்தைகளுக்கு: அரை மாத்திரை.*
*6 வயதுக்குக் கீழ்ப்பட்ட குழந்தைகளுக்கு: கால் மாத்திரை*

தினந்தோறும் ஜுரம் குணம் அடையும் வரை கொடுக்கவும்.




ICP 289

கருடனை பறவைகளுக்கு ராஜா வென்று கூறுவது வழக்கம். அது சீர வனப்புக்கும் வேக மாகப் பறப்பதற்கும் வட அமெ ரிக்காவில் பெயர்போனது. கரு டனுக்கு அளவற்ற விசை வேகமுண்டு.

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

## உங்களுக்கு விசையின் வேகத்தை ... துரிதமாக அளிக்கிறது!



கடுமையான டென்னிஸ் விளையாட்டைக் காட்டிலும் தினசரி அலுவல்களுக்கு அதிகச் சக்தி வேண்டும். ஆகையால் தான் ஒவ்வொரு ஸ்திரீக்கும் தினசரி ஆகாரத்தோடுகூட வாட்டர்பரீஸ் காம் பவுண்ட் அளிக்கும் அதிகப்படி போஷணை தேவையாயிருக்கிறது. அது உங்களு டைய தினசரி வாழ்க்கைக்குத் தேவை யான விசை வேகத்தை யளிக்கிறது.

தினசரி உட்கொண்டால், நாவிற்கினிய வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் ஓர் ருஜுவான ஆரோக்கிய டானிக்காகும். அது உங்களுடைய தேகம் முழுவதிலும் அதிகப்படி சக்தி உண்டாகச் செய்கிறது. களைப்பு, இருமல், ஜலதோஷம் முதலியவைகளை எதிர்க்கும் வன்மையை யளிக்கிறது. புதிய தாய்மார்க ளுக்கும், நோயிலிருந்து சொஸ்தமடைபவர்களுக்கும் வாட்டர்பரீஸ் காம் பவுண்ட் நல்ல ஆரோக்யத்தை யளிக்கிறது.

வாட்டர்பரீஸ் காம்பவுண்டை உட்கொண்டு புதிய, மகிழ்வுறும் ஸ்திரீயா யிருங்கள்...உங்கள் குடும்பத்தினர் அனைவருக்கும் ஒரு ருஜுவான ஆரோக்கிய டானிக்காகும்!




## ஆரோக்கியத்தைத் தரும் வாட்டர்பரீஸ் காம்பவுண்டை உங்களை சௌக்யமாகவைக்க உட்கொள்ளுங்கள்

சந்தனம், புஷ்பம், அன்ன பானாதிகள், பணியார வகைகள், அப்ஸரஸுகளின் நிருத்தியம், கந்தர்வ சங்கீதம் எல்லாம் நினைக்க முடியாத தெய்விக ரீதியில் ஏற்பாடு செய்யப் பட்டு எல்லாரும் மெய்ம்மறந்து அனுபவித்தார்கள். பரதனுடைய சேனையிலுள்ள படை வீரர்கள் மகிழ்ச்சி மயக்கத்தில் 'இனி நாம் தண்டகாரண்யம் போக வேண்டியதில்லை, அயோத்திக்கும் திரும்பப் போவதில்லை, இங்கேயே இருந்து விடுவோம்' என்று எண்ணினார்கள். பரத்வாஜருடைய விருந்து தினமும் நடக்கும் என்று எண்ணி விட்டார்கள்! கூத்தாட்டவையானது ஆட்டம் முடிந்ததும் மறைவது போல் காலையில் எல்லாம் மறைந்து போகும் என்பது அவர்களுக்குத் தெரியவில்லை.

எல்லை யில்லாத சம்பத்தை யடைந்த ஒரு மகாராஜா மற்றொரு மகா ராஜாவுக்கும் அவன் பரிவாரத்துக்கும் தன் ராஜதானியில் நடத்தும் ஒரு பெரிய விருந்தைப் போல் பரத்வாஜர் வசித்த ஆசிரம வனத்தில் விடுதிகள், வாகனங்கள், பணியாட்கள் உள்பட• எல்லாம் ஒரு கணத்தில் உண்டாக்கி அனைவரும் எல்லை மீறி அனுபவித்து மெய்ம் மறந்து தூங்கி விட்டார்கள்.

# வட்ட மேஜை

## ஒத்துழைக்க வேண்டும்!

தங்கள் இதழில் என். ஜி. ஓ. க்களின் நிலைமை பற்றி என். ஜி. ஓ. மனைவியாரின் கடிதம் பிரசுரமானது கண்டு மகிழ்ச்சி யடைந்தேன். அக் கடிதத்துக்குத் தாங்கள் எழுதிய குறிப்பைப் படித்த போது மகிழ்ச்சி இன்னும் அதிகமாயிற்று.

பொதுமக்களுடன் "நல்ல முறையில் தொடர்பு" ஏற்படுத்திக் கொண்டு என். ஜி. ஓ. க்கள் தங்கள் குரலை உயர்த்த வேண்டுமென எழுதி யிருந்தீர்கள். இக் குறிப்பை என். ஜி. ஓ. க்கள் மட்டுமின்றி, அவர்களின் சகதர்மிணிகளும் கவனிக்க வேண்டுமென்று விரும்புகிறேன்.

என். ஜி. ஓ. க்களின் கோரிக்கைகள் வெற்றி பெறப் பொதுமக்களின் அநுதாபமும் ஒத்துழைப்பும் தேவை. இதைப் பெறுவதற்குக் கிழக்கிந்திய கம்பெனி கால வாரன் ஹேஸ்டிங்ஸ்—கிளைவ்களின் லஞ்ச மனப்பான்மையை உதறி யெறிந்து விட்டு, இன்றைய கால நிலைக்குத் தக்கபடி நடந்து கொள்ள என். ஜி. ஓ. க்கள் முன்வர வேண்டும்.

இதில் என். ஜி. ஓ. க்களுக்கு அவர்களுடைய மனைவிமார்களும் ஒத்துழைக்கலாம். எவ்வாறெனில், "நீங்கள் கிம்பளம் வாங்கினால் அந்தப் பணத்தைத் தொடமாட்டேன்" என்று கிம்பளப் பழக்கமுடைய என். ஜி. ஓ. க்களுக்கு அவர்களுடைய குடும்பத் தலைவிகள் வற்புறுத்தித் தெரிவித்து விட்டால், மனைவி மக்களைத் திருப்திப் படுத்துவதற்காகப் பணம் சேகரிக்க ஆசைப்படுகிறவர்கள் திருந்த முடியுமல்லவா! இலட்சிய வாதிகளான பல இனம் என். ஜி. ஓ.க்கள் லஞ்சப் பழக்கத்தை வெறுத்துத் தங்களை மக்களின் புனிதமான சேவகர்களாகக் கருதி நடக்க முயல்வதற்கு முட்டுக் கட்டைகளாக அவர்களுடைய இல்லக் கிழத்திகளே இருப்பதையும் நன்கு அறிவோம். "வெறும் லட்சிய வாதம் பேசிக் கொண்டிருந்தால் குடும்பம் நடக்காது" எனக் கூறித் தங்கள் கணவன்மார்களை வற்புறுத்தித் தீய வழிப்படுத்த முயலாதிருந்தால் அது ஸ்ரீமதி என். ஜி. ஓ. க்கள் நாட்டுக்குச் செய்யக் கூடிய சேவையா யிருக்கும்.

இவ்வாறு என்.ஜி.ஓ.க்களின் மனைவிகள் லட்சியவாதிகளாக ஆவார்களாயின், என். ஜி. ஓ.க் களுக்கும் பொது மக்களுக்கும் இடையே நல்ல தொடர்பை ஏற்படுத்த உதவி செய்ய முடியும்.

கம்பம்
22—10—54 மு. ரங்கநாதன்

## முரண்பாடுகள்

கல்வி உலகிலே நம் அரசாங்கம் சில சீர்திருத்த ஏற்பாடுகள் சமீபத்தில் கொணர்ந்தது அனைவரும் அறிந்ததே. அவர்கள் கொணர்ந்துள்ள கட்டுப்பாடுகள் சில மூன்றிலும் மூன்னுக்குப் பின் முரண்பட்டதாகவும், பாரபட்சமாகவும் இருக்கிறது என்பதை மக்கள் கவனத்துக்குக் கொண்டுவர விரும்புகிறேன். நல்ல காலம் வருமா என்று ஏங்கிக் கிடக்கும் நல்ல ஆசிரிய சமூகத்தில் மேலுமா குழப்பச் சுழல்!

கடந்த 25-6-54-ந் தேதியில் இனி உபாத்தியாயர்களை வேலை தேடித் தரும் ஸ்தாபனத்தின் மூலம்தான் எடுக்க வேண்டுமென்ற செய்தி வெளியானது மக்களுக்கு நினைவிருக்கலாம். நடைமுறையில் தற்சமயம் ஆரம்பப் பள்ளி நிர்வாகஸ்தர்கள் தங்களது பள்ளிகளுக்கு ஆசிரியர் தேவைப்படுகிறது என்று வேலை தேடித் தரும் ஸ்தாபனத்துக்கு எழுதினாலோ, "ஆட்கள் இல்லை" என்ற பதில்தான். சில சமயம் பதிலும் வராது.

சமீபத்திலே கல்வி இலாக்கா ஒரு சுற்றறிக்கையின் மூலம் மானேஜ்மெண்டு பள்ளிகளில் தாற்காலிகமாக நியமிக்கப்படும் பயிற்சி பெறாத ஆசிரியர்களுக்குக் குறைந்த பட்ச படிப்பு எஸ். எஸ் எல். ஸி. தேறியவர்களா யிருக்க வேண்டும் என்று தெரிவித்துள்ளது. இவர்களுக்குச் சம்பளம் பஞ்சப்படி சேர்ந்து ரூ. 40—0—0க்குள் கிடைக்கும். நமது அரசாங்கத்தின் ஐந்தாண்டுத் திட்டப் பிரகாரம் கிராமங்களில் ஓராசிரியர் பள்ளிகள் திறக்கப்பட்டுள்ளன. மேலும் 1270 பள்ளிகள் திறக்கப் போவதாக நமது கல்வி, நிதி அமைச்சர் ஸ்ரீ சி. சுப்ரமண்யம் கூறியிருக்கிறார். அந்தமாதிரி பள்ளிகளில் முன் கூறிய எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்த ஆசிரியர்களுக்குச் சம்பளம், பஞ்சப்படி சேர்ந்து ரூ. 61-0-0. இந்தமாதிரி சுமார் இருபது ரூபாய் வித்தியாசம் சம்பளத்தில் உள்ள பொழுது யார்தான் தனிப்பட்ட நிர்வாகப் பள்ளிகளுக்குக் குறைந்த சம்பளத்துக்கு வேலை செய்ய முன் வருவார்கள். அப்பொழுது மானேஜ்மெண்டு பள்ளிகளின் கதி!

கடைசியாக ஒரு முக்கிய விஷயம். சம்பள அடிப்படையைப் பற்றியது. செக்கண்டரி கிரேடு இரண்டாண்டு பயிற்சி பெற்று அரசாங்கப் பரீட்சையிலும் தேறியவர்களுக்குச் சம்பளம்



ஸ்ரீ பழனி சுப்பிரமணியம் பிள்ளை அவர்களிடம் சுமார் எட்டு வருஷம் குருகுல வாசம் செய்து மிருதங்கக் கலை பயின்ற இளைஞர் ஸ்ரீ ஷண்முகானந்தம் சமீபத்தில் நடந்த அகில இந்திய ரேடியோ போட்டியில் மிருதங்கத்தில் முதற் பரிசு பெற்றார். ஜனாதிபதி ராஜேந்திர பிரஸாத் ஸ்ரீ ஷண்முகானந்தத்துக்கு விசேஷ பரிசுப் பதக்கம் அளிப்பதைப் படத்தில் காணலாம். — கப்பு

ரூ. 61–0–0. அவர்கள் பரிட்சையில் தவறிவிட்டாலோ ரூ. 40–0–0 தான். ஆனால் ஆசிரியர் பயிற்சிக்கேசெல்லாதவர்கள் ஐந்தாண்டு திட்டத்தின்படி ஆரம்பிக்கப்பட்ட பள்ளிகளில் வேலை செய்தால் ரூ. 61–0–0. ஆசிரியர் பயிற்சியில் தவறினவர்களையும், தான் பயிற்சிக்கே செல்லவில்லை என்று கூறச் சொல்லி ரூ. 61–0–0 சம்பளமே வாங்கச் சொல்லுமல்லவா இந்த ஏற்பாடு! சம்பள விகிதம் இரண்டு வருட காலம் பயிற்சி பெற்ற ஆசிரியர்களுக்கும், பயிற்சி பெறாத ஆசிரியர்களுக்கும் ஒரேமாதிரி இருப்பதன் கருத்து என்ன! இரண்டு வருடப் பயிற்சிக்கு மதிப்பு இல்லை என்றா! அல்லது யார் இவர்களை உபாத்தியாயர் பயிற்சிக்குப் போகச் சொன்னார்கள் என்று கேட்கிறார்களா!

உடுமலைப்பேட்டை
28—10—54

ஏ. விசுவநாதன்

●

## ஒருநாள் அனுபவம்

நான் ஒரு சாதாரண சிறுநில விவசாயி. எனது தோட்டத்தில் பருத்திச் செடிக்கு ஒரு வகைப் புழு விழுந்து செடியின் அடிப் பாகத்தில் நுழைந்து செடியையே காய வைத்து விடுகிறது. முன்பு ஒரு தடவை இதே நோய் விழுந்து வெள்ளாமையே அடியோடு நாசமாகி விட்டது. எனவே விவசாய இலாகா நிபுணர்களின் யோசனையைப் பெற விரும்பினேன். அதோடு என் கிணற்றுக்கு மின்சார பம்ப் செட் வைக்க, சர்க்காரின் நீண்ட கால தவணையில் கடன் கொடுக்கும் திட்டத்தின் கீழ் பம்ப் செட் வாங்குவதற்கான விண்ணப்ப பாரமும் தேவையாக இருந்தது.

இதற்காக உடுமலைப் பேட்டைக்குப் போய்த் தாலூக்கா விவசாய ஆபீசில் கேட்டதற்கு, கோயமுத்தூர் செல்லும்படி சொன்னார்கள். கோயமுத்தூர் போனேன். அங்கு என்னுடன் படித்த நண்பர் ஒருவர் உண்டு. அவரை அழைத்துக் கொண்டு விவசாய இலாகா டிமான்ஸ்ட்ரேட்டர் ஆபீசில் போய் விண்ணப்ப பாரம் கேட்டேன். அங்கிருந்தவர் என்னிடமிருந்துதான் இப்படி ஒரு திட்டம் இருப்பதையே தெரிந்து கொண்டு, ஜில்லா விவசாய அதிகாரியிடம் போகும்படி சொன்னார். அங்கு சென்று கேட்ட பொழுது அரை மணி நேரம் காக்க வைத்த பிறகு, சம்பந்தப்பட்ட குமாஸ்தா இல்லையென்றும், இரண்டு நாள் கழித்து அவர் வந்த பின்பு வந்தால் அவரிடம் மேற்படி பாரம் இருந்தால் தருவதாகவும் சொன்னார்கள். நான் இம்மாதிரி நாற்பது மைல் தூரத்திலிருந்து வந்திருப்பதையும், காத்திருந்தால் எனக்கு ஏற்படக்கூடிய நஷ்டத்தையும் எடுத்துச் சொன்னேன். மேற்படி குமாஸ்தா வராமல் எதுவும் செய்வதற்கில்லை யென்றும், வேண்டுமானால் ஆராய்ச்சி இஞ்சினியரிடம் கேட்கும்படியும் சொன்னார்கள். அங்கு போய், சம்பந்தப்பட்ட குமாஸ்தாயாரென்று தெரிவதற்கே கால் மணி நேரமாயிற்று. பிறகு எப்படியோ விண்ணப்ப பாரத்தை வாங்கிக் கொண்டு பருத்திச் செடி வியாதி பற்றி விசாரிப்பதற்காக விவசாய கல்லூரிக்கு வந்தபொழுது அவர்கள் பருத்தி நிபுணரைப் போய்ப் பார்க்கும்படி சொன்னார்கள். பருத்தி ஆபீசுக்குப் போய்ப் பார்த்தால் பருத்தி நிபுணர் இல்லை. உதவி நிபுணரைக் கேட்டதற்கு, தமது பருத்தி அபிவிருத்திப் பண்ணையில் அம்மாதிரி வியாதி எதுவும் இல்லையென்றும், இழைகளைப் பற்றி ஆராய்ச்சி செய்வதே தமது முக்கிய வேலை என்றும், வேண்டுமானால் பூச்சி ஆராய்ச்சியாளரைக் கேட்கும்படியும் சொன்னார்.

நாங்கள் திரும்பி வரும்போது பருத்தி அபிவிருத்திப் பண்ணையிலேயே அதே வியாதி சில செடிகளுக்கு இருப்பதைப் பார்த்து அவற்றைப் பிடுங்கிக்கொண்டு பூச்சி ஆராய்ச்சியாளரிடம் வந்தோம். அவர் இம்மாதிரி வியாதி வருவது சகஜம் தானென்றும் இதுவரைக்கும் இம்மாதிரி வியாதிக்கு மருந்து கண்டுபிடிக்க வில்லை யென்றும், நோய் வந்த செடிகளைப் பிடுங்கி எறிவதைத் தவிர வேறு வழியில்லை யென்றும் மருந்து அடிப்பதால் பயனில்லை யென்றும், எதற்கும் பயிர் பாதுகாப்பு அதிகாரியைப் பார்க்கும்படியும் சொன்னார். அவர் எங்கோ சென்றிருந்ததால் சற்று நேரம் வெளியே உட்கார்ந்திருந்தோம். அப்பொழுது அங்கு வந்த அதிகாரி ஒருவர், அவர் யாரென்று தெரியாது. விஷயத்தைக் கேட்டுவிட்டு, 'சுமாக்ஸின்' என்ற மருந்து அடிக்கும்படி யோசனை சொன்னார். பயிர் பாதுகாப்பு அதிகாரி வந்த பின் இந்த வியாதியை அறவே தடுக்க இதுவரைக்கும் மருந்து கண்டுபிடிக்க இயலவில்லை என்றும், ஆனால் வியாதி வந்த செடிகளைப் பிடுங்கி எரித்து விட்டு அந்தக் குழியில் பி. ஹெச். ஸி. 10 சதவீதமுள்ள மருந்தைப் போடும்படி சொன்னார். நான் ஊருக்குத் திரும்பினேன்.

பருத்திச் செடிக்கு இந்த நோய் கடினமானதால் மருந்து இதுவரைக்கும் கண்டுபிடிக்காததைக் குறை சொல்லுவதற்கில்லை. ஆனால் அதிகாரிகள் இம்மாதிரி ஒருவர் மாற்றி ஒருவரிடம் அனுப்பியதையும், ஆளுக்கு ஒரு யோசனை சொன்னதையும், உதவி பருத்தி நிபுணருக்குத்

# கால்கேட்
# குளோரோபில் டூத்பவுடர்




## குளோரோபிலின் பூரண நன்மைகளை நீங்கள் உபயோகிக் கையில் தருகிறது!

## வீரிய குளோரோபில்தான் பலன் தரும்!

வீரிய குளோரோபிலின் நன்மைகளை எல்லாம் புதிய கால் கேட் குளோரோபில் டூத் பவுடர் தருகிறது வீரிய குளோ ரோபில் தான் வாய் நாற்றம், கிரிமிகளை நீக்கி ஈறுகளைப் பலப்படுத்துகிறது. கால்கேட் முறையில் குழந்தைகளுக்கு குளோரோபில் கவனிப்பை அளியுங்கள்—அரிய சந்தர்ப்பம்.



### வாய் நாற்றத்தை அழிக்கிறது

ஒரு விசேஷ சூத்திரம் காரணமாக கால்கேட் குளோரோபில் டூத்பவுடர் துரிதமாக, திருத்த மாக வேலை செய்கிறது. உங்கள் வாய் அதிகநேரம் புதுமை, இனிமையுடன் இருக் கிறது. அதன் வாசனை ஜோரானது!

### கிருமிகளை ஒழிக்கிறது

சாப்பிட்டவுடன் கால்கேட் குளோரோபில் டூத் பவுடரை உபயோகிப்பதால் பற்களைச் சிதைக்கும் அமிலங்கள் ஒழிகின்றன.





### ஈறுகளை பலப்படுத்துகிறது

ஈறுகளை குளோரோபில் பலப்படுத்துகிறது. தினசரி கால்கேட் குளோரோபில் டூத் பவுடரை உபயோகிப்பதால் குளோரோபிலின் பூரண நன்மைகளைப்பெற்று ஈறுகளைப் பாதுகாக்கலாம்.




CTPG|1

தம் பண்ணையிலேயே இந்த வியாதி வந்திருந்ததை விஷயம் தெரியாமலிருந்ததையும் குறித்து வருந்தாமலிருக்க முடியாது. இந்த ஆபீஸ்கள் ஒன்றுக்கொன்று மைல் கணக்கில் தூரம். அதே மாதிரி ஒரு சாதாரண விண்ணப்ப மனுவுக்காக இத்தனை மைல் அலைய வேண்டியிருந்தது. பம்ப் செட் வாங்குவதற்கு இன்னும் எவ்வளவு அலைச்சல் ஏற்படுமோ!

அடிவன்னி
8—11—54 எஸ். வேங்கடசுப்பையன்

●

## குட்டித் தெய்வங்கள்

சர்க்கார் விவசாயிகளுக்குத் தேவையான உரம் அபிவிருத்தி கடன்கள் அளிப்பதற்கு வசதி அளித்திருந்தும், இடையில் உள்ள குட்டி தெய்வங்களான, 'கடன்' ரெவின்யூ இன்ஸ்பெக்டர், மணியக்காரர் முதலியவர்கள் அதை அடைய விடாமல், இடையூறு செய்கிறார்கள். உதாரணமாக, பட்டுக்கோட்டை தாலூக்காவைச் சேர்ந்த விஜயபுரம் கிராமத்தில் உள்ள விவசாயிகளில் அநேகர் அவர்களை அணுகிய பொழுது, இன்று வா, நாளை வா என்றும், பேராவூரணி முகாமுக்கு வா, பட்டுக்கோட்டை முகாமுக்கு வா என்றும் காலம் கடத்தி முடிவில் ஒருவித காரணமும் காட்டாமல் எங்கள் மனுக்களை நிராகரித்து விட்டார்கள். பண விரயமும் வீண் அலைச்சலும் தான் மிஞ்சுகிறது. இது பற்றி மேல் அதிகாரிகளுக்கு எழுதியும் நடவடிக்கை எடுக்கப்படவில்லை.

சுப்பிரமணியபுரம் அ. ராமானுஜம்
25—10—54 கிராம காங்கிரஸ் ஊழியன்

●

## பெரும் தடை!

அக்டோபர் மாதம் 17-ம் தேதி 'கல்கி' இதழில் பிரசுரமாகி யிருந்த எனது கடிதத்துக்குத் தாங்கள் எழுதியுள்ள குறிப்பைப் படித்தேன்.

"வாயுள்ள பிள்ளைதானே பிழைக்கும்" என்று தாங்கள் கூறியிருப்பது முற்றிலும் சரியானது. என். ஜி. ஓ.க்கள் கடந்த ஏழு வருடங்களாகத் தாங்கள் நடத்தி வரும் மாகாண மகாநாடுகளிலும் தாலூகா மகாநாடுகளிலும், ஏராளமான தீர்மானங்களைத் திரும்பத் திரும்ப நிறைவேற்றிச் சர்க்காருக்கு அனுப்பி வந்திருக்கிறார்கள். அந்தத் தீர்மானங்களைத் தாங்கள் அனுதாபத்துடன் கவனித்துக் கொண்டு வருவதாக நீண்ட நாட்களாக தொடர்ச்சியாக ஒரே பதிலைக் கூறிவருவதிலிருந்து அந்தத் தீர்மானங்கள் யாவும் சர்க்காரின் கழிவுக் காகிதக் கூடைக்குத்தான் போய்ச் சேர்ந்திருக்கின்றன என்று நினைக்க வேண்டியிருக்கிறது. ஆகவே, சர்க்கார் ஊழியர்கள் தற்சமயம் தாங்கள் கையாண்டு வரும் முறைகளைக் கைவிட்டு விட்டுத் தொழிற்சங்க ஊழியர்களைப் போல பேரம் செய்ய வேண்டும் என்பதுதான் சர்க்காரின் விருப்பமா!

என்.ஜி.ஓ.க்கள் பொதுமக்களுடன் நல்ல முறையில் பழகி அவர்களுடைய பூரண அனுதாபத்தைப் பெற முயல வேண்டும் என்று தாங்கள் கூறியிருப்பது என்னவோ மறுக்க முடியாதது தான்! ஆனால் என். ஜி. ஓ.க்களின் இன்றையத் 'தலை விதி'யை நிர்ணயிக்கும் ஒழுங்கு முறைச் சட்டம் அவர்கள் பொது மக்களுடன் நல்ல முறையில் பழகுவதற்குப் பெரும் தடையாக இருக்கிறது. பொது மக்களுக்கும், சர்க்கார் ஊழியர்களுக்கும் இடையே மதில் சுவர் எழுப்பினாற் போலத் தங்கள் சுயநலத்துக்காக, அன்னிய ஆட்சியினரால் சிருஷ்டிக்கப்பட்ட ஒழுங்கு முறைச் சட்டத்தை, நாம் சுதந்திரம் அடைந்த பின்பு இன்றையச் சூழ்நிலைக்கு ஏற்ப மாற்றியமைக்க வேண்டும் என்பதைக் கொள்கையளவில் ஒப்புக் கொண்டும், நடைமுறையில் பழைய சட்டத்தையே கடுமையாக்குவதன் உட்கருத்து என்னவோ!

திருமயம்
21—10—54 காந்திமதி சுப்பிரமணியம்

●

## யார் காரணம்?

எங்கள் ஊர் தேசிய சேவா சங்கத்தின் நிர்வாகத்தில் நடைபெற்று வரும் "தேசிய வித்யா சாலை" என்னும் உயர்தர எலிமெண்டரி பாடசாலையிலிருந்து பதினாறு மாணவர்கள் சென்ற ஏப்ரல் மாதம் நடந்த இ. எஸ். எல். சி. பரீட்சை எழுதினார்கள். ஜூன் மாத இறுதிவரை பரீட்சை முடிவுகள் குறித்துப் பாடசாலைக்கு யாதொரு தகவலும் கிடைக்கவில்லை. கல்வி அதிகாரிகளுக்கு அது குறித்து எழுதிய கடிதத்துக்கும் பதில் இல்லை.

எனவே இ. எஸ். எல். சி. பரீட்சையில் யாரும் தேறவில்லையெனக்கருதி, சில மாணவர்கள் மீண்டும் எட்டாவது வகுப்பில் சேர்ந்து கொண்டார்கள். மற்றும் சிலர் மனம் உடைந்து படிப்பையே நிறுத்தி விட்டார்கள்.

இந்த நிலையில், சென்ற 30-10-54ம் தேதி கல்வி அதிகாரியிடமிருந்து வந்த ஒரு கடிதம் பாடசாலை நிர்வாகிகளைத் திடுக்கிடவைத்துவிட்டது. இ. எஸ். எல். சி. பரீட்சை எழுதிய மாணவர்களில் நால்வர் பரீட்சையில் தேறி யிருப்பதாகவும் அத்துடன் அவர்களுடைய சர்டிபிகேட்டுகளை அனுப்பி யிருப்பதாகவும் அக் கடிதத்தில் கண்டிருந்தது. பரீட்சையில் தேறிய நான்கு மாணவர்களில் இருவர் படிப்பை நிறுத்தி விட்டார்கள். மற்ற இருவர் தற்போது எட்டாவது வகுப்பில் மீண்டும் படித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த சர்டிபிகேட்டுகளினால் அவர்களுக்கு ஒரு பயனுமில்லை. இப்போது இடைக் காலத்தில் திடீரென்று ஒன்பதாவது வகுப்பில் சேர முடியாது. மற்ற இருவரின் மேற்படிப்பைக் கெடுத்து விட்டது. இவ்விதம் அந் நான்கு மாணவர்களின் படிப்பு பாழானதற்கும் அப் பிஞ்சு நெஞ்சங்களின் மன வேதனைக்கும் யார் காரணம்!

சொக்கம்பாளையம்
1—11—54 பி. கரியண்ணன்

●

## எழுத்தாளரின் காணிக்கை

சமீபத்தில் 'கல்கி' இதழில் என்னுடைய கட்டுரை பிரசுரமாயிற்று. முதன் முதலில் வெளி வந்த என் கட்டுரை, ராஜாஜி அவர்கள் கட்டுரை எழுதி வரும் 'கல்கி'யில் பிரசுரமானது மிகவும் மகிழ்ச்சிக்கும் பெருமைக்கும் உரியதாகும். இதற்கு நான் எவ்வளவு பாக்கியம் செய்திருக்க வேண்டும். மேற்படி கட்டுரைக்காகச் சன்மானம் ரூ. 15/- கல்கி காரியாலயத்திலிருந்து வந்தது. எழுத்தாளர்களில் முதல்வராகத் திகழும் ராஜாஜி அவர்களின் விருப்பப்படி எழுத்துத் துறையில் கடைசியில் பிரவேசித்த நான் இத்தொகையைக் காந்தி மகான் நினைவு மண்டபத்துக்கு எனது காணிக்கையாக அனுப்பி வைத்தேன் என்பதைச் சந்தோஷத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

செங்கற்பட்டு
3—11—54 டி. எஸ். ரங்கநாதன்

# மருதாணி இலை

சிலவைக் கல் 'ஜரோகா' (வலைக் கண் சாளரம்)வின் மறைவிலிருந்து ஓரிஸ்ஸா நவாபின் பேகம், அதிரூபவதியான ஆஸ்மான்தாரா, காசிநாத் என்ற இளம் பாடகனின் இனிய சாரீரம் பொழியும் ஹாம்பீர் ராகத்தின் அபூர்வ பிரஸ்தாரங்களைக் கேட்டுச் சொக்கி நின்றாள். ஓரிஸ்ஸா நவாப் ஹிதயத்கான் சங்கீதப் பித்தன். உஸ்தாத் காசிநாதன் இல்லாமல் அவனுக்குப் பொழுதே போவதில்லை. ஒவ்வொரு நாளும் அரண்மனையில் இருவரும் ராக லக்ஷணங்களை ஆராய்ந்து, அவற்றின் மூர்ச்சனைகளைக் காட்டும், கிருதி விசேஷங்களைப் பாடுவார்கள். நவாப் 'ஸரோத்' வாத்தியத்தில் வல்லவன். காசிநாதனுக்குப் பின்னணியாக வாசிப்பான். ஆனால் மறைவில் நவாபின் பேகத்தின் உள்ளத்தைப் பாடகனுடைய இசை அணைக்கவொண்ணாத பெருங் கனலை எழுப்பியது அவனுக்கு எப்படித் தெரியும்! 'ஜிப்ரான்' (குங்குமப்பூ) வர்ண 'பேஷ்வாஜ்' அணிந்து, நீலப் பூந்துகில் 'ஒட்னு'வை விசிறி ஒரு நிழலுருவம் ஜரோகாவுக்குப் பின்னால் அசைவது காசிநாதனின் கண்ணில் படும்.

நவாபின் பேகத்தை அவன் நேரில் கண்டதே இல்லை. அவனுடைய இசையின் சுருதியுடன் இணைந்து அவளுடைய கை வளையல்கள் ஒலிக்கும். அந்தச் சங்கீதம் பாடகனுடைய செவியுள் அமுதைப் பாய்ச்சி, பூரிப்பை அளித்து அவனை இன்னும் நன்றாய்ப் பாடத் தூண்டும். ஆஸ்மான்தாராவின் இரு சேல் விழிகள் மட்டும், இளம் காசிநாதனுடைய அழகிலேயே திளைக்கும். காசிநாதன் சென்றதும், சுகந்த நீர்த்திவலையை இடைவிடாமல் வீசும் ஊற்றுக் குழாய்க்கு அருகில் மெல்லிய தவிசில் சாய்ந்த வண்ணம், கையில் வந்து அமரும் 'புல்புல்' பறவையுடன் தன் விரக வேதனையைச் சொல்லிக் கொள்வாள், ஆஸ்மான்தாரா. அந்தப் பறவை எத்தனையோ ஸ்வர அலைகளை எழுப்பிச் சீழ்க்கை அடித்து இவளுடைய தாபத்தை மேலும் ஊறி விடும். 'ஹூரி'யை (தேவ கன்னிகை)ப் பழிக்கும் இந்த ஆஸ்மான் தாரா (விண்மீன்) குஸல்கானாவில் வாடுவாள். காசிநாதனைச் சந்திக்க வாய்ப்பில்லை அவளுக்கு. எவ்வளவு நட்பு இருப்பினும் நவாப், ஜெனானாவுக்குள் ஒரு நாளாவது இளம் பாடகனை அழைத்து வந்ததில்லை. தன் அழகிய மனைவியும், இளம் காசிநாதனும் ஒருவரை யொருவர் காண நேரிட்டால் விபரீதம் விளையுமென்று அவன் அஞ்சினானோ என்னவோ! ஆஸ்மான்தாராவின் உள்ளம் துடித்ததுபோல், காசிநாதனும் தன் மனத்துள் காதலின் சொர்க்கத்தைச் சிருஷ்டித்துக் கொள்வான். அவன் பாடும்பொழுதெல்லாம் பூமென் உள்ளம் ஒன்று மெல்லத் தன் நறுமணத்தைப் பரப்புவதை மட்டும் உணர்ந்தான். ஆனால் அந்த மலரை நோக்கி உள்ளத்தை நீட்டலாமே தவிர, கையை நீட்டுவது முடியாத காரியம். ஆஸ்மான் தாரா, வானத்தில் தனியாகச் சுடர் விடும் தாரகை, அவள் நவாபின் பேகம் அல்லவா!

ஒவ்வொரு நாளும் இதே நாடகந்தான். அரண்மனையில் அவன் பாட வரும் செய்தியைக் கேட்டதும் சாளரத்தண்டை ஆஸ்மான்தாராவைப் பார்க்கலாம். அவளுடைய நிழலைக் கண்டு காசிநாதனின் மனம் சிதறும். பாட்டில் ஏக்கம் தொனிக்கும். அத்தர் பூசிய உருமாலை எடுத்து, பேகம் கண்ணீரைத் துடைத்துக் கொள்வாள். தர்பாரில் கூடியிருக்கும் பிரபுக்கள் காசிநாதனுடைய அபார வித்தையை மெச்சி 'வாஹ்வா வாஹ்வா' என்று கோஷித்துத் தலையை ஆட்டி ரசிப்பார்கள். மனிதக் குரலை அநுகரணம் செய்யும் நவாபின் 'ஸரோத்' வாசிப்பும் காசிநாதனுடைய குரலுடன் போட்டியிட முடியாமல் வெட்கி நிற்கும்.

சொல்ல முடியாத விரகவேதனை காசிநாதனின் உள்ளத்தை அலைத்தது. தர்பாரின் வாடையே அவனுக்கு வெறுப்பைத் தந்தது. கொஞ்ச நாள் தனிமையில் இருந்தால்தான் தன் இதய நோய் தீருமென்பதைக் கண்டான். நவாபின் பேகத்தினுடைய நட்பைப் பெற முயல்வது அவன் உயிருக்கே ஊறு தேடிக் கொள்வதாகும் என்பது அவனுக்குத் தெரிந்ததுதான், உள்ளத்தில் மூண்ட இக்கனலை அவித்துக் கொள்ள வழி தெரியவே இல்லை அவனுக்கு. வீட்டின் பின்புறமாக ஒரு பூமரத்தின் நிழலின் கீழ், மேடை மீதமர்ந்து அவன் ஸ்வர ஸாதகம் செய்யும் போது, காற்று வாடையில் அத்தர் மணம் மெல்ல வீசியது. பின்னாலேயே ஜெனானாவின் பணிப் பெண் ஒருத்தி திரையிட்டுத் தன் முகமலரை மறைத்து, ஒயிலான அங்கத்தை வளைத்து, பாடகனுக்கு 'ஸலாம்' செய்து நின்றாள்.

திடுக்கிட்டுக் காசிநாதன் நிமிர்ந்து பார்த்து, "யார் நீ!" என்றான்.

"உஷார், மெல்லப் பேசு. நான் ஜெனானாவைச் சேர்ந்தவள். என் பெயர் அசகாபீபி. முக்கியமான சமாசாரம்" என்று கூறி (வெல்வெட்) உருமாலையில் சுற்றிய ஏதோ ஒரு அபூர்வ வஸ்துவை உஸ்தாதின் கையில் தந்தாள்.

காசிநாதன் அதை வாங்கிப் பிரித்தான். ஒரு சின்னப் பொற்சிமிழில் அபூர்வ மணங் கமழும் வெற்றிலைக் 'கிலி' இருந்தது. "இது என்ன!" என்றான் காசிநாதன்.

"நவாப் பேகமின் நஜரானா (காணிக்கை)" என்றாள் ஜெனானாவைச் சேர்ந்த அசகா.

காசிநாதன் எதிர்பார்க்கவே இல்லை, மனத்துள் ரகசியமாக உலாவிய காதலுக்கு இவ்வாறு எதிரொலி கிடைக்குமென்று. 'கடைசியில் என் மனத்தைக் கொளுத்தும் ஒரு வெந்தழல் இன்னொரு இதயத்தையும் பற்றித் துணிச்சலான காரியத்தையும் செய்யத் தூண்டியதே' என்று எண்ணிக் கொள்ளும் போது, அவன் அங்கமெல்லாம் நடுக்குற்றது. 'இந்த ஒழுக்கம் எந்த விபரீதத்துக்குக் கொண்டு விடுமோ' என்று துணுக்குற்றுப் பணிப்பெண்ணை நோக்கி "அசகா, நவாப் பேகத்தின் அடிமை நான். அவள் என்



பாட்டை அனுபவிப்பவ ளென்று நினைத்தேன். இப்படித் தன் காதலின் குறியாக இந்தக் கையுறையை அனுப்புவாளென நான் நினைக்கவே இல்லை. நான் வெறும் பாடகன். நவாபின் பேகத்துக்குத் தகுதியற்றவன். இந்த விஷயம் வெளியே எட்டினால் எங்கள் இருவருக்கும் ஆபத்து... அசரா, இதோடு நிறுத்திக் கொள்'' என்று கையுறையைத் திருப்பி விட்டான் காசிநாதன். தொங்கிய முகத்துடன் அசரா போய் விட்டாள். அவள் சென்று சற்று நாழிகை வரை அவனுடைய உள்ளத்தின் ஏக்கம் போல் அத்தரின் நறுமணம் அந்த இடத்தில் தயங்கிக் கொண்டிருந்தது.

என்றும் போல் இளம் காசிநாதன் 'குர்னிஷ்' (தண்டம்) செய்துவிட்டு ரங்மஹாலுக்குள் நுழைந்தான். மஹாலின் இரு பக்கமும் அழகிய பூஞ்செடிகள் புல்தரைகள், மாதுளம் புதர்களில் பச்சை நிறத் தளிருக்கு இடையில் நாணிச் சிவக்கும் 'அனர் கலி' (மாதுளம் மொட்டு) காற்றில் மெதுவாக அசைந்தாடின.



நவாப் ஜனானா வாசலிலிருந்து கீழே இறங்கி ஸிம்ஹாசனத்தில் அமர்ந்ததும், காசி நாதனை அழைத்தார். உஸ்தாத் மேடை மீது தான்புராவுடன் அமர்ந்தபோது தமாஷாக நவாப் ஓமர் கய்யாமின் 'ருபாய்த்' ஒன்றைப் பாடினார்:

''சிற்றாற்றின் கரையே, நீ காணும் பசுமை யாவும் தேவ கன்னிகையின் செவ்விதழைப் பருகிய சிரிப்பு. ஜாக்கிரதை, மதி மயங்கி அப் பச்சிளம் இனிமையில் உன் காலை வைக்காதே. இந்தப் பச்சை இலைக் கொழுந்தும் மாதுளம் முகையாக முறுவலிக்கும்.''

இந்தக் கவிதையைக் கேட்டதும் காசிநாதன் மருண்டு போனான். அசரா விஷயத்தை வெளியிட்டு விட்டாளோ! ஒரு வேளை நவாப்தான் தன்னைச் சோதிக்க இவ்வாறு செய்தாரோ என்றெல்லாம் விபரீத சந்தேகங்கள் அவனுக்குப் படிப்படியாக எழுந்தன. ஆனால் சில நிமிஷங்களுக் கெல்லாம் அவனுடைய திகில் அடங்கி விட்டது. நவாபின் முகம் என்றும் போல் தெளிவாக, நிஷ்கபடமாக இருந்தது.

''ஏன் உன் முகம் இன்று வாடி இருக்கிறது, உஸ்தாத்! என்ன வேதனை, சொல்லு என்னிடம் ஒளிக்காமல். கொஞ்ச நாளாகவே உன் பாட்டில் ஏன் சோக ரஸம் அதிகமாகத் தென்படுகிறது!'' என்றான் நவாப் ஹிதபத்தான்.

''ஜஹாம்பனா, எத்தனை நாள் இப்படியே ஒருத்தனாக நான் காலம் கழிப்பேன்! இன்பம் தர ஓர் இனியாள் பக்கத்தில் இராத குறையினாலேயே எனக்குப் பிரியமான சங்கீதம் கூடச் சப்பிட்டு வருகிறது. அது அடியோடு மழுங்கிப் போனாலும் போகும்'' என்றான் இளம் பாடகன்.

நவாபின் முகம் உவப்பினால் மலர்ந்தது. பக்கத்தில் நின்ற மங்கை பச்சைக்கல் கிண்ணத்தில் ஆங்கூர ரஸத்தை மெல்ல ஊற்றவும், அதை அருந்திக் கொண்டே, ''உன் மனதைக் கவர்ந்த அந்த பாக்கியவதி யாரோ சொல்'' என்றான்.

தர்பாரில் உள்ள அத்தனை பிரமுகர்களும் என்ன பதில் வரப் போகிறதென்று ஆவலாகக் காசிநாதனையே கவனித்தனர். ''ஜஹாம்பனா, எனக்கு ஏற்ற எளிய குடும்பத்துப் பெண் அவள். இதைவிட அவளைப் பற்றிச் சொல்வதற்கு வேறொன்றுமில்லை, பட்டிக்காட்டுப் பெண். நாகரிகம் இன்னதென்பது தெரியாது அவளுக்கு'' என்றான் காசிநாதன் உணர்ச்சியோடு.

''சபாஷ்! உன் உள்ளத்தை நிரப்பிய அந்த மாதரசி உன் குரலின் வறட்சியைப் போக்கி எங்களுக் கெல்லாம் இசையின் வெள்ளத்தைக் கொண்டு வரட்டும். ரொம்ப தில்குஷான சமாசாரம். உஸ்தாத்! ஜிஞ்ஜிட் காம்பாஜ் ராகத்தில் ஒரு சின்ன உருப்படி பாடு. இந்த மாலை வேளைக்கு ஏற்ற ராகம். மனசின் வெம்மையைப் போக்கிச் சற்று குளிர்ச்சியைத் தரும். உம்'' என்றான் நவாப்,

கடல் போன்ற சபையில் மகிழ்ச்சியின் அலை பொங்கி வழியும்போது சலவைக் கல் கன்னறையின் பின் ஓர் நெஞ்சினுள் கடும் புயல் குமுறியது. ஆஸ்மான்தாராவின் பெரிய விழிகளில் மழை இறங்கியது.

காசிநாதன் அந்தத் திசையை நோக்காத போதிலும் இரண்டு கூரிய விழிகள் தன்னைச் சுட்டெரிப்பதை அவன் உணராமல் இல்லை. மருதாணியின் சாயம் தோய்ந்த சிவப்பான அழகிய விரல்கள் புலவியினால் நொடித்த 'சடசட' வென்ற ஓசை சபையில் கேட்கவில்லை தான்!

# உயர் பதவிக்கு உகந்தவன்













## ஸெவன் ஓ'க்ளாக் பிளேடுகளால் உங்களுக்கு என்ன அனுகூலம்

பணம் மிச்சமாகிறது. டீக்கான தோற்றம். க்ஷவரசுகம். பரிசுத்தத்தன்மை. வெற்றிக்கான மார்க்கம்.

தினசரி ஸெவன் ஓ'க்ளாக் பிளேடுகளால் க்ஷவரம் செய்துகொள்ளுங்கள்.

## 7 o'clock BLADES



காசிநாதனுக்கு அன்று பாட்டிலே சுவாரஸ்யம் பிறக்கவில்லை. நவாபும் அவனை வற்புறுத்தவில்லை. வெறும் தமாஷ் பேச்சில் சில நேரம் பொழுதைப் போக்கியதும் சபை கலைந்தது.

**கா**சிநாதன் மஹாலை விட்டுப் பூங்காவின் ஒரு தனி வழியாக வெளியே செல்லும்போது அசநா வழி மறித்தாள். காசிநாதன் தயங்கி நின்றான். அவனுக்கு நடுக்கம் கண்டது. துணிவை யெல்லாம் திரட்டிக்கொண்டு முடிவாக அவளிடம் கூறி விட்டான். "அசநா, விலையில்லா மாணிக்கத்தைக் காப்பாற்றக்கூடிய யோக்கியதை எளியேனை எனக்கு ஏது! நான் நவாபுக்குத் துரோகம் செய்ய மாட்டேன்" என்றதும், விழிகளில் விஷம் தெறிக்கப் பணிப் பெண், "அசட்டை செய்யாதே உஸ்தாத். ஆஸ்மான் தாரா உன்னையே நினைத்து வாடிப் போகிறாள். அவளுடைய நட்பு கிடைத்தற் கரிது. நீ யாருக்கும் அஞ்ச வேண்டாம். சம்மதம் என்று சொல்லு. உன்னை ஜெனானாவில் மறைத்துக் கொள்ளும் வழி எங்களுக்குத் தெரியும்" என்றாள்.

பாடகனுக்கு வாய் அடைத்துவிட்டது. அசநா, தன் 'ஓட்னா' மறைவிலிருந்து காசிநாதனிடம் தந்தச் செப்பினுள் உயர் மணம் கமழும் இஸ்தாம்புல் அத்தரைத் தந்தாள். ஆஸ்மான் தாராவின் இதயப் பேழையில் வெகு நாளாக மலரும் காதலின் அறிகுறியே இது எனக் கண்டான். அங்கே நின்றால் மனம் எப்படி மாறிப்போகுமோ வென்று இளம் பாடகன் அசநாவின் பிடியிலிருந்து தப்ப முடியாமல் தப்பி ஓடினான்.

ஒரு மாதம் ரங்கமஹால் வெறிச் சென்றிருந்தது. அந்தப்புரத்தில் பேகம் திடுமெனப் படுத்த படுக்கையாகக் கிடந்தாள். வைத்தியர்களுக்கு ஒன்றும் புரிய வில்லை. கடைசியில் அவளே தெளிந்து ஒரு விதமாக எழுந்து உட்கார்ந்தாள். நவாபுக்கு இவளைப் பற்றிய வேதனை இருந்தாலும் காசிநாதனின் பிரிவுதான் அவனைத் துன்புறுத்தி விட்டது. கடைசியில் மூடிய பல்லக்கில் காசிநாதன் புதிதாக மணந்த மனைவியுடன் நகர் திரும்பிய செய்தி தர்பாருக்கு வந்தது. வந்த அன்று மாலைப் பொழுதே உஸ்தாதுக்கு ரங்கமஹாலில் அமோக வரவேற்பு. பழைய தெம்பு இளம் பாடகன் முகத்தில் மீண்டும் தென்பட்டது.

நவாப் அரியணையில் அமர்ந்து தன் நண்பனைப் பார்த்து, "இனிமேல் என்ன, உன் குறை நீங்கி விட்டது. பறவையே சுகமாகப் பாடு, ஆனந்தமாய்க் கேட்கிறோம்" என்றதும், பாடகன் திவ்யமான குரலில் அபூர்வ ராகமாலிகை யொன்றை எடுத்தான். அந்த நாதக் கட்டில் சபையிலுள்ள அத்தனை பேரும் மெய்மறந்து இருந்தனர். அந்தப்புரத்துள் சாளரத்தின் ஓரமாக ஒருத்தியின் இதயம் அடித்துக் கொள்வதே நின்று விட்டது. தங்கக் கம்பி போன்ற இன்னிசை நீளும் அச்சாரீர சம்பத்தைக் கேட்ட ஆஸ்மான் தாரா நிலைத்து விட்டாள்.

இந்தத் தடவை அந்த இசை, பாடகனின் மானஸ சுந்தரியை நோக்கிப் படரும் தூபச் சுருளே யன்று; அவன் வாழ்வை விளங்க வைக்க வந்த பத்தினிப் பெண்ணைச் சுற்றி வட்டமிடும் தீபஜ்வாலையே!

இளம் உஸ்தாதுக்கு இசை வெறியை மூட்டிய இதய சுந்தரியைக் காண பேகத்துக்கு அடங்காத ஆவல். அதுமட்டு மன்று, பெண்களுக்கே உரித்தான பொறாமையும் கூட! இதற்குள் அசநா காசிநாதனுடைய மனைவியைப் பார்த்துச் சமாசாரம் கொண்டு வந்து விட்டாள் அந்தப் புரத்தினுள். நகை நட்டு இல்லாமற் போனாலும் உஸ்தாதின் மனைவி அசாதாரண அழகி யென்று எங்கும் பரவி விட்டது.

தனக்கு எவ்வளவு ஐசுவரியம் இருந்தும் என்ன; அந்த எளிய மடந்தை கொடுத்து வைத்த பாக்கியம் தனக்கு இல்லையே யென்று பொருமினாள் ஆஸ்மான்தாரா. அவள் எந்தமாதிரி அழகி என்று போய்ப் பார்க்க வேண்டு மென்ற இதயத் துடிப்பு அவளுக்கு ஏற்பட்டு விட்டது.

இளவேனில்; மரங்கள் புதுத் துளிர் விட்டுப் பூவுடன் குலுங்கின. குளிரில் ஒடுங்கி யிருந்த புட்கள் வெளியே வந்து இன்குரல் பயின்றன. உல்லாஸப் பொழுதைப் போக்க நகர வாசிகள் சோலைகளிலும், ஆற்று மணல் திடல்களிலும் விருந்துகள் நடத்தினர். இளங் காதலரின் சிரிப் பொலியும், சிறுவர்களின்கோலாகலமும் கவலையுற்றவர் உள்ளத்திலும், ஆசையின் கொழுந்தை மூட்டின. இந்த இன்ப விழாவில் காசிநாதனுடைய இல்லாளும் கலந்து கொண்டாள். திடுமென அவளுக்கு பேகமின் மோஹர் முத்திரை வைத்த நீலநிறக் கடிதம் ஒன்று வந்தது. அவள் பயந்தே போய் விட்



## The Seventh Year of Freedom

பாரத நாட்டிலே இப்போது மாபெரும் புரட்சி ஆரம்பமாகியிருக்கிறது. இந்தியா சுதந்திரம் பெற்றதுடன், அரசியல் புரட்சி முடிவடைந்து விட்டது. இப்போது கன்னியா குமரியிலிருந்து காஷ்மீரம் வரையில், ராஜஸ்தானிலிருந்து அஸ்ஸாம் வரையில் மகத்தான பொருளாதாரப் புரட்சி ஆரம்பமாகி நடந்து வருகிறது.

பாரத தேசம் சுதந்திரம் பெற்று ஏழு ஆண்டுகள் ஆகின்றன. இந்த ஏழு வருஷங்களில் பொருளாதாரப் புரட்சியின் மூலம் எந்தெந்த மாகாணங்களில் என்ன காரியங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன! ஒவ்வொரு மாகாணத்தின் நிதி நிலைமை எப்படி இருக்கிறது! முதலாவது ஐந்து வருஷத் திட்டம் எவ்வளவு தூரம் பலனைக் கொடுத்திருக்கிறது! சமுதாய நலத் திட்டங்கள் எந்த நிலைமையில் இருக்கின்றன! விவசாயத் துறையிலும் உணவு உற்பத்தியிலும் நாடு எவ்வளவு அபிவிருத்தி அடைந்திருக்கிறது! கைத்தொழில்களிலும் வர்த்தகத்திலும் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் என்ன!

பதின்மூன்று லட்சம் சதுர மைல்கள் விஸ்தீர்ணமும் முப்பத்தாறு கோடி ஜனத்தொகையும் உள்ள பிரம்மாண்டமான பாரத நாட்டைப் பற்றிக் கேட்கப்படும் மேற்படி கேள்விகளுக்கு உடனுக்குடன் விவரமாக பதில் அளிப்பதென்பது எளிதான காரியம் அல்ல. ஆனால், இந்திய தேசிய காங்கிரசின் வருஷாந்திர வெளியீடான "The Seventh Year of Freedom" என்ற நூலைக் கையில் வைத்துக் கொண்டால் இந்தியாவில் நடந்து வரும் பொருளாதாரப் புரட்சி பற்றிய எந்தக் கேள்விக்கும் சில விநாடிகளில் பதில் அளித்து விடலாம். நானூறு பக்கங்கள் கொண்ட இப்புத்தகத்தில் இந்தியாவில் உள்ள ஒவ்வொரு மாகாணத்தின் நிதி நிலைமை, ஐந்து வருஷத் திட்டம், கல்வி, விவசாயம், கைத்தொழில்கள், ஆரோக்கியம், போக்குவரத்து, பஞ்சாயத்துக்கள், நிலச் சீர்திருத்தங்கள் முதலிய எல்லா விஷயங்களும் புள்ளி விவரங்களுடன் தொகுத்துக் கொடுக்கப் பட்டிருக்கின்றன. இப் புத்தகத்தில், பாரத நாடு எங்கும் பல துறைகளிலும் ஏற்பட்டுள்ள அபிவிருத்திகளைக் காட்டும் ஏராளமான படங்களும் வெளியாகி யிருக்கின்றன.

கிடைக்குமிடம்: The Publication Department. A. I. C. C., 7, Jantar Mantar Road, New Delhi விலை ரூ. 3.

டான். பெரிய இடத்துச் சமாசார மல்லவா! தன் வீட்டுத் தூணில் அப்படியே சாய்ந்து, கைகள் நடுங்க அதைப் பிரித்துப் படித்தாள்.

'அதிர்ஷ்ட சாலியான ஸரலா பஹினுக்கு (தங்கை), நாளை நீ அளிக்க இருக்கும் வன விருந்தில் கலந்து கொள்ள வருவேன். நாம் இருவரும் அளவளாவ இதுவே தகுந்த சந்தர்ப்பம். இப்படிக்கு நிர்பாக்யவதி பேகம் ஆஸ்மான்தாரா' என்று எழுதி இருந்தது.

இதென்ன வேடிக்கை, ஒரு பெரிய நவாபின் பேகம் சாதாரண நாட்டுப்புறப் பெண்ணோடு உறவு கொண்டாடுவது அதிசயமா யிருக்கிறதே! பாடகன் மனைவிக்கு என்ன செய்வதென்று ஒன்றுமே புரியவில்லை. மூடி வைக்கும் விஷயமா இது கணவனிடம் நடந்ததைச் சொன்னாள். எங்கோ மனம் சுழலப் பெருமூச்சுடன் காசிநாதன் சிறிது தயங்கி, "உன் கடமையைச் செய்" என்றான்.

ஆற்றங்கரை யோரமாக அடர்ந்த மகிழ மரத் தோப்பினுள் வன விருந்து ஏற்பாடாகி யிருந்தது. பாடகனுடைய பத்தினி சாதாரண உடை அணிந்து, சித்திரான்னங்களை ஆக்குவதில் ஈடுபட்டிருக்கையில், பேகம் சொல் தவறாமல் தந்தச் சிவிகையில் வந்து இறங்கினாள். ஒரு மரத்தின் கீழ் 'ஜாஜிமை'ப் (கம்பளம்) பிரித்து அதன்மேல் உட்கார்ந்தாள். காசிநாதனுடைய மனைவி ஸரலா வேலை செய்வதைக் கண் கொட்டாமல் கவனித்தாள். 'அவளுக்கு எந்த மூலை நான்!' என்று தன்னை ஒப்பிட்டு நோக்கும் பொறாமையின் ஜ்வாலை அவள் உள்ளத்துள் எழுந்தது. ஆனால் அடக்கிக் கொண்டாள்.

நடுநடுவே ஆஸ்மான்தாராவைப் பார்த்து ஸரலாவும் சிரிப்பாள். நெற்றியில் முத்து முத்தாகத் துளிக்கும் வேர்வையை முன்தானையினால் துடைத்துக் கொண்டே சிற்றுண்டி வகைகளைத் தட்டில் எடுத்து அடுக்கிக் கொண்டிருந்தாள்.

"போதுமே பஹின், நாம் இருவரும் ஆற்றில் குடைந்து நீராடுவோம் வா" என்றாள் பேகம்.

"ஐயோ! அங்கே அத்தனை மனிதர்கள் எதிரிலா!" என்றாள் ஸரலா.

"காவல் பெண்கள் இருக்கின்றனர்—யாரும் வரமாட்டார்கள்" என்றாள் ஆஸ்மான்தாரா.

குளித்தவுடன் வேறு ஆடை மாற்றிக் கொள்வதற்கு அந்த எளிய குலத்து மடந்தை சம்பக வர்ண நூல் சேலையையும் அதற்கு ஏற்ற செவ்வந்திப் பூ நிற ரவிக்கையையும் எடுத்துக் கொண்டு கிளம்பினாள். ஒரு 'பாந்தி' (அடிமை) பேகமின் பட்டுப் பேஷ்வாஜ், நகைகள் எல்லாவற்றையும் ஏந்திவர, பேகமும் நகர்ந்தாள்.

இருவரும் படித்துறையை விட்டு இறங்கி அடிவரை மணல் தெரியும் ஆற்றின் குளிர்ந்த நீரில் வெகு நேரம் குதூகலமாகக் குதித்து நீந்தி விளையாடினர். மெல்லிய உள் நடை யெல்லாம் நீர் தோய்ந்து அழகான உடல் அமைப்பை வெளிப்படுத்தும் ஸரலாவின் தோற்றம் பேகத்தை என்னவோ செய்து விட்டது. சட்டெனப் படிகள் ஏறி, ஸரலாவின் எளிய சேலையைத் தன் உடலில் சுற்றிக் கொண்டு சிரிப்பும் வேதனையும் கலக்கும் குரலில், "இந்தப் புடவையில் நான் எப்படித் தோன்றுகிறேன், ஸரலா!" என்று கேட்டாள் ஆஸ்மான்தாரா.

"ஐயோ, இதை அணிய வேண்டிய தலையெழுத்து உங்களுக்கு என்ன!" என்றாள் ஸரலா.

நவாபின் மகிஷி, வறட்டுச் சிரிப்புடன், "இந்த மட்டரகப் புடவைக்கு உள்ள அழகு பட்டு பேஷ்வாஜுக்கு இல்லை. இந்தப் புஷ்பமாலைக்கு உள்ள வாசனை கல்லிழைத்த நகைக்கு எங்கேயாவது வருமா! ஐச்வரியம் நிறைந்த ஆஸ்மான்தாரா வீற்றிருந்த மனப்பீடத்தில் இந்த அழகிய முல்லை மலர் அல்லவோ இடம் கொண்டது!" என்றாள்.

"நீங்கள் இப்படி வருத்தப்பட வேண்டிய காரணம் ஒன்றும் எனக்குத் தெரியவில்லையே!" என்றாள், ஒன்று மறியாத ஸரலா.

மை தீட்டிய கருவிழிகளில் கண்ணீர் ததும்ப நவாபின் பேகம், "மருதாணியின் இலை பார்வைக்குப் பச்சென்றுதான் இருக்கும்; ஆனால் அதனுள் ஊறும் ரத்தச்சிவப்பான ரஸம் யார் கண்ணில் படுகிறது!" என்ற ஹாபீஸின் 'ருபாய்ய'த்தைப் பாடி விட்டு முகத்தை மூடிக் கொண்டாள்.

Edited Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, No. 20. Dr. Guruswamy Mudaliar Road. Kilpauk. Madras-10










# லைப்பாய்
# சோப்

தினசரித்தொல்லையான
அழுக்கிலிருக்கும் கிருமி
களிலிருந்து உங்களைப்
பாதுகாக்கிறது.



**REGISTERED NO. M. 4392**

*Registered as a newspaper in Ceylon*